ஸித்தியில் ஏற்படுமென்றால் நிஜமான யோகி எவரும் அதன் கிட்டேயே போயிருக்கமாட்டார்கள்! அவர்கள் யோகம் பண்ணுவது பேரின்பத்திற்காக அல்லவா? அதிலே அத்வைத ஸித்திக்கு முந்தினபடியான ஆனந்தத்தைத் தருவதே ஸஹஸ்ராராம்ருதம். சரீரம் உள்ளமட்டும் அதை நல்ல பலத்தோடு, காந்தியோடு, நோய் நொடி இல்லாமல் ரக்ஷிக்கிற சக்தியும் அதற்கு உண்டானாலும், அதைவிட முக்யமாக திவ்யானந்தத்தைப் பொழிகிறதற்கே அது ஏற்பட்டது. ஞானி சரீரத்தையும் லோகத்தையும் மாயை என்று அடியோடு நிராகரணம் பண்ணுவது போல சாக்த யோகி பண்ணமாட்டான்; அம்பாள் லீலை, அவளுடைய சக்தி விலாஸம் என்று பார்ப்பான். அதனால் அவன் இஷ்டப்படுகிறவரை சரீரத்திலே இருந்துகொண்டு லீலையைப் பார்க்கும் சக்தியையும் இந்த அம்ருதம் தரும். இருந்தாலும் முன்னூறோ, முப்பதாயிரமோ, முப்பது லக்ஷமோ வருஷம் ஆன அப்புறம் அவனுக்கும் அத்வைத ஆசை வந்து ஐக்கியமாகிவிட வேண்டுமென்று தோன்றும். அப்போது சரீரமும் போய்விடும்.

நல்ல பாம்பு, கெட்ட பாம்பு, இரண்டு சொன்னேன். ஒன்று அம்ருதப் பாம்பு, மற்றது விஷப் பாம்பு. விஷப்பாம்பைத்தான் ஸுப்ரம்ஹண்ய ஸ்வாமியின் மயிலும், மஹாவிஷ்ணுவின் கருடனும் அழிப்பது. அம்ருதப் பாம்பாக ஸுப்ரஹ்மண்யரே இருக்கும் போதுதான் நாகராஜா என்கிறோம். அதைத்தான் ஆதிசேஷ பர்யங்கமாக மஹா விஷ்ணு வைத்துக் கொண்டிருக்கிறார். அந்த சேஷனேதான் நடராஜாவின் குஞ்சித பாதத்தில் சுற்றிக் கொண்டிருப்பது; அதோடு அவருடைய பரம பக்தரான பதஞ்ஜலியாக வந்து யோக சாஸ்திரம் கொடுத்தது. அவர் குண்டலிநீ யோகத்தைக் குறிப்பிட்டுச் சொல்லாவிட்டாலும், யோகத்தினாலே எழும்பும் குண்டலிநீயும் ஸர்ப்பமாகவே இருக்கிறது!

மயில், கருடன் மாதிரி பாம்புக்கு இன்னொரு ஜன்ம சத்ரு கீரிப்பிள்ளை. அதற்கு நகுலம் என்று பேர். நகுலேச்வரி என்று அம்பாளுக்கு ஒரு ரூபம் உண்டு. மஹாராணியாகிய லலிதாம்பாளுக்கு மந்த்ரியாயிருக்கும் மந்த்ரிணி என்கிற ச்யாமளாம்பாளின் ஒரு பேர் அது. மாதங்கி என்பதும் அவளைத்தான். மந்த்ரி என்றாலும், அந்த ராணியம்மாள் இவளுக்குத் தன்னுடைய அதிகாரம், சக்திகள் அவ்வளவையும் கொடுத்திருக்கிறாள். ''நான் பக்தாநுக்ரஹம் மட்டும் என் போர்ட்ஃபோலியோவாக வைத்துக் கொள்கிறேன். நீயே ஹோம் மினிஸ்டராக என் த்ரைலோக்ய (மூவுலக) ராஜ்யத்தை நிர்வாஹம் பண்ணிகொண்டிரு'' என்றுகூட அப்பப்போ இவளிடமே அதிகாரம் முழுதையும் அவள் கொடுத்துவிடுவதுண்டு - ''மந்த்ரிணீ ந்யஸ்த ராஜ்யதூ:'' (ராஜ்யபாரத்தை மந்த்ரிணியிடம் ஒப்படைத்தவள்) என்றே இதனால் அவளுக்கு (லலிதா ஸஹஸ்ரநாமத்தில்) ஒரு பெயர் சொல்லியிருக்கிறது. ராஜமாதங்கி என்றே அந்த மாதங்கியைச் சொல்வது. மதுரையில் மீநாம்பிகையாக இருப்பவள் அவள்தான். அவளைத்தானே அங்கே ஆட்சியதிகாரம் செலுத்தும் ராணியாகவும் சொல்கிறோம்? அவளைத்தான் கீரிப்பிள்ளையம்பாளான நகுலேச்வரியாகவும் சொல்வது என்றால் வேடிக்கையாக இருக்கிறது! மூலாதாரத்தில் அநாத்ம ப்ரவ்ருத்தியோடு உள்ள குண்டலிநீ ஸர்ப்பத்திற்கு அவள் சத்ருவாக இருந்து நமக்கு ஆத்ம ஸம்பத்தை அநுக்ரஹிக்கிறாள் என்பதால்தான் அப்படிச் சொல்வது.

மூலாதாரத்திற்கே குலம் என்று ஒரு பெயர் ''குலகுண்டே ஸ்வபிஷி'' - 'ஆத்மலோகம் தெரியாமல் மூலாதார குண்டத்தில் தூங்கிக் கொண்டிருக்கிறாய்' - என்று இந்த ஸௌந்தர்ய லஹரியிலேயே ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். அந்த ஸ்திதிக்கு ஆப்போஸிட்டாக ஆத்ம விகாஸம் (மலர்ச்சி) தருபவள் நகுலி. 'குல'த்திற்கு ஆப்போஸிட் 'ந குலம்' (குலம் இல்லை.) ஆகையால் அப்படி!.....

கருடன், மயில் கீரிப்பிள்ளை என்று ஸர்ப்ப சத்ருவாக மூன்று இருப்பதில் கருடனைக் குறிப்பிடுவதில் விசேஷம் உண்டு. ஏனென்றால் கருடன்தான் விஷப் பாம்பைக் கொல்பவராக மட்டுமில்லாமல் அம்ருதத்தை எடுத்துக் கொண்டு வந்தவராகவும் இருப்பவர். ஸர்ப்பங்களுக்குத் தாயார் அவருக்கு மாற்றாந்தாய். அவள் இவருடைய ஸொந்தத் தாயாரை அடிமைப்படுத்தி வைத்திருந்தாள். தாயாரை விடுதலை பண்ணும்படி கருடன் மாற்றாந்தாயாரை ரொம்பவும் கேட்டுக் கொண்டார். 'தேவலோகத்திலிருந்து நீ அம்ருதம் கொண்டுவந்து என் குழந்தைகளுக்கு (அதாவது ஸர்ப்பங்களுக்கு) கொடுத்ததால்தான் உன் தாயாரை விடுவிப்பேன்'' என்று அவள் நிபந்தனை போட்டாள். அவரும் தேவலோகம் போய் தேவேந்திரனோடேயே சண்டை போட்டு ஜயித்து அம்ருத கலசத்தைத் தூக்கிக்கொண்டு ஓடி வந்துவிட்டார். ஆனாலும் முடிவில் அதை ஸர்ப்பங்கள் சாப்பிட முடியாமலே ஆனதாகக் கதை. ஸர்ப்பங்களைத்தான் இவர் சாப்பிடுவதாக ஆயிற்று! அம்ருத ஸம்பந்தம் அவருக்கு உண்டு என்பதற்காகச் சொன்னேன். ஆண்டாளுடைய அவதார ஸ்தலமான ஸ்ரீ வில்லிப்புத்தூரில் கருடனுக்கு வேண்டிக்கொண்டு ''அம்ருத கலசம்'' என்றே ஸுய்யன் (சுகியன்) மாதிரி ஒரு பக்ஷணம் நைவேத்யம் செய்கிறார்கள். அந்த பக்ஷணத்தில் மேல் சொப்பு கலசம் என்றும், உள்ளேயிருக்கும் பூர்ணம் அம்ருதம் என்றும் வைத்துக்கொள்ள வேண்டும்.

மோதகத்தில்கூட இதே தத்வந்தான். விக்நேச்வரர் அம்ருத கும்பம் வைத்துக் கொண்டிருக்கிறார்; ரத்ன கலசம் வைத்துக் கொண்டிருக்கிறார்; மாதுளம் பழம் வைத்துக் கொண்டிருக்கிறார்; மோதகம் வைத்துக்கொண்டிருக்கிறார் என்று பலதினுஸாகச் சொல்லியிருக்கிறது. இவற்றிலே கலசத்திற்குள் ரத்னம் இருப்பதேதான் மாதுளை ஓட்டிற்குள் ரத்னம் பதித்தாற்போல் முத்துக்கள் இருப்பது! கலசம், அதற்குள் அம்ருதம் என்பதற்குப் பதில்தான் மோதகத்தின் மேல் சொப்பும் உள்ளே பூர்ணமும் - ஸ்ரீ வில்லிப்புத்தூரில் கருடாழ்வாருக்கு முக்யத்வம் ஜாஸ்தி. மற்ற எல்லா ஊரிலேயும் பெருமாளுக்கு எதிரே கருடன் இருப்பாரென்றால் இங்கே மாத்திரம் பெருமாளுக்குப் பக்கத்திலேயே மூல ஸ்தானத்தில் அவர் இருப்பார்! ஒரு பக்கம் ஆண்டாளும், இன்னொரு பக்கம் கருடனுமாக அங்கே பெருமாள் இருப்பார். என்ன காரணமென்றால் - ஸ்ரீரங்கத்தில் ஆண்டாளை ஸ்ரீரங்கநாதர் அப்படியே ஐக்கியம் பண்ணிக்கொண்டுவிட்டார். இப்போது பெரியாழ்வார், ''எனக்கு வளர்ப்புப் பெண்ணாக இப்படி ஒரு உத்கிருஷ்டமான ஜீவனைக் கொடுத்துவிட்டு, நான் கண்ணை மூடும் முன்னாலேயே இப்படி அவளைப் பறித்துக்கொண்டு என்னை நீ கொடுமைப்படுத்தலாமா?'' என்று பெருமாளிடம் அழுதார். உடனே பெருமாள், ''அழாதேப்பா! நான் அவளோடு உன் ஸ்ரீ வில்லிப்புத்தூருக்கே வந்து, யதோக்தமாகக் கல்யாணம் பண்ணிக்கொண்டு அங்கேயே நித்யவாஸம் பண்ணுகிறேன்'' என்று

வாக்குக் கொடுத்தார். அப்போது கருடாழ்வார்தான் கண் மூடித் திறப்பதற்குள் அவர்களை ஸ்ரீ வில்லிப்புத்தூருக்குத் தூக்கிக் கொண்டுவந்து சேர்த்தது. அதை மெச்சித்தான் அவரையும் பெருமாள் ஆண்டாளுக்கு ஸமதையாகப் பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருப்பது. பெரியாழ்வாரே கருடாம்சம் என்பார்கள்.

கருடன் அம்ருத ஸம்பந்தமுள்ளவர்; விஷ பாதையை நிவிருத்தி செய்கிறவர். அம்பாளை அம்ருத கிரணம் பரப்புகிற சந்திரகாந்த சிலா ரூபத்தில் த்யானிப்பவன் கருடனைப் போல ஸர்ப்பத்தின் கொழுப்பை, அதாவது விஷ வீர்யத்தை, அடக்கி அழித்துவிடுகிறான் என்று ஆசார்யாள் சொல்கிறார்: ''ஸ ஸர்பாணாம் தர்பம் சமயதி சகுந்தாதிப இவ'' 'சகுந்த அதிப என்றால் பக்ஷிகளுக்கு ராஜாவாக இருக்கப்பட்ட கருடன் ''சகுந்தம்' என்றால் பக்ஷி. மேனகை பெற்றுப் போட்டுவிட்டுப் போன குழந்தையைப் பக்ஷி வளர்த்ததாலேயே அவளுக்கு 'சகுந்தலை' என்று பெயர். பக்ஷிராஜன் என்று ஐயங்கார்களில் பெயர் வைத்துக் கொள்வது கருடனின் பெயர்தான். 'பெரிய திருவடி' என்பார்கள். ஆனால் பெயர் வைத்துக் கொள்ளும்போது பெரிய திருவடி என்றோ, கருடன் என்றோ வைத்துக்கொள்வதில்லை; 'பக்ஷிராஜன்'தான் 'கருடாச்சார்' என்று மாத்வர்கள்தான்தான் வைத்துக்கொள்வது.

இந்த ச்லோக ஜபத்தினால் இரண்டு ரோகங்களுக்கு நிவிருத்தி. ஒன்று விஷக்கடி. விஷ ஜ்வரம் - virus fever - என்பதையும் அதிலேயே சேர்த்துக்கொள்ளலாம். அதுவும் உள்ளே விஷ க்ருமி பரவுவதுதானே?

இன்னொன்று, பொதுவாக உண்டாகிறதாப ஜ்வரம் இங்கே சொன்னாற்போல ஒருத்தன் அம்ருத கிரண வர்ஷிணியாக அம்பாளை த்யானித்துக்கொண்டே இருந்தானானால் அவனுக்கே அம்ருத நாடி என்று ஒன்று உண்டாகிவிடும். அல்லது ஸஹஸ்ராராம்ருதம் அவனுடைய நாடிகளிலே பாயும் என்று வைத்துக் கொள்ளலாம். அம்ருத நாடி ஓடுகிற தன்னுடைய கண்ணால் அவன் ஒரு தாபஜ்வரக்காரனைப் பார்த்தாலே போதும், வேறே ஒன்றும் பண்ணவேண்டியதில்லை; ஜ்வர ப்லுஷ்டாந் த்ருஷ்ட்யா ஸுகயதி ஸுதாதார ஸிரயா.

வாக்தேவதைகளும் சந்த்ர காந்த ஸ்படிகம் மாதிரி இருப்பவர்கள். இங்கே சொல்கிற அம்பாள் (ஜ்வரஹரேச்வரர் என்று சில இடங்களில் ஸ்வாமி இருக்கிற மாதிரி, இவளை ஜ்வரஹரேச்வரி என்று சொல்லலாம்! இவளும்) அதே ஸ்படிக வர்ணம் என்று சொல்வதில் ஒரு பொருத்தம் தெரிகிறது. என்னவென்றால் அந்த வாக்தேவதைகள் எட்டுப் பேரும் (ஸ்ரீசக்ரத்தில்) உட்கார்ந்திருக்கும் எண் கோணத்திற்கே 'ஸர்வ ரோக ஹர சக்ரம்' என்றுதான் பெயர். மந்த்ர சப்தங்களால் எந்த ரோகமானாலும் பறந்துபோய்விடும் என்று தெரிவிப்பதாக இப்படிப் பெயரிருக்கிறது.

## சிவப்பின் சிறப்பு; வசீகர'த்தின் உட்பொருள்

ஸ்படிக வர்ண அம்பாளை இங்கே சொன்னாலும், ஸ்ரீவித்யா தேவதை என்றால் சிவப்புதான். சிவப்புதான் அவளுடைய சிறப்பு. ஸூர்யோதமாகிறபோது ஆகாசம் பூரா சிவப்பு பரவுகிறதல்லவா? ஆகாசம் மட்டுமில்லாமல் ஆகாசத்திலிருந்து பூமி வரை

ஸமஸ்த ப்ரபஞ்சத்தையும் அம்பாளுடைய தேஹ காந்தி செக்கச் செவேலென்று நிரப்பி முழுகப் பண்ணிக் கொண்டிருப்பதாக ஒருத்தன் தியானம் செய்வானானால் அவனுக்கு ரொம்பவும் வசீகர சக்தி உண்டாகும் என்று இரண்டு ச்லோகத்திற்கு முந்தி சொல்லியிருக்கிறார். 'இந்த 'வசீகர' ஸமாசாரங்கள் நம்மை வசீகரிக்க வேண்டாம் ! அது தப்பர்த்தத்திற்கு இடம் கொடுக்கும்' என்றுதான் 'ஹை ஜம்ப்' பண்ணிக்கொண்டு பின் ச்லோகத்திற்கு வந்தேன். ஆனாலும் அந்தச் சிவப்பின் சிறப்பைச் சொல்லணும், வசீகரம் என்பதன் உள்ளர்த்தத்தையும் தெரிவித்துவிட்டால் நல்லதென்று இப்போது தோன்றுவதால் அந்த ச்லோகத்திற்குத் (ச்லோ-18) திரும்பியிருக்கிறேன்.

ஸௌந்தர்ய லஹரியிலும், இதுபோன்ற மற்ற சாக்த ஸ்தோத்ரங்களிலும் சாஸ்திரங்களிலும் வசீகரம், ஸ்த்ரீ வச்யம், மன்மதாகாரமான சரீர ப்ராப்தி என்று சொல்லியிருப்பதையெல்லாம் 'லிடர'லாக அர்த்தம் பண்ணிக்கொண்டால் (நேர்ப் பதப்பொருள் கொண்டால்) அனர்த்தந்தான் ! இவன் மற்றவர்களை வசீகரிக்கிறான் என்றால் வாஸ்தவத்தில் என்ன ஆகும்? அவற்றுக்கு இவன் வச்யமாயிருக்கிறான் என்றுதான் ஆகும்? அதனால்தான் அவற்றைத் தான் பிடித்துக் கொள்ள வேண்டுமென்று வச்ய மந்த்ரம் பண்ணுகிறான் ! பணம், வீடு, நிலம் என்று ஒருவன் நிறைய உடைமையைச் சேர்த்துக் கொள்கிறானென்றால், வாஸ்தவத்தில் இவன்தான் அவற்றின் உடைமையாக அவற்றுக்கு அடிமையாக இருக்கிறானென்று அர்த்தம். அவற்றை விட்டு விடுவதென்றால் இவன் தவியாகத் தவிக்கிறானென்றால் வேறே என்ன அர்த்தம்? அப்படித்தான் இதுவும் ! 'வச்யம் பண்ணுகிறான்' என்றால் 'இவனே வச்யமாகிறான்', 'அந்த ஆசைக்கு இவன் அடிமையாக இருந்து அதன் வசப்பட்டு நிற்கிறான்' என்று அர்த்தம். இப்படியானால் அப்புறம் அம்பாளை அம்பாளுக்காகவே நினைப்பது, ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்காக நினைப்பது என்பதற்கெல்லாம் நன்றாக வழியை அடைத்தாயிற்று என்றுதான் ஆகும். அப்படி ஆவதற்கு எங்கேயாவது ஆசார்யாளும், இன்னும் இந்த மாதிரி சொல்லியிருக்கிற மற்ற பெரியவர்களும், மந்த்ர சாஸ்திர ரிஷிகளும் வழி சொல்லிக் கொடுப்பார்களா? அம்பாள் உபாஸகனுடைய மனநிலையைப் பற்றி ஆசார்யாள் சொல்லும்போது ''ம்ருதித மல மாயேந மநஸா'' என்கிறார். அப்படியென்றால் அந்த மனஸ் எல்லா அழுக்கு எண்ணங்களையும், ஆசைகளையும், மூல மாயையுமே நசுக்கித் துகைத்துப் போட்டுவிட்டது என்று அர்த்தம். அம்பாளை உபாஸிப்பவன் காளிங்க மர்தனம் மாதிரி மல மாயா மர்தனம் பண்ணினவனாக இருப்பான். அவனைக் கீழ்த்தர வச்யங்களளோடு சேர்த்துப் பேசுவது நியாயமே ஆகாது. அதனால் இப்படிச் சொல்வதற்கு அர்த்தம், (குறிப்பிட்ட ஸாதகன்) தான் எதற்கும் வச்யமாகாமல் தன்னுடைய மனஸை அடக்கி வசப்படுத்தியிருப்பான் என்பதாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். இவன் எதை வசப்படுத்துகிறான் என்ற சொல்லியிருக்கிறதோ அது இவனுக்குள்ளே ஆகர்ஷிக்கப்பட்டு அப்படியே லயமாகிவிட்டதென்று அர்த்தம். ''ஸமுத்ரம் ஆப: ப்ரவிசந்தி யத்வத் தத்வத் காமா: ப்ரவிசந்தி ஸர்வே'' என்று பகவான் சொன்னாற் போல, - ஒரு ஸமுத்ரத்திற்குள் அத்தனை நதிகளும் இழுபட்டு, வச்யமானபின் - வச்யமாவது என்றால் அது (இழுபடுவது) தானே அர்த்தம்? அப்படி நதிகளெல்லாம் ஸமுத்ரத்திற்குள் இழுபட்ட அப்புறம் - அவை வேறே, தான் வேறே என்று ஸமுத்ரந்தான் அவற்றோடு உறவாட முடியுமா? அப்படியே அவை அத்வைதமாகி, ''சாந்திம் ஆப்நோதி'' என்று பரம சாந்தமாகத்தானே

அடங்குகின்றன? அப்படித்தான் ஞானிக்குள்ளேயே அத்தனை காமங்களும் வந்து விழுந்து, அப்புறம் ஆசைப்படும்படியான வெளி வஸ்துவாக இல்லாமல், ஆசை அழிந்து போன நிலையில் அவனே ஆகிவிடுகின்றன. வெளி வஸ்து என்று த்வைதமாக உள்ள மட்டும் ஆசையைத் தூண்டுகிறவற்றைத் தனக்குள்ளேயே அத்வைதமாகிக் கொள்வதைத்தான் 'வச்யம்', 'வச்யம்' என்று figurative - ஆகச் சொல்வது. தானாகவே ஆக்கிக் கொண்டுவிட்டால் அப்புறம் எப்படி அது ஒரு ஆப்ஜெக்டாக இருந்துகொண்டு ஆசையைத் தூண்ட முடியும்? த்ரிலோகங்களுமே ஒரு ஸ்த்ரீயாகி அவனிடம் வசியமாகிவிடுகிறது என்றால், (ச்லோ-19) அவன் தனக்கு ப்ரபஞ்சமே அன்யமில்லாமல் உள்ளேயுள்ள வஸ்துதான் என்று அறிந்து ஞானியாகிவிட்டானென்றே அர்த்தம். இவனே மன்மதன் மாதிரி ஆகிவிட்டால் மன்மதன் எப்படி இவனைக் காமத்தில் தள்ளி ஜயிக்க முடியும்? (ச்லோ-99) ஆகையால் மன்மதாகாரமான சரீரம் பெறுகிறானென்றால் காம ஜயம் பண்ணிவிடுகிறானென்றே அர்த்தம் புரிந்துகொள்ள வேண்டும்.

பரமேச்வரனை ஸ்ருஷ்டியில் திருப்பிவிட்டுக் கொண்டும் ஜீவலோகத்தை ஸ்ருஷ்டியிலிருந்து மோக்ஷத்திற்குத் திருப்பி விட்டுக்கொண்டும் இருப்பவள் அம்பாள். அவளை ஜ்யோதிச் சிவப்பாக ஸ்ரீவித்யையில் சொல்லியிருக்கிறது. பார்வதி பச்சை. கௌரி வெள்ளை; பீத வர்ணம் (மஞ்சள்) என்றும் சொல்வதுண்டு. காளி கறுப்பு. துர்காம்பாள் நீலம். நம்முடைய காமேச்வரி அருணோதயச் சிவப்பு.

இந்த சிவப்புக்கு என்ன சிறப்பு என்றால், இது ஃபிஸிக்ஸில் வரும் ஒளிக்கொள்கை மூலம் சிவ-சக்திகள் ஜகத் ஸ்ருஷ்டி பண்ணுவதையும், அதன் மறுபக்கமாக, ஸம்ஹார க்ரமத்தில் ஜகத்திலுள்ள ஜீவர்கள் ஸ்ருஷ்டியைக் கடந்து ஸாயுஜ்யம் அடைவதையும் காட்டுவதுதான்.

ஒரு கலரிலும் சேராத வெள்ளையான ஸூர்ய ஒளியிலிருந்து சிவப்பு முதலில் பிரிந்தாலே அப்புறம் VIBGYOR என்ற ஸப்த வர்ணங்களில் பாக்கியுள்ள ஆறும் வெளிப்படும். V-I-B-G-Y-O-R ஏழு எழுத்தில் முடிவிலிருந்து வர்ணங்கள் ஆரம்பித்து வெளிப்படும். கடைசியில் வரும் R தான் Red-தான் சிவப்பு. இது முதலில் பிரிந்தால் அதைத் தொடர்ந்து ஆரஞ்ஜு (O), யெல்லோ (Y), க்ரீன் (G), ப்ளு (B), இன்டிகோ (I), இன்டிகோ என்பது கறுத்த நீலம் -, வயலெட் (V), இத்தனையும் வெளிப்படும். R-க்கு இந்தண்டைக் கோடியில் எந்தக் கலரிலும் சேராத வெள்ளை இருக்கிறாற்போல, V.க்கு அந்தண்டைக் கோடியில் எந்தக் கலரியிலும் சேராத கறுப்பு இருக்கிறது.

வெள்ளையையும், கறுப்பையும் ஏன் கலரில் சேர்க்கவில்லையென்றால் : நாம் பல கலர்களிலுள்ள பல வஸ்துக்களைப் பார்க்கிறோம். அவற்றில் ஒன்று பச்சையாயிருக்கிறது, இன்னொன்று நீலமாயிருக்கிறது என்பது ஏன் என்றால், பச்சையாகத் தெரியும் வஸ்து 'லைட் - வேவ்'களில் (ஒளியலைகளில்) பச்சையைத் தவிரப் பாக்கி எல்லாக்கலர்களையும் தனக்குள்ளே பிடித்து அடைத்துக்கொண்டு பச்சையை மாத்திரம் வெளியிலே விடுவதால்தான்; நீலமாக உள்ள வஸ்து நீலத்தை மாத்திரம் வெளியிலே விட்டு பாக்கிக் கலர்களை உள்ளே பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறது. மற்ற கலர்களும் இப்படியே. இப்படி எங்கேயும் பரவியிருக்கும் லைட் வேவ்களில் ஒரு தினுஸானதை மட்டும் வெளிவிடுகிறது - reflect பண்ணுவது -, பாக்கி எல்லாவற்றையும் உள்ளே பிடித்து வைத்துக் கொள்வது - அதாவது absorb பண்ணிக் கொள்வது என்பதாக

இரட்டைக் கார்யங்கள் நடைபெற்று அப்போது வெளியாவதைத்தான் கலர், கலர் என்பது. ஒரு வஸ்து வெள்ளையாக இருக்கிறபோதோ அது ஒன்றையுமே உள்ளே பிடித்து வைத்துக் கொள்ளாமல் லைட் வேவை அப்படியே முழுக்க வெளியில் விட்டுவிடுகிறது. வெளிவிட்ட அத்தனை கலர்களும் சேர்ந்தே வெள்ளையாகிறது. Reflection, absorption என்ற இரண்டில் (reflection எனும்) ஒன்று மட்டுமே இங்கே இருப்பதால்தான் அதைக் கலரில் சேர்க்கவில்லை, கறுப்பின் ஸமாசாரம் என்னவென்றால், அங்கே அந்தக் கறுப்பு வஸ்து லைட் வேவை முழுக்க absorb பண்ணிக்கொண்டு, அதாவது கலர் என்று நாம் சொல்லும் எல்லாவற்றையும் உள்ளே ஜீர்ணித்துக்கொண்டு எதையுமே reflect பண்ணாமலிருக்கிறது. இங்கேயும் ஒரு பாதி மட்டும் நடப்பதால் அதைக் கலரில் சேர்க்கவில்லை.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களில், தனக்கென்று எதையும் உள்ளே பிடித்து வைத்துக்கொள்ளாமல் எல்லாவற்றையும் வெளியிலே விட்டுவிட்டு, பார்க்கவே சுத்தமாக, ப்ரகாசமாக இருக்கிற வெளுப்புதான் 'ஸத்வம்'. அது பரமஞான ஸ்வரூபத்திற்கு, பரப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு அடையாளமாக இருப்பது. தனக்கென்றே எல்லாவற்றையும் பிடித்து வைத்துக்கொண்டு இருட்டாக இருக்கிற கறுப்பு 'தமஸ்', அதாவது பூர்ண அஞ்ஞானம். சிவப்பு 'ரஜஸ்' - அதாவது க்ரியா சக்தி. ப்ரஹ்மத்தை ஜீவனாகப் பண்ணுகிற க்ரியை, ஜீவனை ப்ரஹ்மத்திற்குள் அனுப்பி வைக்கிற க்ரியை இரண்டுக்கும் சக்தி. க்ரியையே இல்லாத சுத்த சிவ ஞான வெளுப்பு ஸ்வரூபத்திலிருந்து பராசக்தி என்ற முதல் எண்ண க்ரியை முளைத்து காமேச்வரியாகச் செக்கச் செவேலென்று நின்றவுடனே அதைத் தொடர்ந்து, அஞ்ஞான தமஸ் வரையில் கொண்டு சேர்ப்பதான ஸ்ருஷ்டி க்ரமமும் ஆரம்பித்துவிடுகிறது. V, I, B, G, Y, O, R என்ற ஏழு கலரும் ஸ்ருஷ்டியின் வைசித்ரியத்தை, variety - ஐக் காட்டும் படிவரிசையே. அத்தனை கலரும் சேர்ந்தால் வெளுப்பாகிவிடும். இத்தனை ப்ரபஞ்சமும் ஒரே சுத்த ப்ரஹ்மத்திலிருந்து வந்ததுதான்; அதுவாகவே போய் முடிவதுதான்! இத்தனையையும் அதிலிருந்து வரப்பண்ணுவதற்கு ஆதி காரணம் வெள்ளை ப்ரஹ்மத்திலிருந்து முதலில் வெளிப்பட்ட சிவப்புக் காமேச்வரிதான் என்பதாலேயே அவளுடைய சிவப்புக்குச் சிறப்பு. இதையே திருப்பி வைத்தால், தமஸில் கறுத்துக் கிட்டித்துக் கிடக்கிற நாம் அந்த வெள்ளையில் கரைந்து போவதற்கும் அந்தச் சிவப்புக்காரிதான் வழி பண்ணித் தருவது.

சேருகிறது, ஐக்யமாகிறது என்பதாக அன்பில் உண்டாகும் பரமானந்தம் பிரிந்திருந்தால்தான் உண்டாக முடியும்! பிரிந்திருந்தால்தானே அப்புறம் ஒன்றாகச் சேர முடியும்? பிரியாமலே ஏகமாக இருந்து கொண்டிருந்தால் சேரும் இன்பம் எப்படிக் கிடைக்க முடியும்? அதற்காகத்தான் மூல தத்வம் சிவன் - சக்தி என்று பிரிந்து அப்புறம் காமேச்வர - காமேச்வரி தம்பதியாகவும், அப்புறம் ஸ்ருஷ்டியிலே அந்த மூல தத்வமே தனக்குக் குழந்தைகளான ஜீவர்களாகவும் பிரிந்தது. இப்படிப் பார்க்கும்போது அன்பை அநுபவிப்பதற்காகத்தான் மூல வெளுப்பு சிவப்பாக ஆனது என்று தெரிகிறது. அதனால்தான் அன்பு, அதிலே, குறிப்பாக ச்ருங்கார அன்பு ஆகியற்றைச் சிவப்பு நிறம் என்பது.

ஸ்ருஷ்டி மூலம் சிவப்பு. எண்ணமில்லாமலிருந்த ஆதி வஸ்துவில் எண்ணம் என்று ஒன்று எழுந்ததுதான் ஸ்ருஷ்டிக்கு அடி மூலம். ஆகையால் ஸ்ருஷ்டியையும் சிவப்பு என்பது. ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரஹ்மா சிவப்பு நிறந்தான். உயிரோட்டம் என்பதும் ரத்த

ஓட்டத்தால்தான் நடக்கிறது. அந்த ரத்தமும் சிவப்பு. 'ரக்தம்' என்றாலே சிவப்பு என்று அர்த்தம். கவி என்ன பண்ணுகிறான்? அவனும் எண்ணத்தை வைத்துக்கொண்டு காவ்ய ஸ்ருஷ்டி பண்ணுகிறான். அப்படிச் செய்து தன்னுடைய அநுபவத்தை எல்லோருக்கும் கொடுத்து எல்லோருடனும் ஒருவிதமான ஐக்யத்தைப் பெறுகிறான். அதனாலதான் கவிச் சக்தியையும் சிவப்பு என்று சொல்வது.

அன்பின் முதிர்ந்த ரூபந்தான் கருணை. எல்லா அன்புகளுக்கும் உச்சியில் பரமாத்மாவிடமிருந்தே பெருகுகிற அன்பு அது. அதனால் ஸௌந்தர்ய லஹரியிலேயே பின்னாடி - ரொம்பவும் பின்னாடி (ச்லோ.93) - ''பரப்ரம்ம ஸ்வரூபமாக ஒரு கலருமில்லாமல் கிடந்த சம்பு என்னும் வஸ்து லோகத்தையெல்லாம் ரக்ஷிப்பதற்காக அருண ஸ்வரூபமாகி, கருணையினாலே அருணையாகி, வெற்றி நடை போடுகிறது'' என்று வருகிறது: ஜகத்-த்ராதும் சம்போர் - ஜயதி கருணா காசித் அருணா. இதற்கு முன் ச்லோகத்தில் சிவப்பை ச்ருங்காரமாக வைத்து, ''ஸ்படிக ஸங்காசமான பரமேச்வரன் மேல் உன் சிவப்பு டால் விழுந்து அவனுடைய சரீரத்தை ச்ருங்கார ரஸமே எடுத்துக் கொண்ட ஒரு மூர்த்தி மாதிரிப் பண்ணிவிடுகிறது'' என்றும் சொல்லியிருக்கிறார்.

ஸத்வம் வெளுப்பு. ரஜஸ் சிவப்பு. ஸத்வத்திற்கு ரஜஸ் தாழ்ந்தது என்பது தெரிந்த விஷயம். பின்னே ஏன் இங்கே சிவப்பை 'ஓஹோ' என்பது என்ருல் அன்பு பண்ணுவதற்கு த்வைதம் வேணத்தான் வேணும். அந்த த்வைதமுமில்லாமல் ஸத்வாதீதமாக இருக்கும் சுத்த வெளுப்பான ப்ரஹ்மத்தில் பரம ஸாத்விகமான அன்பு உண்டாகும்போது அதுவே உத்தமோத்தமமான ஒரு ரஜஸாகச் செக்கச் செவேலென்று இருக்கிறது என்று தாத்பர்யம்.

கார்யமில்லாமல் சாந்தமாக ஸத்வ ஸ்திதியிலிருப்பதே ஜீவாத்மாவுக்கு நிறைவு. ரஜோ குணத்தில் அவன் கார்யம் பண்ணும்போது சாந்தத்தை இழந்து குறைந்து போகிறான். ஆனால் சாந்த பரமாத்மாவோ கார்ய லோகத்தில் ஈடுபடும்போதும் தன்னுடைய சாந்தம் கலையாமலேதான் வெளியில் கூத்தடிப்பது! ஸ்படிக ஸங்காசமான வருடைய நிஜ சரீரமும் இருந்து அதற்குள்ளேதான் இந்த சிவப்பு டால் வீசுவது. அதனால் அங்கே நிறைவுக்குக் குறைவில்லை.

நாம் தப்பான ரஜோகுணத்திலிருந்து, ஈச்வரபக்தி-ப்ரேமை என்ற உத்தமமான ரஜஸுக்குப் போய், ஈச்வரனும் அதை குணாதீதமான ப்ரஹ்ம நிலைக்குத் தூக்கிவிட வேண்டும்.

குந்துமணி, பாகற்பழம், பாதிரிப்பழம் மூன்றுமே சிவப்பாக இருக்கின்றன. ஆனாலும் அவற்றின் குணம் எவ்வளவு வித்யாஸமாயிருக்கிறது? குந்துமணி விஷம். பாகற்பழம் கசப்பாகக் கசந்தாலும் உடம்புக்கு நல்லது. பாதிரிப் பழம் பரம மதுரமாகவும் இருந்துகொண்டு உடம்புக்கும் நல்லது பண்ணுகிறது. இதே மாதிரிதான் ரஜோ குணச் சிவப்பிலும் வித்யாஸமிருக்கிறது - பந்தப்படுத்தும் ரஜஸ், மோக்ஷ லக்ஷ்யத்தைக் கொண்ட ரஜஸ், அதற்குத் தூக்கிவிடுகிற ரஜஸ் என்று வித்யாஸமிருக்கிறது. அவ்வாறு தூக்கிவிடுகிற ரஜஸின் சிவப்புத்தான் காமேச்வரியுடையது.

அப்படிப்பட்ட பந்தமோசனச் சிவப்பையே பெரிய பந்தமாகக் கட்டிப்போடும் வச்ய சக்திஎன்று சொன்னால் கொஞ்சங்கூடப் பொருந்தாது என்று புரிந்து கொள்ள வேண்டும்.

அம்பாளின் அந்தச் சிவப்பை ஆகாசத்திலிருந்து பூமி வரை எல்லாவற்றையும் முழுகடிக்கிற ''ஸ்ரீ ஸரணி''யாக த்யானிக்க வேண்டுமென்று இந்த (18-வது) ச்லோகத்தில் சொல்கிறார். ஸ்ரீ என்பது பரம மங்களம், ஆத்மாவை ரொப்பும் செல்வம். நம்முடைய ஸ்தோத்ரத்தில் அம்பாளின் ஸௌந்தர்யத்தைத்தான் அப்படிப்பட்ட ஸ்ரீயாகச் சொல்லியிருக்கிறது. ''ஸரணி'' என்றாலும் லஹரிதான் - வெள்ளம் என்று அர்த்தம். ஆனபடியால் ''ஸ்ரீ ஸரணி'' என்பதும் ''ஸௌந்தர்ய லஹரி'' என்பதேதான்.

ஆரம்ப ச்லோகமொன்று (12) ''த்வதீயம் ஸௌந்தர்யம்'' என்றே ஆரம்பித்திருக்கிறது. இங்கே ''ஸௌந்தர்ய லஹரி''க்கு synonym - ஆக (மறுபெயராக) ''ஸ்ரீஸரணி'' என்று வருகிறது. இதெல்லாம் இந்த ''ஆனந்த லஹரி'' பாகமும் 'ஸௌந்தர்ய லஹரி' பாகத்தில் கொண்டு சேர்க்கும் லக்ஷ்யமுடையதுதான் என்று காட்டுவதாக இருக்கிறது - யந்த்ரம், மந்த்ரம், தத்வார்த்தம் என்பதெல்லாம் அந்த ஸௌந்தர்ய ஸ்வரூப தர்சனத்திற்காகத்தான் என்று காட்டுவதாக!

கேசாதிபாதம் என்று குறிப்பிடக்கூடிய பரிமாணமுள்ள மூர்த்திக்குள் அந்த ஸ்வரூபம் அடங்கிவிடுகிறது. ஆனால் அதிலிருந்து வீசுகிற சிவப்பு ஜ்யோதிஸோ ப்ரபஞ்சம் பூராவிலுமே பரவியிருக்கிறது.

ஸஹஸ்ரநாமத்தில் கேசாதிபாத வர்ணனைக்கு முன்னாடியே - அந்த இறங்கு வரிசையில் எங்கே ஹஸ்தங்கள் வரவேண்டுமோ அங்கேதான் அவற்றையும் அவற்றில் பிடித்திருக்கும் ஆயுதங்களையும் சொல்வதென்றில்லாமல், கேசத்தில் ஆரம்பிப்பதற்கு முன்னாடியே - ஆயுதங்களைச் சொல்லியிருக்கிறது. முதலில் பாசம், அப்புறம் அங்குசம், தநுஸ்ஸு, பாணம் என்று சொல்லியிருக்கிறது. வெறும் ஆயுதங்களைச் சொல்லாமல் அவற்றின் தத்வ தாத்பர்யமாகச் சொல்லியிருக்கிறது. அங்கே பாசத்தை 'ராகம்' என்று சொல்லித்தான் ஆரம்பித்திருக்கிறது. ராக ஸ்வரூபபாசாட்யா. 'ராகம்' என்றாலும் 'சிவப்பு', 'ஆசை' என்ற இரண்டையும் குறிப்பதேயாகும். இங்கே சொல்வது பந்தபாசம் என்ற தப்பு ராகம் போய் அம்பாளோடு கட்டிப் போடும் பாசமான நல்ல ராகம். அப்போது த்வேஷம் அடியோடு போய்விட வேண்டுமாதலால் த்வேஷத்தை த்வேஷித்து, கோபத்திடம் கோபித்துக் கொண்டு குத்திக்குத்தி அடக்கணும். அதற்குத்தான் அங்குசம். அப்புறம் நம்முடைய மனஸையும் பஞ்சேந்திரியங்களையும் அவளிடமே ஸமர்ப்பித்துவிட வேண்டும். இவற்றை வசப்படுத்தத்தான் அவள் தநுஸ்ஸும் பாணமும் வைத்துக் கொண்டிருப்பதென்று முன்னேயே சொன்னேன். இதற்கப்புறந்தான் கேசாதிபாத தர்சனம் கிடைக்கும். அப்படிக் கிடைப்பதற்கு முந்தி - ஒரு குறிப்பிட்ட பரிமாணமுள்ள ரூபத்தில் அம்பாள் தெரிவதற்கு முன்னால் - ஸர்வ ஜகத்துக்களிலும், திக்குத் திகந்தமெல்லாம் வியாபித்திருக்கும் அவளுடைய அருண வர்ணமே தெரியும். அதனால்தான் கேசத்தைச் சொல்லும் நாமாவுக்கு முந்தின நாமாவாக அங்கே (ஸஹஸ்ரநாமத்தில்) ''நிஜாருண ப்ரபாபூர மஜ்ஜத் ப்ரஹ்மாண்ட மண்டலா'' என்று வருகிறது. ''திவம் ஸர்வாம் உர்வீம் அருணிமநி மக்நாம்'' என்று ஸௌந்தர்யலஹரி (18-வது) ச்லோகத்தில் சொல்லியிருபபது அதுவேதான். அப்போது அவளுடைய கருணையின்பின் சிவப்பிலே நாமும் முழுகி நம்முடைய பக்தியன்பு பெருக்கெடுக்கிறது. உடனே கேசாதி பாதம் ஸ்வரூப தர்சனமும் கிடைக்கிறது.

ஸஹஸ்ரநாமத்தில் முதல் பேர், அவள் நம் தாயார், நம்மை ஸ்ருஷ்டிப்பவள் என்று காட்டும் ''ஸ்ரீமாதா'' அடுத்த பேர் ஸ்திதி என்பதான பரிபாலனத்தைக் காட்டும் ''மஹாராஜ்ஞீ'' (மஹாராணி). மூன்றாவதாக ''ஸிம்ஹாஸநேச்வரீ'' - 'ஸிம்ஹ' என்பது 'ஹிம்ஸ' என்பதைக் குறிப்பதே. அதாவது அது ஸம்ஹாரத்தைக் காட்டுவது. அப்புறம், இந்த முத்தொழிலும் சித் ஜ்யோதிஸின் லீலைதானே? அந்த மூல சக்தியைக் குறிப்பதான ''சிதக்நி குண்ட ஸம்பூதா' என்ற நாமா. அநாதி தத்வமான சித்சக்தியாயிருப்பவள் லலிதாம்பா என்று ரூபத்தில் எப்போது வந்தாளென்றும் இந்தப் பேரிலேயே ஜாடையாகக் காட்டி அடுத்த பேரில் வியக்தமாகச் சொல்லியிருக்கிறது. தேவர்களை பண்டாஸுரனின் கொடுமையிலிருந்து விடுவிப்பதற்காகத்தான் சித்சக்தி லலிதாம்பாளாக அவதாரம் பண்ணியது. ''தேவகார்ய ஸமுத்யதா'' என்று அதைத்தான் அடுத்த நாமாவாகச் சொல்லியிருப்பது. அஸுரக் கஷ்டம் தாளாமல் தேவர்கள் தங்களுடைய சரீரத்தையே அக்னி குண்டத்தில் அம்பாளுக்கு அர்ப்பணம் பண்ண, ஜட தேஹம் போய் சித்தான அவர்களுடைய உயிர் மாத்திரம் நின்றபோது, மூல சித்தான அம்பாள் லலிதையாக ஆவிர்பவித்து தேவர்களை உயிர்பித்தாள். (அப்புறம் பண்டாஸுரனை ஸம்ஹரித்தாள்.) சித் அக்னிகுண்ட ஸம்பூதா'' என்ற பேரிலேயே இதுவும் உள்ளடங்கியிருக்கிறது.

முத்தொழில், மூல சக்தி, அது லலிதாம்பாளாக வந்த ஸந்தர்பம் ஆகியவற்றை ஆரம்ப நாமாக்களில் வரிசையாகச் சொன்னவிட்டு அடுத்த நாமாவே அவளுடைய ஜ்யோதிச்சிவப்பைச் சொல்வதுதான்: உத்யத்பாநு ஸஹஸ்ராபா. ஆயிரம் உதய ஸூரியனின் காந்தி சேர்ந்தால் எப்படியிருக்குமோ அப்பேர்ப்பட்ட நிறமுடையவள், அதாவது ரக்த ஜ்யோதிஸாக இருப்பவள் என்று அர்த்தம்.

அம்பாளின் சிவப்பு நிறத்தைச் சொன்னவுடனேயே அவளுடைய சதுர்புஜத்தையும், அதிலுள்ள நான்கு ஆயுதங்களையும் சொல்லிவிட்டு - அந்தப் பேர்கள் முன்னேயே பார்த்துவிட்டோம் - அதற்கப்புறம் மறுபடியும் அந்தச் சிவப்பையே ப்ரஹ்மாண்ட மண்டலங்களை முழுக்கடிப்பதாக நாமா சொல்லியிருக்கிறது.

கேசத்தில் ஆரம்பித்து, மற்ற அவயவங்களைச் சொல்வதற்கு முந்தியே ஹஸ்தங்களைச் சொன்னதற்குக் காரணம் அம்பாள்தான் க்ரியா சக்தி என்று தெரிவிப்பதற்காகத்தான். நிஷ்க்ரிய ப்ரம்மம் க்ரியைக்காகத்தானே அம்பாளாயிருப்பது? 'கார்யம்' என்றால் 'கரம் செய்வது'தானே? அதனால் கரங்களை முதலில் சொன்னது. இந்த க்ரியைகளுக்கு இரண்டு பக்கமும் பலம் கொடுத்துக்கொண்டு தாங்குவது இச்சா சக்திதான். அந்த இச்சா சக்திதான் செக்கச் செவேலென்று இருப்பது. அதனுல் ஹஸ்த வர்ணனைக்கு முன்னுல் ''உத்யத்பாநு ஸஹஸ்ராபா என்றும் பின்னுல் நிஜாருணப்ரபாபூரமஜ்ஜத் ப்ரஹ்மாண்ட மண்டலா'' என்றும் நாமா சொன்னது. அதையேதான் நம் ச்லோகத்தில் ஆசார்யாள் ''திவம் ஸர்வாம் உர்வீம் அருணிமநி மக்நாம்'' என்றது.

## ''ஸஹஸ்ரநாமமும் ஸௌந்தர்யலஹரியும்''

இங்கே ''லலிதா ஸஹஸ்ரநாம'' வர்ணனையையே ''ஸௌந்தர்ய லஹரி'' அச்சாக ஒற்றி எடுத்துக்கொண்டுள்ள மாதிரி இன்னும் அநேக இடங்களிலும் இருக்கிறது.

ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால் இதுவே ஒரு தனி 'ஸ்டடி'யாகிவிடும் ! பின்பாதியில் ஆசார்யாள் பண்ணுகிற அவயவ வர்ணனையில் ஸஹஸ்ரநாமத்தையே close - ஆக follow பண்ணிப் பல இடங்களில் பேசுகிறார்.

அம்பாளுடைய நெற்றி திருப்பிவைத்த அர்த்த சந்திரன் மாதிரி இருக்கிறது (ச்லோ.46) என்னும்போது ''அஷ்டமீ - சந்த்ர - விப்ராஜ - தலிக - ஸ்தல சோபிதா'' என்ற ஸஹஸ்ரநாம அபிப்ராயத்தைத்தான் மெருகேற்றியிருக்கிறார். அம்பாள் கண்களைத் திறந்தால் ஸ்ருஷ்டி, மூடினால் பிரளயம் (ச்லோ.55) என்கிறபோது ''உந்மேஷ-நிமிஷோத்பந்த - விபந்ந - புவநாவளீ'' என்ற நாமா நினைவு வருகிறது. அம்பாளுடைய உதட்டுக்கு பவளக் கொடியும் (வித்ருமலதாவும்) ஒப்பாகாது என்று இதில் (ச்லோ.62) வந்தால், அதில் (ஸஹஸ்ரநாமத்தில்) அதே அர்த்தத்தில் ''நவ வித்ரும - பிம்பஸ்ரீ - ந்யக்காரி - ரத்நச்சதா'' என்று இருக்கிறது ! ''ஸரஸ்வதியின் வீணாகானத்தையும் விஞ்சுகிற சாதுர்யம் அம்பாளுடைய பேச்சுக்கே இருக்கிறது. நிஜ - ஸல்லாப - மாதுர்ய - விநிர்பர்த்ஸித - கச்சபீ'' என்று ஸஹஸ்ரநாமத்தில் வருகிற 'ஐடியா'வையே விபஞ்ச்யா காயந்தீயில் (ச்லோ-66) ஒரு முழு ச்லோகமாக ஆசார்யாள் 'டெவலப்' பண்ணியிருக்கிறார். ஒவ்வோர் அவயவத்துக்கும் ஏதாவது உவமை சொல்லி விட்டு, சில இடங்களில் அந்த உவமையும் போதாது என்கிற ஆசார்யாள் அம்பாளுடைய முகவாய்க்கட்டையை மட்டும், ''கதம்காரம் ப்ரூம: தவ சுபுகம் ஔபம்ய ரஹிதம்?'' உவமையே இல்லாத உன் மோவாயை எப்படி வர்ணிப்பது?'' என்கிறார். (ச்லோ.67) ஸஹஸ்ரநாமத்தைப் பார்த்தால் அங்கேயும் மோவாய்க்கட்டைக்கு மாத்திரம் comparison-ஏ சொல்லாமல் ''அநாகலித - ஸாத்ருச்ய - சுபுகஸ்ரீ - விராஜிதா'' (ஒப்புவமையே ஏற்பட்டிராத மோவாயின் அழகால் பிரகாசிக்கிறவள்) என்று இருக்கிறது ! பரமேச்வரனை ஜயிப்பதற்காக மன்மதன் அம்புகளை அடைத்துவைத்த அம்புறாதூணியாக அம்பாளின் முழங்கால் இருக்கிறது என்று இங்கே (ச்லோ-83) வருவதற்கு மூலம் ''(இந்த்ரகோப பரிக்ஷிப்த) ஸ்மர தூணாப ஜங்கிகா'' என்ற ஸஹஸ்ரநாமப் பேரில் இருக்கிறது. ச்ருதி சிரஸில் - அதாவது வேதமாதாவின் தலையில் - அம்பாளுடைய பாதம் விளங்குகிறது என்று ஆசார்யாள் சொல்கிறார் என்றால் (ச்லோ.84), ஸஹஸ்ரநாமம் ரொம்பவும் அழகாக, 'வேதமாதாவின் வகுட்டில் அப்பிய ஸிந்தூரமாக எந்தக் குங்குமம் இருக்கிறதோ அதையே தன் பாததூளியாகப் பண்ணிக்கொண்டவள்: ச்ருதி - ஸீமந்த - ஸிந்தூரீ - க்ருத - பாதாப்ஜ தூளிகா'' என்று வர்ணிக்கிறது. ஸஹஸ்ரநாமத்தில் ''பத - த்வய - ப்ரபாஜால - பராக்ருத - ஸரோருஹா - இணையடிகளின் காந்தி ஸமூஹத்தால் தாமரையைப் பழிக்கிறவள்'' என்று ஒரு நாமா. ஆசார்யாள் இதையே ''ஹிமாநீ ஹந்தவ்யம்'' என்ற (87-வது) ச்லோகத்தில் 'டெவலப்' பண்ணி எத்தனை விதங்களில் அம்பாளுடைய பாதம் தாமரையைப் பழிக்கிறது என்று காட்டுகிறார். ஒன்று தாமரை பனியில் கருகிவிடும். அம்பாளுக்கோ பிறந்தகம் புக்ககம் இரண்டும் பனிமலையானதால் அவள் பாதத்திற்கு ஸதாவும் அதில்தான் ஆனந்த வாஸம் ! இரண்டு: தாமரை ராத்ரிவேளை தோறும் கூம்பிப்போவது. அம்பாள் பாதமோ எப்போதும் மலர்ச்சியாக இருப்பது. மூன்று: தாமரை லக்ஷ்மியைத் தன்னில் வைத்துக் கொண்டிருக்கிறது. லக்ஷ்மி தாமரைக்குள்ளேதானே உட்கார்ந்திருக்கிறாள்? அம்பாள் பாதமோ அதை வழிபடுகிறவர்களுக்கே லக்ஷ்மியை (செல்வத்தை) வாரிக் கொடுக்கிறது. இப்படியாகத் தாமரையை உன் பாதம் ஜயிக்கிறது'' என்று முடிக்கிறார்.

'கூர்மப்ருஷ்ட - ஜயிஷ்ணு - ப்ரபதான்விதா' - 'ஆமை முதுகை வெல்லும் புறங்காலை உடையவள்' என்று ஸஹஸ்ரநாமத்தில் வருகிறதையே ஓரிடத்தில் (ச்லோ-88) 'ப்ரபதம் ... கடின கமட கர்பர துலாம்' என்கிறார். கமடம் என்றாலும் கூர்மம்தான். கச்சபம் என்றும் ஆமைக்கு இன்னொரு பேர்.

ஒரு ச்லோகத்தில் (ச்லோ-91) அம்பாளுடைய பாதத்தில் மங்களமான ரத்னச் சிலம்புகள் ஒலிக்கிறதை 'ஸுபக மணி மஞ்ஜீர ரணித ... சரண கமலம்' என்கிறார். இதில் ஐடியா (கருத்து) மட்டுமின்றி வார்த்தைகள்கூட ஸஹஸ்ரநாமத்தில் உள்ள ஸிஞ்ஜான - மணி - மஞ்ஜீர - மண்டித - ஸ்ரீ பதாம்புஜா என்பதையே follow பண்ணுவது நன்றாகத் தெரிகிறது.

ஆழ்ந்து அலசிப் பார்த்தால் இப்படி இன்னம் நிறைய அகப்படலாம்.

ஸஹஸ்ர நாமத்தில் சொன்னதையே இப்படி ஆசார்யாள் எடுத்துக் கையாளலாமா என்றால் ஒரு விதத்தில் இதுவும் அவருடைய பெருமையை, விநயத்தைத்தான் காட்டுகிறது. பிரஸித்தியில்லாத வேறேதோ புஸ்தகத்திலிருந்து அவர் 'ஐடியா'க்களையோ வார்த்தைகளையோ எடுத்து இதில் போட்டிருந்தால் அப்போது வேண்டுமென்றால் தஸ்கரம் பண்ணிவிட்டார் என்று குற்றமாகச் சொல்லலாம். ஆனால் ஸ்ரீ வித்யோபாஸகர்களுக்கெல்லாம் ரொம்பவும் தெரிந்தது. ரொம்பப் பிரஸித்தி பெற்றது. ரொம்பவும் முக்யமாயிருப்பது ஸஹஸ்ரநாமம்தான். அப்படிப்பட்ட புஸ்தகத்திலிருந்து எடுத்துக் கொண்டார் என்றால் அதனிடம் தம் பக்தியைத் தெரிவித்துக் கொள்கிறார். அதைவிட அதிகமாகத் தாம் எதுவும் சொல்லிவிட முடியாது என்று விநயத்தோடு நினைக்கிறார் என்றுதானே அர்த்தம்? கல்பனையில் ஆசார்யாளின் 'ஒரிஜினாலிடி' சிவனைப்பற்றி அவர் பண்ணியிருக்கும் பாதாதிகேசாந்த, கேசாதிபாதாந்த ஸ்தோத்ரங்களிலும், 'விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ர'த்திலும் அப்படியே ஒரிஜினல் கல்பனைகளாகக் கொட்டியிருக்கிறார். ஆனபடியால் 'ஸௌந்தர்ய லஹரி' என்று அம்பாளை வர்ணிக்கிறபோதும் அவர் மட்டும் மனஸ் வைத்திருந்தால் ஸஹஸ்ர நாமத்திலிருந்து அங்கங்கே எடுத்துக் கொண்டிருக்கிற இடங்களிலும் புதுக் கல்பனையாக வேறு விதத்தில் அத்புத வர்ணனை செய்திருக்கலாம். ஆனாலும் அப்படிப் பண்ணாமல் ஸஹஸ்ரநாமத்தைக் கையாண்டார் என்றால் அதனிடம் தம் மதிப்பைக்காட்டி மற்றவர்களும் அதை மதிக்கும்படிப் பண்ணுகிறார் என்றுதான் அர்த்தம்.

இப்படி மநுஷ்யரீதியில் ரொம்ப விநயமாக அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். அல்லது அவருடைய அவதாரத்தை நினைத்து உசத்தியாகவும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். ஆசார்யாள் யார்? ஸாக்ஷாத் ஈச்வரனும் அம்பாளும் சேர்ந்து பண்ணின அவதாரம். அம்பாள் வேறே அவர் வேறே இல்லை. 'ஸஹஸ்ரநாம'த்தைப் பண்ணினது யார்? வசின்யாதி சக்திகள் என்கிற வாக் சக்தியை அநுக்ரஹித்து அம்பாளேதான். வாக்கு முழுவதும் அவள் ஸொத்துத்தானென்றாலும் அவளே அநுக்ரஹித்து வெளியே கொண்டு வந்ததாக ப்ரத்யக்ஷத்தில் காட்டிய வாக்கு நிச்சயமாக அவளுடையதுதான். வாக் தேவதைகளிடம், ''லோக க்ஷேமார்த்தமாக என் நாமாக்களை ஸ்தோத்ரமாகப் பண்ணுங்கள்'' என்று அவள் உத்தரவு போட்டு, உத்தரவு போட்டது மட்டுமில்லாமல் அவர்கள் மேலே தன்னுடைய கடாக்ஷத்தை வீசி அந்த ஸ்தோத்ரம் உண்டாகும்படியாகப் பண்ணினாள் என்று சொல்லியிருக்கிறது. அதனால் லலிதா ஸஹஸ்ரநாமம் அவள்

ஸொத்துத்தான். ஆனபடியால் அவளே ஆசார்யாளாக வந்து ஸ்தொத்ரித்துக் கொண்டபோது அதிலிருந்து சில அபிப்ராயங்களை இதில் சேர்த்ததில், எந்தத் தப்புமில்லை. நம்மகத்தில் தோட்டம் போடும்போது நமக்கே ஸொந்தமான தோப்பிலிருந்து பதியன் கொண்டுவந்து வைத்தால் என்ன தப்பு? ஆசார்யாளே ஸ்தோத்ரத்தை முடிக்குமிடத்தில் ''த்வதீயாபி: வாக்பி:'' - ''உன்னுடைய வாக்காலேயே'' - ஆனது இது என்று சொல்லியிருக்கிறார்.

கீதையில் க்ருஷ்ண பரமாத்மா கடோபநிஷத் முதலான ச்ருதி வாக்யங்களையும், அபிப்ராயங்களையும் அப்படியே எடுத்தாண்டிருக்கிறார். ஆதியில் அந்த ச்ருதி மந்த்ரங்கள் அவர் மூச்சிலேயேதான் இருந்து, அப்புறம் அவரேதான் ரிஷிகளுக்கு அவை ஸ்புரிக்கும்படிப் பண்ணினார். அதனால் ஸ்வாதீனத்தோடு இப்போது மறுபடி அதுகளையே கீதையில் அங்கங்கே போட்டார். அந்த மாதிரிதான் இதுவும்.

அடுத்த ச்லோகத்தில் (ச்லோ - 21) குண்டலிநீ யோக ஸித்தி அடைந்தவள் ப்ரஹ்மானந்த வெள்ளத்தில் ஆழ்ந்துபோவதைச் சொல்கிறார். ஆனந்த வெள்ளத்தை 'ஆஹ்லாதலஹரீ' என்கிறார். ஸௌந்தர்ய லஹரி - ஆனந்த லஹரி ஸ்தோத்ரத்தில் வரும் அநேக லஹரிகளில் இது ஒன்று. அம்பாளின் அழகு லஹரி, ஆசார்யாளின் அநுபவ லஹரி, அருள் லஹரி, கவிதை லஹரி எல்லாம் ஒன்று சேர்ந்ததில் இப்படிப் பல லஹரிகள் ஸ்தோத்ரத்திற்குள் சொல்லப்பட்டிருக்கின்றன. அம்பாளுடைய பக்தன் மனஸின் அழுக்குகளையும், மாயையையும் நசுக்கிப் போட்டவன் - ம்ருதிக மல மாயேந மநஸா - என்று இங்கேதான் சொல்கிறர்.

## ''ஒருசிலேடைச்லோகம்''
## ''தாஸோஹ'த்திலிருந்து 'ஸோஹ'த்திற்கு''

அடுத்த ச்லோகம் (22) ரஸமானது. இந்த ('ஆனந்தலஹரி') ஸெக்ஷனிலும் சாக்த சாஸ்திரார்த்தங்கள் மட்டுமில்லாமல் பக்தி ஸ்துதியாகவும், கவிதை என்பதாகவுமே ரஸமான ச்லோகங்களும் உண்டு என்றேனல்லவா? அதற்கு இந்த ச்லோகம் நல்ல உதாரணம். 'ச்லேஷாலங்காரம்' எனும் சிலேடையணி மூலமே இந்த ச்லோகத்தில் த்வைத பக்தியிலிருந்து பக்தியும் சக்தியும் ஞானமும் கலந்திருக்கும் ஒருவிதமான அத்வைத நிலைக்கு ஒரே தூக்காகத் தூக்கிவிடுகிறார்.

கவனமாகக் கேட்டீர்களோ, இல்லயோ? ''த்வைத பக்தியிலிருந்து அத்வைத ஞானத்திற்கு'' என்று சொல்லவில்லை. அந்த ஞானத்தோடு பக்தியும் சக்தியும் கலந்து ஒரு தினுஸில் அத்வைதமாக இருக்கும் ஸ்திதிக்குத் தூக்கிவிடுகிறார் என்றே சொல்கிறேன். ஏனென்றால்... ஆரம்பத்திலிருந்து ச்லோகத்திற்கு அர்த்தம் பார்த்துக்கொண்டு போனால்தான் ஸரியாப் புரியும்:

பவாநி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணாம்
இதி ஸ்தோதும் வாஞ்சந் கதயதி பவாநி த்வம் இதி ய: ।
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜஸாயுஜ்ய - பதவீம்
முகுந்த - ப்ரஹ்மேந்த்ர - ஸ்புட - மகுட - நீராஜித - பதாம் ॥ 22

''பவாநி'' - 'அம்மா பவாநியே!''

சிவனுக்கு பவன் என்றும் ஒரு பெயர். பவனுடைய சக்தி பவாநீ. பவன், சர்வன், ஈச்வரன், பசுபதி, ருத்ரன், உக்ரன், பீமன், மஹான் (மஹாதேவன் என்கிறது) என்று அஷ்டமூர்த்தியான சிவனுக்கு எட்டு விசேஷ நாமாக்கள். ஸ்ருஷ்டிக்கு மூலமாயிருப்பவன் - (சிரித்து) இருப்பவன் (pavan)தான் பவன் (Bhavan). அவனுடைய பத்னியாக அம்பாளைச் சொல்லும்போது பவாநீ.

''த்வாம்'' - 'நீ'; ''தாஸே மயி'' - 'தாஸனான என்னிடத்தில்'; ''ஸகருணாம்'' - 'கருணையோடு கூடிய'; ''த்ருஷ்டிம் விதர'' - 'பார்வையைச் செலுத்துவாயாக!' ''அம்மா பவாநி! அடிமையான என்மேல் உன்னுடைய அருள்நோக்கை வீசுவாயாக!''

''இதி'' - 'என்று'; 'வீசுவாயாக என்று'; ''ய:'' - 'எவனொருவன் (அவன் பெரியவனா சின்னவனா, பாத்ரனா அபாத்ரனா என்று கேள்வியில்லை. அவன் எப்படிப்பட்டவனாக வேணாலும் இருந்துவிட்டுப் போகட்டும்! எவனானாலும் அம்பாளுடைய கடாக்ஷம் வேண்டுமென்று ப்ரார்த்திக்க ஆசைப்பட்டு); ''ஸ்தோதும் வாஞ்சன்'' என்றால் 'ப்ரார்த்தித்துக்கொள்ள ஆசைப்பட்டு'; ''பவாநி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணாம்'' என்ற இந்த வார்த்தைகளைச் சொல்லி அவள் கடாக்ஷத்தை ப்ரார்த்திக்க ஆசைப்பட்டு, இதில் முதல் இரண்டு வார்த்தைகளான ''பவாநி த்வம்'' என்று சொல்ல ஆரம்பித்தால் உடனேயே;... இரண்டாம் வரியில் 'பவாநி த்வம் இதி ய: கதயதி'' என்று வருவதற்கு, ''பவாநி த்வம் என்று எவன் சொல்லுகிறானோ' என்று அர்த்தம். ''ததைவ'' என்று மூன்றாம் வரி ஆரம்பிப்பதற்கு 'உடனேயே, 'அப்போதே' என்று அர்த்தம். கடாக்ஷப் பிரார்த்தனையாக இப்படி இந்த ('பவாநி த்வம்' என்ற) இரண்டு வார்த்தையை அவன் சொல்ல ஆரம்பித்தவுடனேயே... உடனே என்ன நடக்கிறது?''ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜ ஸாயுஜ்ய பதவீம்'' ''ததைவ'' - 'உடனேயே', 'அந்த க்ஷணத்திலேயே' - அதாவது ஒருவன், எவனோ ஒருவனான ஆஸாமி, ச்லோகத்தில் முதல் வரியாக கடாக்ஷப் பிரார்த்தனை வருகிறதே, அதை முழுக்கக்கூடச் சொல்லாமல், முதலிரண்டு வார்த்தைகளான 'பவாநி த்வம்' என்பதை மாத்திரம் சொன்னவுடனேயே; ''த்வம்'' - 'நீ'; ''தஸ்மை'' - 'அவனுக்கு'; ''நிஜ'' - 'உன்னுடைய, உனக்கு ஸொந்தமான, உன்னுடைய ஸ்வபாவமான, உனதேயான'; - ''நிஜ ஸாயுஜ்ய பதவீம்'' என்றால் 'உன்னுடையதேயான ஸாயுஜ்ய பதவியை' ஸரியாக அர்த்தம் பண்ணினால் ''நீயாகவே ஆகிற ஸாயுஜ்ய பதவியை'' என்று சொல்லவேண்டும்; அப்படி, அந்த எவனோ ஒருவன் அந்த இரண்டு வார்த்தையைச் சொன்ன மாத்திரத்தில் அவனும் நீயாகவே ஆகிவிடுகிற உச்சி மோக்ஷமான ஸாயுஜ்ய பதவியைக் கொடுத்துவிடுகிறாய். ''திசஸி'' என்று வருவதற்குக் ''கொடுக்கிறாய்'' என்று அர்த்தம்.

''பவாநி! நீ தாஸனான என் மேலே உன் கருணா கடாக்ஷத்தைச் செலுத்து'' என்று ஸ்துதிக்க ஆசைப்படுகிற ஒருவன், 'பவாநி நீ' என்று அர்த்தம் தரும் 'பவாநி த்வம்' என்று ஆரம்பித்த அந்த க்ஷணத்திலேயே நீ அவனுக்கு உன்னுடைய ஸாக்ஷாத்தான ஸாயுஜ்ய பதவியையே கொடுத்துவிடுகிறாய்'' என்று மூன்று வரிக்குமாகச் சேர்த்து அர்த்தம்.

ஸாதகன் லக்ஷ்யத்தோடேயே பிரிவில்லாமல் ஐக்யமாகிவிடுகிறது ஸாயுஜ்யம். இங்கே ப்ரஹ்மத்தோடு அத்வைதமாக அடைகிற ஸாயுஜ்யமில்லை. ஏன் இப்படிச்

சொல்கிறேனென்றால், நாலாம் வரியில் அப்படித்தான் இந்த ஸாயுஜ்ய வர்ணனை வருகிறது.

முகுந்த ப்ரஹ்மேந்த்ர ஸ்புட மகுட நீராஜித பதாம் என்று அந்த வரி இருக்கிறது. ''முகுந்தன்'' (என்றால்) விஷ்ணு என்று தெரிந்திருக்கும். ''ப்ரஹ்மேந்த்ர'' என்றால் ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ராள் இல்லை! 'ப்ரஹ்மாவும் இந்த்ரனும்' என்று அர்த்தம். ''ஸ்புட மகுட'' - ப்ரகாசமான கிரீடம். ''நீராஜிதபதாம்'' என்று முடிகிறது. நீராஜனம் என்றால் தீபாராதனை. 'நீராஜன'வுக்கு செயப்பாட்டுவினை 'நீராஜித', அதாவது 'தீபாராதனை செய்யப்பட்ட ''பதாம்'' - 'பாதங்களை' ''ப்ரஹ்மா, விஷ்ணு, இந்த்ரன் ஆகியோரின் கிரீடங்களால் தீபாரதனை செய்யப்பட்ட பாதங்களைப் பெறும்படியாக உனதேயான ஸாயுஜ்ய பதவியைக் கொடுக்கிறாய்'' என்று மூன்றாம் வரியோடு அன்வயப்படுத்திக்கொள்ள வேண்டும்.

'கிரீடங்களால் பாதத்திற்கு தீபாராதனை' என்றால் என்ன? ப்ரஹ்ம, விஷ்ணு, இந்த்ராதியர் அம்பாளின் பாதத்திலே சிரஸை வைத்து பவ்யமாக நமஸ்காரம் பண்ணுகிறார்கள். அப்போது அவர்களுடைய சிரஸிலுள்ள கிரீடங்களின் ப்ரகாசம் அம்பாளின் பாதத்தில் அடிக்கிறது. அது தீபாராதனை செய்கிறாற்போல் இருக்கிறது.

அம்பாளுடன் அவளேயாக பக்தன் ஐக்ய ஸாயுஜ்யம் பெற்றுவிட்டதால் அப்போது அவனுக்கு இப்படிப்பட்ட 'ப்ரஹ்ம விஷ்ணு இந்த்ராதியரின் கிரீடத்தால் தீபாராதனை செய்யப்படும் பாதங்களை உடைய தன்மை' உண்டாகிவிடுகிறது என்கிறார்.

ஞான வழியிலே போய் அத்வைத ஸாயுஜ்யம் அடையும்போது இப்படி இருக்காது. அங்கே பாதத்தை உடைய ஒரு மூர்த்தியே இருக்காது! ஸ்ருஷ்டி, ஸ்திதிகளும் இருக்காததால் ப்ரஹ்ம விஷ்ணுக்களும் இருக்கமாட்டார்கள். இங்கே ஸகுண மூர்த்தியையும் லோக வ்யாபாரத்தையும் சொல்லியிருப்பதால் இது 'ஸப்ரபஞ்சம்' என்று சொன்னேனே, அந்த ஸமாசாரம். (அத்வைத ஸாயுஜ்யம் நிஷ்ப்ரபஞ்சமான நிர்குண தத்வத்திலேயே ஐக்யப்படுவது.) ஆகையால் இது அத்வைத சாஸ்திரம் சொல்லும் ஸாயுஜ்யமில்லை.

பரப்ரஹ்மமே பராசக்தி என்று பிரபஞ்சகாரணமாக ஆகி, அந்தப் பிரபஞ்சத்திற்குச் சக்ரவர்த்தினியாக இருந்து கொண்டு, ப்ரஹ்மாதி இந்த்ராதி தேவர்களை அதிகார புருஷர்களாக வைத்து லோக நிர்வாஹம் நடத்தி அந்த தேவர்களும் தன் பாதத்திலே வந்து விழும்படியான பெருமையோடு இருக்கிறதே, அந்த ஸ்திதியில் அந்தப் பராசக்தியோடு பராசக்தியாக ஜீவாத்மாவும் ஆகிவிடுகிற ஒரு ஸாயுஜ்யத்தைத்தான் இங்கே சொல்லியிருக்கிறது.

வேடிக்கை என்னவென்றால் அத்வைத சாஸ்திரத்திலும் இப்படிப்பட்ட ஒரு ஸ்திதியைச் சொல்லாமலில்லை. அந்த சாஸ்திரத்தின் லக்ஷ்யம் இந்த ஸாயுஜ்யமில்லைதான். சக்தி ஸமாசாரம் வராமல் கார்யம் என்பது இல்லாமல், சாந்தமாக உள்ள நிர்குணம்தான் அதன் லக்ஷ்யம். ஆனாலும் ஈச்வரன் (பராசக்தியை ஈச்வரன் என்றுதான் அங்கே (அத்வைத சாஸ்திரத்தில்) சொல்லியிருக்கும்; அந்த ஈச்வரன்) ஏதோ ஒன்று பண்ணுகிறானென்றால், 'நான் அத்வைதி; அப்படிப் பண்ணாதே! என்று சொல்ல முடியுமா? சொன்னால்தான் அவன் கேட்பானா? அவனைக் கேட்கும்படிக்

கட்டாயப்படுத்த யாரால் ஆகும்? அதனால் அவன் இவனிடமும் (அத்வைத ஸாதகனிடமும்) தன் விளையாட்டைப் பண்ணுகிறான்! அதனால்தான் உபநிஷத்தில், ஆசையே எழும்பக்கூடாதவனும், ஸ்வய ஸங்கல்பம் என்று ஒன்றே ஏற்படக் கூடாதவனுமான இவனைப் பற்றிச் சொல்கிற இடங்களில் சிலதில், ''அவன் ஆசைப்பட்டதையெல்லாம் அடைகிறான். அவன் ஸங்கல்பம் பண்ணினதெல்லாம் நடந்துவிடுகிறது'' என்றெல்லாம் வருகிறது. இப்படிச் சொன்னால் என்ன அர்த்தம்? அவனுக்கு 'ஐச்வர்யம்' எனப்படும் ஈச்வரத்தன்மை - அதாவது பராசக்தியாக இருக்கும் தன்மை - ஏற்படுகிறது என்றே அர்த்தம். இவன் ஞான வழியிலேயே போய் அத்வைதமாக நிர்குணத்தில் ஐக்யமாக ஸாயுஜ்யம் பெற நினைத்தாலும் ஸகுண பராசக்தி, 'என்னோடேயும் ஸாயுஜ்யமாகி சக்திக்கூத்து அடித்துவிட்டு அப்புறம் சாந்த ஸமாதிக்குப் போ!' என்று பிடித்துக் கொள்கிறாள். அந்த ஸமாதியில் நிலைத்த பிற்பாடுகூட அந்த அநுபவம் கலையாமலே க்ரியா லோகத்தில் இவன் சக்திக் கூத்தடிக்கும்படியாகவும் அவள் பண்ணுவதுண்டு.

அப்படிப் பண்ணுவிக்கப்படுவன் சக்திமானாக மட்டும் முடிந்துபோய்விடமாட்டான். அஹங்காரமுந்தான் இருக்கும். திவ்யரஸம், திவ்யாநுபவம் இருக்காது. அவன் இப்படிபபட்ட திவ்யாநுபவத்தோடு, திவ்ய போதத்தோடுதான் பராசக்தியில் பக்தியுடன் கலந்திருந்து அவளை ஸாக்ஷாத்கரித்துக்கொண்டே சக்திக் கூத்து அடிப்பான். அப்புறம் இன்னம் உசரக்க (உயரத்தில்) தான் தனியாக சக்தியைக் காட்டுகிறது, ஸங்கல்பிக்கிறது. ஆசைப்படுகிறது என்றெல்லாம் இல்லாமல் அவள் ஸங்கல்பப்படி, இஷ்டப்படி ஆடுகிற ஆட்டத்தையெல்லாம், போடுகிற கூத்தையெல்லாமே தனதாகவும் அவளுடையதாகவும் ஒரே ஸமயத்தில் தெரிந்துகொண்டு ஆனந்தமாக இருப்பான். அப்போது பரம உத்தமமான பக்தி உணர்ச்சியும் இருக்கும்; அம்பாளோடு' ஒன்றுபட்டிருக்கும் ஸகுணமான அத்வைத ஞானமும் இருக்கும்; அதற்கும் அடிமட்டத்தில் இந்த ஸகுண பராசக்திக்கும் ஆதாரமான நிர்குணத்தில் ஆத்மாவை அறிந்துகொண்டிருப்பதான ஒரு சாந்த உணர்ச்சியும் இருந்துகொண்டிருக்கும். ஞான வழியிலே போகிறவன் பெறுகிற சாந்தம்.

இப்படி, ஞானம் - பக்தி - சக்தி எல்லாம் கலந்ததான ஒரு ஸாயுஜ்யந்தான் இங்கே ஆசார்யாள் சொல்வது; அவர் அத்வைதப் புஸ்தகங்களில் சொல்கிற ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமிலலை.

அதெல்லாம் ஸரி. ச்லேஷை (சிலேடை) என்றேனே, அது என்ன? ரொம்ப இன்ட்ரெஸ்டிங்காக அதைத்தான் இந்த ச்லோகத்தில் ஆசார்யாள் செய்திருக்கிறார். அதைச் சொல்லாமல் தத்வார்த்தம் சொல்லிக் கொண்டிருக்கிறேன்!

''பவாநி த்வம்'' என்றவுடனேயே அவள் பக்தனைத் தானாக்கிக் கொண்டுவிடும் ஸாயுஜ்யம் தருகிறாள் என்றாரல்லவா? ''பவாநித்வம்'' என்ற அந்த வார்த்தையிலேயே சிலேடை வைத்துப் பண்ணியிருக்கிறார்!

இரு பொருளில் ஒரு சொல்லைப் பிரயோகிப்பதுதானே சிலேடை? அந்தப்படி பக்தன் 'பவாநி த்வம்'' என்பதை ஒரு பொருளில் சொல்லப்போக, அதையே அம்பாள் வேறு பொருளில் அவனுக்கு அநுபவ ஸத்யமாக ஆக்கிக் கொடுத்துவிடுகிறாள்.

இவன் சொன்னது ''பவாநி ! நீ'' என்ற அர்த்தத்தில். அவள் அதை எப்படி அர்த்தம் பண்ணி ஸாயுஜ்யாநுபவமாக்குகிறாள்?

'பவாநி' என்பது இரண்டு விதமான அர்த்தம் கொடுக்கும். அந்த வார்த்தை பெயர்ச் சொல்லாகவும் வரும்; வேறே அர்த்தத்தில் வினைச் சொல்லாகவும் வரும். அந்த வார்த்தைக்கு தாதுவாக, verbalroot - ஆக உள்ள ''பவ'' என்ற வார்த்தையே இப்படிப் பெயர்ச் சொல்லோடு ஒரு அர்த்தத்திலும் வினைச் சொல்லாக இன்னொரு அர்த்தத்திலும் வருவதாகும். அப்புறம் suffix (விகுதி) சேர்த்துக் கொண்டு ''பவாநி'' என்று நீளுகிறபோதும் இப்படியே அதற்கு இரண்டு அர்த்தம். 'பவ' பெயர்ச் சொல்லாக இருக்கும்போது சிவன் பெயர். அப்போது 'பவாநி' என்றால் பவனின் பத்னியான அம்பாள். 'பவ' என்பதே வினைச் சொல்லாகவும் உள்ளபோது 'இருப்பாயாக' என்று அர்த்தம். 'தீர்க்க ஸுமங்கலீ பவ'. 'தீர்க்காயுஷ்மான் பவ, 'ஜயவிஜயீ பவ' என்றெல்லாம் சொல்கிறபோது இந்த அர்த்தந்தான்.

'பவான்', 'பவதி' என்று இரண்டு வார்த்தை உண்டு. 'பவான்' என்பதற்கும் வேர்ச்சொல் 'பவத்'தான். 'பவான்', 'பவதி' என்றால் (முறையே) 'ஐயா', 'அம்மணி' என்று மரியாதையாகச் சொல்கிற அர்த்தம். 'பவதீ' என்று தீர்க்கமாக முதல் வேற்றுமையில் - கூப்பிடும்போது 'பவதி' என்று குறிலாகச் சொல்லவேண்டும். 'ஹே பவதி !' என்றால்தான் மட்டுமே சொல்வதாயிருக்கிறது. 'அம்மணி ! பிச்சைபோடு !' என்பதற்கு 'பவதி ! பிக்ஷாம் தேஹி ! என்று சொல்வதாக இருக்கிறது.

'ஐயா'வையும் முதல் வேற்றுமையில் 'பவான்' என்று தீர்க்கமாகவும் விளிவேற்றுமையில் 'ஹே பவன்' என்று குறிலாக்கியும் சொல்லவேண்டும்.

நம்முடைய ச்லோகத்தில் ஆசார்யாள் அம்பாளை வைத்து 'பவாநி'யில் வார்த்தை விளையாட்டுப் பண்ணுகிறாரென்றால் அவருடைய சிஷ்யரான தோடகாசார்யாரோ அவரையே வைத்து ''பவ ஏவ பவான்'' என்று வார்த்தை விளையாட்டுப் பண்ணியிருக்கிறார். 'பவான்' என்பது மரியாதையாகத் 'தாங்கள்' என்று சொல்வது. 'பவ ஏவ பவான்' என்றால் ''தாங்கள் பவனாகிய பரமேச்வரனேதான் !'' என்று அர்த்தம்.

அந்த ஸமாசாரங்கள் இருக்கட்டும் 'பவாநி'க்கு இரண்டு அர்த்தம் என்ன என்பதிலல்லவா இருந்தோம்? வினைச் சொல்லாயிருக்கும்போது 'பவ' என்றால் 'இருப்பாயாக', 'ஆவாயாக' என்று அர்த்தம். 'பவாநி' என்றால் 'ஆவேன்', 'ஆவேனாக!' என்று அர்த்தம்.

ஆனபடியால் 'பவாநி த்வம்' என்பதில் 'பவாநி'யை வினைச் சொல்லாக அர்த்தம் பண்ணிக் கொண்டால் 'நீயாக ஆவேனாக !' என்று அர்த்தமாகும்.

தமிழ், இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் ஒரு வாக்யத்தில் ஒவ்வொரு பதமும் இன்ன ஆர்டரில்தான் வரவேண்டுமென்று இருப்பதுபோலில்லாமல் ஸம்ஸ்க்ருதத்தில் முன் பின்னாகப் பல தினுஸில் வரலாம். அதனால் ''பவாநி த்வம்'' என்பதையே ''த்வம் பவாநி'' என்று வைத்துக் கொண்டு ''த்வம்'' - 'நீ, ''பவாநி'' - 'ஆவேன்': ''நீயாக நான் ஆவேன்'' என்று அர்த்தம் செய்துகொள்ளணும்.

அநுக்ரஹத்தை ஒரே பெரிசாக வாரிக் கொடுக்கும் க்ருபா மனஸு கொண்ட அம்பாள் இப்படித்தான் அர்த்தம் எடுத்துக் கொள்கிறுளாம். 'குழந்தை இப்படிச் சொல்லி

விட்டானே ! நாமாகவே அவன் ஆவதாகச் சொல்கிறானே ! அவன் வார்த்தை பொய்யாக்கப்படாது' என்று பரம க்ருபை கொண்டு அவனைத் தானாகவே ஆக்குகிற 'நிஜ ஸாயுஜ்ய' பதவியைக் கொடுதது விடுகிறாளாம் !

இவன் என்னவோ அவளுடைய குழந்தை என்று உறவு கொண்டாடிக்கொண்டு அவளுடைய வாத்ஸல்யமான சீராட்டலை எதிர்பார்க்கக்கூடத் தனக்கு அர்ஹதை இல்லை என்று நினைத்து, ரொம்ப நைச்ய பாவத்தில்தான் அவளுடைய தாஸனாக, அவளுக்கு அடிமைப்பட்ட வேலைக்காரனாக, தன்னை வைத்துக்கொண்டு அவள் ஒரு கடாக்ஷம் பண்ணினாலே பெரிசு என்று ப்ரார்த்திக்க நினைக்கிறான்: ''தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணாம் இதி ஸ்தோதும் வாஞ்சந்''. வாஸ்தவத்திலேயே அவன் ஒன்றுக்கும் உதவாத பாமரனாகவே இருக்கணும் அதனால்தான் 'ஸாது', 'ஸுதீ' (நல்லறிவுள்ளவன்) என்று எதுவும் சொல்லாமல் ''ய'': 'எவன்' - எவனோ ஸாதா ஆளாகவும் இருக்கலாம். அப்படிப்பட்டவன் - என்று போட்டிருக்கிறார். ஸாயுஜ்யம் என்ற ஸ்திதி, அப்படி ஒரு வார்த்தை இருப்பதுகூடத் தெரியாதவனாக அவன் இருக்கலாம். ஆனாலும் அவன், 'நீ ஆகிறேன்' என்று அர்த்தம் தரும் வார்த்தைகளை எப்போது சொல்விட்டானோ அப்போது அந்தப்படி பண்ண வேண்டியதுதான் என்று அம்பாள் ஸாயுஜ்யம் கொடுத்துவிடுகிறாள்.

பகவான் பிரபு, தான் தாஸன் என்று மோக்ஷத்திலும் பிரிந்து இருப்பதே த்வைதம். இப்படி நினைத்து தாஸனாகச் சொல்லிக் கொள்கிறவனுக்கே அம்பிகை அத்வைதத்தை அள்ளிக் கொடுத்துவிடுகிறாள் ! இப்போது தருவது ஸகுண அத்வைதம். இதைத் தந்தவள் அப்புறம் நிர்குண அத்வைதமும் தராமல் விடமாட்டாள் !

ஆஞ்சநேய ஸ்வாமி ''தாஸோஹம்'' என்று சொல்லிக்கொண்டிருந்தே ''ஸோஹம்'' நிலைக்குப் போனவர்; போனவிட்டும் ராமதாஸனாகவே இருப்பவர் என்பார்கள். ''தாஸோஹம் - தாஸ: அஹம்'' என்றால் ''நான் தாஸன்'', ''அடியேன்'' என்று அர்த்தம், ''ஸோஹம் - ஸ: அஹம்'' என்றால் ''அவனே (பரமாத்மாவே) நான்'' என்று அர்த்தம். தாஸோஹம் என்று வருகிறவர்களையெல்லாம் ஸோஹமாக்கிக் கொள்கிறாள் அம்பாள் என்று ஆசார்யாள் சொல்கிறார்.

'நான் ப்ரஹ்மமாக இருக்கிறேன்' என்று ஸ்வயவாசகமாகவும், 'நீ அதுவாக இருக்கிறாய்' என்று குரு வாசகமாகவுமுள்ள மஹாவாக்யங்களை ஸதா ஸ்மரித்து அத்வைதமாக வேண்டும் என்று படாத பாடுபடுகிறவர்களுக்கூட அது லேசில் ஸித்திப்பதில்லை. அப்படியிருக்க, கேட்காதவனுக்கும் அதை அம்பாள் கருணையாலேயே கொடுத்துவிடுகிறாளாம் ! (சிரித்து) அந்த வேதமஹாவாக்யங்களுக்கும் மேலே இப்படி ஆசார்யாள் கொடுத்திருக்கிற 'பவாநி த்வம்' என்ற மஹாவாக்யம் பண்ணிவிடுகிறது !

'பவாநி த்வம்' என்பதற்கு 'பவாநி நீ' என்பதோடு, 'நான் நீ ஆகிறேன்' என்றும் இரண்டாவது அர்த்தம் இருப்பதில்தான் சிலேடையணி இருக்கிறது.

இன்னொரு, மூன்றாவது, அர்த்தத்திலும் சிலேடை பொருந்துகிது. ''த்வம்'' என்பது தனி வார்த்தையாயில்லாமல் ஒரு வார்த்தையிலேயே ஒட்டிக்கொண்டு விகுதியாக வரும்போது ''தன்மை'' என்று பொருள்படும். 'கவித்வம்' என்றால் 'கவித்

தன்மை'. ''அவன் அமரத்வம் அடைந்தான்'' என்பதில் 'அமரத்வம்' என்றால் 'அமரத்தன்மை'. இப்படியே பவாநி, த்வம் என்று இரண்டு வார்த்தையாயில்லாமல் பவானித்வம் என்று ஒரே வார்த்தையாகக் கொண்டால் 'பவாநியான பராசக்தியின் தன்மை என்றாகும். ''பவாநி, த்வம் என்று இரண்டு வார்த்தையாகக் கொண்டால் பவாநியான பராசக்தியின் தன்மை என்றாகும். ''பவாநி, த்வம்'' என்று ஒருத்தன் கடாக்ஷத்தைப் பிரார்த்தித்து ஆரம்பிக்கிறபோதே, அவன் மூன்றாம் வார்த்தையைச் சொல்வதற்குக்கூட அவகாசம் தராமல் அம்பாள் இடைமறித்து, ''ஆமாமப்பா ! த்வம் பவாநி என்று நீ நானாகிற நிலை இருக்கத்தான் இருக்கிறது'' என்று சொல்லித் தன்னுடைய தன்மையான 'பவானித்வ'த்தையே அவனுக்குத் தந்துவிடுகிறாள்.

அதனால் நாம் செய்யவேண்டியது நிஜமான பக்தியோடு அம்பாளின் அடிமையாகி அவளைக் கடாக்ஷத்திற்காகப் பிரார்த்திப்பதுதான். ''ய:'' என்று அவர் போட்டுவிட்டதால் நிஜபக்திகூட இல்லாமல் உதவாக்கரையாக இருந்துகொண்டு, ''பவாநி த்வம்'' சொல்லிவிட்டால் ஸாயுஜ்யம் கிடைத்துவிடும் என்று தப்பர்த்தம் செய்து கொள்ளக்கூடாது. நிஜ பக்தியோடு, நிஜமாகவே அடிமை மனப்பான்மையோடு அடங்கியிருந்து, நிஜமாகவே அவளுடைய கடாக்ஷத்தை வேண்ட வேண்டும்.

தன்னுடைய ப்ரார்த்தனையை ஒருத்தன் முழுக்கச் சொல்லக்கூட இல்லை, சொல்ல ஆசைதான் பட்டான், ஆசைப்பட்டு இரண்டு வார்த்தை சொல்லி ஆரம்பித்தான், அதற்குள்ளேயே அம்பாள் அவன் முழுக்கச் சொல்லியிருந்தால் என்ன கேட்டிருப்பானோ அதைவிட ரொம்ப உசந்த அநுக்ரஹத்தைத் தந்துவிடுகிறாள் என்ற அபிப்ராயமே ரஸமாக இருக்கிறது. ''வாஞ்சா ஸமதிகம்'' (ஆசைப்பட்டதற்கு மிக அதிகமாக) அம்பாள் பாதமே கொடுத்துவிடும் என்று முன் ச்லோகமொன்றில் (ச்லோ-4) சொன்னவர் இங்கே ''ஸ்தோதும் வாஞ்சன்'' - ஒருத்தன் ஆசையைச் சொல்லிப் பிரார்த்திக்க ஆசைப்பட்டு - முழுக்கச் சொல்வதற்கு முந்தியே ரொம்ப ரொம்ப 'வாஞ்சாஸமதிக'மாக அம்பாள் ஸாயுஜ்யத்தையே கொடுப்பதாகச் சொல்வது ரஸமாக இருக்கிறது. இது கருணா ரஸம். இதை வார்த்தை விளையாட்டினால் அநாயாஸமாக இழுத்துக் கொண்டு வந்துவிட்டிருப்பது கவிதா ரஸம் !

இதைப் பார்க்கிறபோது, பாஷா சாஸ்திரம் முதலியவற்றை நன்றாகத் தெரிந்துகொண்ட ஒருவன் வித்யா கர்வம் அடையாமல் தன்னை அம்பாளுடைய தாஸன் என்று சொல்லிக்கொள்ளும் கனிந்த பக்திமானாக இருந்துவிட்டால் - ஆசார்யாள் அப்படித்தான் இருந்தார்; அந்த மாதிரி இருந்துவிட்டால் - பாமரர்களை உதாஸீனம் பண்ணாமல், அவர்களுடைய ஸாதாரணப் பேச்சிலுங்கூடப் பரம தத்வங்களைக் கண்டுபிடிப்பானென்று தெரிகிறது. அந்தப் பரம தத்வத்தை அவள் அவனுக்கு அநுபவமாகவே கொடுத்துவிடுவாள். அவன் சொல்கிற பாமரனுக்கும் கொடுக்கிறாளென்னும்போது அந்தப் பாமரனுடைய வார்த்தையிலும் பரம தத்வத்தைப் பார்க்கிற உத்தம உள்ளம் உள்ள அவனுக்குக் கொடுக்காமலிருப்பாளா?

குறளில் சொல்லியிருப்பதற்கு இங்கே ஒரு புது பாஷ்யமே கிடைத்துவிடுகிறது ! ''எப்பொருள் யாரார் வாய் கேட்பினும்'' அதில் ''மெய்ப்பொரு''ளான பரம தத்வத்தைக் கண்டு கொண்டால் அதுவே மோக்ஷ அநுபூதிக்கு வழியாகிவிடுகிறது. ''அறிவு'' என்று குறள் முடிவது அநுபூதி அறிவு என்றே வைத்துக்கொண்டுவிடலாம்.

வைஷ்ணவ மதத்தில் நிர்குண அத்வைதத்தைச் சொல்லாவிட்டாலும், ஒப்புக் கொள்ளாவிட்டாலும், ஒரு ஜீவன் மோக்ஷ ஸ்திதியில் ஸகுண மஹாவிஷ்ணுவாகவே அவருடைய ஸகல சக்திகளையும் பெற்றுவிடுவதுண்டு என்று சொல்லும் ஒரு ஸித்தாந்தம் உண்டு. ஆனாலும் இப்படிச் சொல்லும் போது ஔசித்யத்தை முன்னிட்டு - உசிதமில்லை, ஒழுங்குத் தப்பானது என்பதை முன்னிட்டு - ''லக்ஷ்மீபதித்வத்தைத் தவிர'' விஷ்ணுவின் பாக்கி லக்ஷணங்கள், ஐச்வர்யங்கள் பூராவும் அந்த ஜீவனுக்கு வரும் என்று எக்ஸெப்ஷன் கொடுத்துச் சொல்வார்கள். இப்படியே உமாபதித்வத்தைத் தவிர பாக்கி எல்லாவற்றிலும் ஒருவன் மோக்ஷத்தில் பரமேச்வரனாகிவிடுவான் என்று சிவாத்வைதத்தில் சொல்கிறதுண்டு. நமக்கு (அத்வைதிகளுக்கு) மோக்ஷத்தில் நிர்குணமான ஒன்றே இருப்பது போலில்லாமல் அவர்களுக்கு நாராயணன் - லக்ஷ்மி, சிவன் - சக்தி என்று தம்பதியாயிருப்பதால் அவர்கள் இப்படிச் சொல்லவேண்டியிருக்கிறது. ஆனாலும் இப்படி ஏதோ ஒன்றில் ''அது தவிர'' என்று சொல்லிவிட்டாலே, பாக்கியிலும் ஸந்தேஹம் வந்து விடுகிறதே ! ஆகையால் இப்படி எக்ஸெப்ஷனே கொடுக்காமல் அந்த ஸித்தாந்தக்காரர்களுக்கு ஆதரவாகச் சொல்ல வழியுண்டா என்று ஆலோசிக்கிறபோது இந்த ச்லோகம் வழி திறந்துவிடுகிறது ! நேரே நாராயண ஸ்வரூபமாகணும் அல்லது சிவஸ்வரூபம் ஆகணும் என்று பிரார்த்தனை, த்யானம் பண்ணாதே ! லக்ஷ்மி ஸ்வரூபமாகணும், அம்பாள் ஸ்வரூபமாகணுமென்றே பண்ணு. தாயார்களானதால் கொடுத்தும் விடுவார்கள். அப்புறம், அந்த லக்ஷ்மியும் அம்பாளும் உள்ளூர விஷ்ணுவோடும் ஈச்வரனோடும் ஐக்யப்பட்டே இருப்பவர்கள்தானே? அதனால் தன்னில் கரைந்திருக்கிற ஜீவனைத் தானும் கரைந்திருக்கிற விஷ்ணு அல்லது சிவ ஸ்வரூபத்தில் அந்தத் தாயார் கரைத்து விஷ்ணு ஸாயுஜ்யத்தையோ சிவ ஸாயுஜ்யத்தையோ உண்டாக்கி விடுவாள். இப்படி அந்த மூர்த்தியோடு ஸாயுஜ்யம் உண்டாகிற போதுதான் அந்த மூர்த்திக்குரிய ஐச்வர்யம், க்ரியை எல்லாமிருந்தாலும் பத்னி மட்டும் தனியாயில்லாமல் உள்ளே கரைந்துபோய்விட்டதால் இந்த ஸாயுஜ்ய மோக்ஷக்காரன் பாதிவ்ரத்ய பங்கம் ஏற்படுத்தாமலிருக்க முடியும்' என்று ச்லோகம் சொல்லாமல் சொல்கிறது.

தாயாராகி அப்புறம் தகப்பனார் ஆவதென்பதில் முதலில் வாத்ஸல்ய ஐக்யம்; அப்புறம் தாயாக ஆனவன் தகப்பனாராகும் போது பக்தி பாவங்களிலேயே உச்சாணியில் வைத்த நாயிகா பாவம் ! அதுதான் அப்படியே அத்வைதத்தில் கொண்டுவிட்டுவிடுவது என்று அநுபவிகளான பெரியவர்கள் எழுதி வைத்திருக்கிறார்கள்.

இந்த ஸமாசாரத்தை அப்படியே திருப்பி வைத்து முன் ச்லோகமொன்றில், பரமேச்வரனொருத்தனுக்குத் தான் அம்பாள் தன்னுடைய பூர்ண ஸௌந்தர்யத்தைத் தெரிவிப்பாளென்பதால் தேவலோகத்து ஸ்த்ரீகள் மானஸிகமாக சிவஸாயுஜ்யத்தை பாவிக்கிறார்கள் என்று சொன்னதைப் பார்த்தோம் !

அத்வைதம் - த்வைதம், தத்வம் - வேடிக்கை, பக்தி - பாண்டித்யம், தாஸ்யம் - மாதுர்யம் (நாயிகா பாவம்) எல்லாவற்றையும் சேர்த்துப் பிசைந்து ரஸ பிண்டமாக இப்படியொரு ச்லோகம் ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார்.

## "மூன்று கர்ப்பூராரத்திகள்"

*இங்கே முகுந்த ப்ரஹ்மேந்திரர்களின் கிரீடப் பிரகாசம் (அம்பாள் பாதத்திற்கு) நீராஜனம் செய்கிறதாகச் சொல்பவர் ஏழெட்டு ச்லோகம் தள்ளி இன்னோரிடத்திலும் ஜீவாத்மா பராசக்தியோடு ஐக்யமாகிறதைச் சொல்லி, அந்த அபேத மோக்ஷ ஸ்தானத்தை அடைந்தவனுக்கு மஹாப்ரளய காலாக்னி என்ற ஸர்வ ஸம்ஹார ஊழித் தீயே நீராஜனம் செய்வதாகச் சொல்கிறார். (சுலோ.30)*

**"மஹா ஸம்வர்தாக்நிர் - விரசயதி நீராஜந விதிம்"**

*ஸ்ருஷ்டி, காலம் முதலான எல்லாவற்றையும் கடந்து ஸத்ய தத்வமான 'அம்பாளாகவே ஆகிறான் என்று அர்த்தம். அங்கே சொல்லப்படும் அந்த ஆஸாமி எவனோ ஒருத்தனான "ய:" இல்லை. பக்தியுடன் பாண்டித்யமும் சேர்ந்த லெவலில் இருக்கிறவனுங்கூட இல்லை. அதற்கும் உசந்த லெவலில் இருக்கிறவனுங்கூட இல்லை. அதற்கும் உசந்த லெவலில் அம்பாளை அத்வைதமாக உபாஸித்துப் பார்ப்பவனாக அவனைச் சொல்லியிருக்கிறார். இங்கே ("பவாநி த்வம்" ச்லோகத்தில்) நான்-நீ-ஆகிற-விஷயம் தற்செயலாக அது பாட்டுக்குக் கவியின் பார்வையில் வந்துதான்; அந்த ஆஸாமி உத்தேசித்ததில்லை. அங்கே அப்படியில்லை. அவனை "ய:" என்கிறபோது, அதோடு விட்டுவிடாமல், எப்படிப்பட்ட "ய:" என்கிறார். நன்றாக அறிந்து, "நீதான் நான்" என்று ஸதாவும் பாவித்துக் கொண்டிருப்பவனவன் - "த்வாம் அஹம் இதி ஸதா பாவயதி ய:" - என்று சொல்லியிருக்கிறார். தாஸோஹம் என்றில்லாமல் ஸோஹம் என்றே உபாஸிக்கிற அவனுக்கு ப்ரளய காலாக்னியும் வெறும் கர்ப்பூராரத்தி ஆகிவிடுகிறது என்கிறார். மற்ற ஸகலமான பேரையும் பஸ்மம் பண்ணுகிற அது இவனுக்குப் பூஜோபசாரமாக தீபாராதனை காட்டி பக்தி பணணுகிறதாம்!*

*ஸௌந்தர்ய லஹரியில் மூன்று நீராஜனம் வருகிறது. பிரம்ம - விஷ்ணு - இந்திரர்களின் கிரீடம் அம்பாள் பாதத்தில் பண்ணும் நீராஜனம் ஒன்று. அம்பாளுடன் அத்வைதமாக ஆசைப்பட்டு அப்படியே ஆக்கிக் கொண்டவனுக்கு - இப்படிச் சொன்னால் அம்பாளுக்கு என்றேதான் அர்த்தம் - அவளுக்கு, மஹா ப்ரளயத்திலும் அழியாத பரப்ரஹ்ம சக்தியாக இருக்கப்பட்டவளுக்கு அந்த ப்ரளயாக்னி பண்ணும் நீராஜனம் இரண்டாவது. ஸ்தோத்ரத்தைப் பூர்த்தி பண்ணுமிடத்தில் (நூறாவது ச்லோகத்தில்) மூன்றாவது நீராஜனம் வருகிறது. வாக்சக்தியிலே ஸூர்ய ப்ரகாசமாக ஜ்வலிக்கிற அம்பாளுக்கு ஆசார்யாள் இந்த ஸௌந்தர்ய லஹரி என்ற வாக்லஹரியையே கர்ப்பூரமாக்கி அங்கே நீராஜனம் காட்டுகிறார்.*

*இந்த மூன்று ஸ்ருஷ்டிக்கொன்று, ஸ்திதிக்கொன்று, ஸம்ஹாரத்திற்கொன்று என்று இருக்கின்றன. ஆனால் க்ரமம் மாறி முதலில் ஸ்திதி, அப்புறம் ஸம்ஹாரம், கடைசியில் ஸ்ருஷ்டி என்று வருகிறது. ஸ்திதி - கருணையோடு கட்டிக் காத்துப் பரிபாலிப்பது - தான் அம்பாளுக்கு முக்யம். அதனால்தான் ப்ரணவத்திலே முறையாக ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைக் குறிக்கும் அ, உ, ம என்ற அக்ஷரங்கள் வந்தாலும், தேவீப்ரணவம் என்கிற 'உமா' நாமத்திலே ஸ்திதி அக்ஷரமான 'உ' முதலில், அப்புறம் ஸம்ஹாராக்ஷரமான 'ம', கடைசியில் தாயாக முடிக்கிற விதத்தில் ஸ்ருஷ்ட்யக்ஷரமான*

'அ' என்று இருக்கிறது. இங்கேயும் மூன்று நீராஜனங்கள் இந்தப்படியே வருகின்றன. முகுந்த ப்ரஹ்மேந்திரர்கள் தங்கள் கிரீடத்தால் பண்ணும் நீராஜனம் ஸ்திதி. அவர்கள் இருக்கிறார்கள், லோகத்தைப் பரிபாலித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதாலேயே இது ஸ்திதி காலம் என்று தெரிகிறது. ஸ்வாரஸ்யமாக இன்னொரு internal evidence - உட்சான்று கூட - ச்லோகத்திலே தெரிகிறது. 'ப்ரஹ்மா, விஷ்ணு' என்றுதான் சொல்வது வழக்கமானாலும் இங்கே ஸ்திதிக்கு ஸ்வாமியான விஷ்ணுவை முதலில் முகுந்தன் என்று சொல்லிவிட்டு அப்புறந்தான் ப்ரஹ்மாவைச் சொல்லியிருக்கிறது! ஸம்ஹார கர்த்தாவான ருத்ரனைச் சொல்லவேயில்லை; இந்திரனைத்தான் சொல்லியிருக்கிறது.

மஹா ப்ரளயாக்னி செய்கிற நீராஜனம் என்பது ஸம்ஹாரத்தைச் சொல்வது. இது யாருக்குமே ஸ்பஷ்டமாகப் புரியும்.

கடைசி ச்லோக நீராஜனம் ஸ்ருஷ்டி. எப்படியென்றால்: ஆசார்யாள் இந்த ஸ்தோத்ர ஸ்ருஷ்டிக்கு அம்பாளே காரணம் என்று சொல்லித்தான் அதைக் கொண்டே அவளுக்கு அங்கே நீராஜனம் காட்டுகிறார். அம்பாள் தன் கல்பனையாக ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்திருக்கிறாற்போலத்தான் ஒரு கவியும் தன் கல்பனையால் காவ்யம், ஸ்தோத்ரம் என்று ஸ்ருஷ்டிக்கிறான். இப்படித் தம் ஸ்ருஷ்டியாகத் தெரியும் இந்த ஸ்தோத்ரத்திற்கும் மூலச் சரக்கு அம்பாள்தான்; ஸூர்ய மண்டலமாக இருக்கும் அந்த மூலச் சரக்கிலிருந்து ஒரு கர்ப்பூர வில்லையில் ஏற்றிய சுடரின் அளவுதான் இந்த ஸ்தோத்ரம் என்று அங்கே ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.

இப்படி மூன்று நீராஜனம் கொடுக்கும் பரம மங்களமான வழிபாடாக ஸௌந்தர்ய லஹரி இருக்கிறது.

இங்கே நாம் பார்க்கிற முதல் நீராஜனம் பிரம்ம, விஷ்ணு, இந்திரர்களின் கிரீடப் பிரகாசமாக இருக்கிறது.

## "ருத்ரனைச் சொல்லாததேன்?
## தூக்க - மரணங்களும் துரீய ஸமாதியும்"

ப்ரஹ்ம - விஷ்ணு - ருத்ரர் என்று த்ரிமூர்த்திகளைச் சொல்வதே வழக்கம். முத்தொழிலைச் சொல்வதென்றால் அதுதான் பொருத்தமும். அப்படியிருக்க இங்கே ருத்ரனை விட்டுவிட்டு இந்த்ரனை ஏன் சொன்னார்?

இங்கே ஆசார்யாளுடைய உத்தேசம் த்ரிமூர்த்திகளுக்கு மேலே அம்பாள் என்று காட்டுவதில் இல்லை. அதைத்தான் ஆரம்ப ச்லோகம், அடுத்த ச்லோகம் இரண்டிலுமே சொல்லியாச்சே! மஹா பெரிய தேவாதிகளாலும் திருவடி தொழப் பெறுபவள் அம்பாள் என்று பொதுப்படையாகச் சொல்வதுதான் இங்கே உத்தேசம் அதனால் ஸர்வலோக ராஜாவாகப் பரிபாலிக்கும் விஷ்ணு, தேவலோக ராஜாவான இந்திரன், அந்த தேவர்களெல்லாம் ஒரு கஷ்டம் என்றால் யாரிடம் முதலில் போய் நிற்பார்களோ அந்த பிரம்மா ஆகிய மூன்று முக்யமான தேவர்களைச் சொல்லியிருக்கிறார். இந்திரன் தேவராஜா என்பதோடு, அஷ்டதிக் பாலர்களிலும் ஒருத்தன்; கிழக்குத் திக்கைப் பரிபாலிக்கிறவன். திக்பாலகனான அவன் இருக்கிறானென்றால் லோக பரிபாலனம் நடக்கிறது. இது ஸ்திதி காலம் என்று உறுதியாகிறது.

இது ஸ்திதி நீராஜனம், அதனால் ஸம்ஹார ருத்ரனைச் சொல்லவில்லை என்று ஒரு காரணம் சொன்னேன்.

இன்னொரு காரணமும் உண்டு. (அது) தத்வார்த்தமானது. (என்னவென்றால்) ஸத்வ - ரஜஸ் - தமஸ், இந்த மூன்றும் கடந்த நிர்குணம் என்று நாலு இருப்பதில் ஸ்ருஷ்டி - ரஜஸ் - பிரம்மா, ஸ்திதி - ஸத்வம் - விஷ்ணு. ஸம்ஹாரம் - தமஸ் - ருத்ரன், துரீயம் - நிர்குணம் - பிரம்மம் என்று ஒவ்வொரு மூர்த்தி என்று இருக்கிறது. நாலாவதாகச் சொன்ன துரீயம் என்பது கார்யமில்லாத நிலை. அங்கே நிர்குணம் என்பது அந்த வார்த்தையே காட்டுகிறாற்போல குணமில்லாதது. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களே ஜீவன் விஷயத்திலே ஜாக்ரத் (விழிப்பு) - ஸ்வப்ன (கனவு) - ஸுஷுப்தி (நித்திரை)களாக இருக்கின்றன. ஜீவன் தன் ஒரே மனஸை வைத்துக்கொண்டு பல பேரை, ஊரை, கார்யங்களைக் கல்பித்துக் கனாக் காண்கிற ஸ்வப்னாவஸ்தைதான் ஸ்ருஷ்டி. அவன் விழிப்பு நிலையில் - ஜாக்ரதவஸ்தை என்பதில் - லோக வியவஹாரங்களை நடத்துவது ஸ்திதி. எல்லாம் அடங்கிப்போய் தூங்குகிற ஸுஷுப்தி - ஸம்ஹாரம். அப்படி இவன் தூங்கும் போதும் தூங்காமல், உள்ளுக்குள்ளே எதிலும் பட்டுக் கொள்ளாமல் பரம சாந்தமாக ஒரு உயிர்மூலம் இருக்கிறதே, அதுதான் துரீயம். துரீயம் என்றால் ''நாலாவது'' என்று அர்த்தம். மற்ற மூன்று நிலைகளுக்கு மேலே, உள்ளே, அடியிலே எல்லாம் இருக்கிற - ஆனாலும் பரம அசடுகளான நமக்கு அடியோடு தெரியாத - நாலாவது நிலை. 'சதுர்த்தம்' என்றே அதை நமக்குப் புரிகிற பாஷையில் (மாண்டூக்ய) உபநிஷத் சொல்கிறது. ஜாக்ரத - ஸ்வப்ன - ஸுஷுப்தி என்பவை ஒரு ஜீவன் ஸமாசாரம் - 'பிண்ட'த்தில்; microcosm என்ற இத்தனூண்டு தனிம நுஷ்ய லோகத்தில். இந்த மூன்று ஸ்ருஷ்டி - ஸ்திதி- ஸம்ஹாரங்கள் அண்டம் என்ற macrocosm - ஆகிய மஹா பெரிய லோகத்தை நடத்தும் ஈச்வரனின் ஸமாசாரம்.

துரீயம் மட்டும் இரண்டுக்கும் பொது; இரண்டுக்கும் ஒரே துரீயந்தான்! ஸகுண ப்ரஹ்மமான ஈச்வரனுக்குள்ளே ஆதார ஸத்யமாக எந்தத் துரீயம் ஒரு குணமும் கார்யமுமில்லாமல் 'நிர்குண ப்ரஹ்மம்' என்று இருக்கிறதோ ஸாக்ஷாத் அதுவேதான் ஒரு ஜீவனுக்குள்ளே மூன்று அவஸ்தைகளுக்கும்ஆதாரமான 'ஆத்மா' என்று இருப்பது.

இந்த மெடஃபிஸிக்ஸ் எல்லாம் எதற்குச் சொல்லிக் கஷ்டப்படுத்துகிறேனென்றால், ஸம்ஹாரம் என்பதுதான் - வெளிப்பார்வைக்கு அப்படித் தோன்றாவிட்டாலும் - துரீயமான ப்ரஹ்ம நிலைக்குக் கிட்டயிருப்பது என்று காட்டத்தான். ஒரு ஜீவன் துரீயமான ஸமாதி நிலையிலே எப்படி மனஸடங்கி சாந்தமாயிருக்கிறானோ அந்த மாதிரி ஜாக்ரத்திலோ, ஸ்வப்னாவஸ்தையிலோ இல்லை; ஸுஷுப்தியிலேதான் இருக்கிறான். சாந்தமாயிருக்கிறோம் என்ற ஞானத்தோடு அந்த சாந்தத்தை அவன் ஒரு ஸத்ய அநுபவமாக ஸமாதியில்தான் பெறுகிறானே தவிர ஸுஷுப்தியின் சாந்தத்தில் இந்த ஞானமும் அநுபவானந்தமும் இல்லை. ஆகவே இந்த இரண்டும் ரொம்ப வித்யாஸமான ஸ்திதிகள் என்பது வாஸ்தவந்தான். ஆனாலுங்கூட ஒரே 'பரபர', ஒரேயடியாக மனஸின் பிடுங்கல் என்றிருக்கிற ஜாக்ரத் - ஸ்வப்னங்களோடு 'கம்பேர்' பண்ணும்போது ஸுஷுப்திதான் துரீயாநுபவத்திற்குக் கிட்டேயிருப்பது. இதையே ப்ரபஞ்ச ரீதியில் விஸ்தாரம் பண்ணிப் பார்க்கும் போது ஸம்ஹாரம் என்ற பேரில் ஜீவர்களுக்குத் தற்காலிக சாந்தி கொடுக்கும் ருத்ரன்தான்

ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரஹ்மா, ஸ்திதிகர்த்தாவான விஷ்ணு ஆகியவர்களைவிட சாச்வத சாந்தி கொடுக்கும் பரப்ரஹ்மத்திற்குக் கிட்டேயிருப்பவன். அந்தப் பரப்ரஹ்மத்தைத்தானே சிவம் என்று சைவ, சாக்த சாஸ்திரங்களில் சொல்லியிருப்பது? ஆனபடியால்தான் ருத்ரனையே சிவன் சிவன் என்று பொதுவில் வித்யாஸம் பார்க்காமல் சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது. ருத்ரன் ஸம்ஹார மூர்த்தி, ஈச்வரன் திரோதானம் என்ற மாயா கார்யத்திற்கு மூர்த்தி, ஸதாசிவன் அல்லது சிவன் அநுக்ரஹ மூர்த்தி - அதாவது மோக்ஷாநுக்ரஹ மூர்த்தி - அதற்கும் மேலே க்ருத்யம் எதுவுமில்லாத ப்ரஹ்ம ஸ்வரூபமான சிவம் என்றெல்லாம் விஷயஜ்ஞர்கள் பாகுபாடு பண்ணினாலும் லோக வழக்கிலே ருத்ரன், ஈச்வரன், சிவன், சிவம் எல்லாம் ஒன்று என்றுதான் எண்ணமிருக்கிறது. ஆனால் ப்ரஹ்மா, விஷ்ணு என்றால் அவர்களை அந்தந்த மூர்த்தியாக மட்டுமே நினைக்கிறோம். வேறே எந்த மூர்த்தியோடும் ஒன்றாக நினைப்பதில்லை.

ஸ்வாமிக்குச் சொன்னதேதான் அம்பாளுக்கும். பரப்ரஹ்மத்தின் பூர்ண சக்தியாக இருக்கப்பட்ட பராசக்தியை - நம்முடைய ஸ்தோத்ர தேவதையான காமேச்வரி அந்த முழுமுதல் சக்திதான்; அவளை - ருத்ர பத்னியான பார்வதியாகத்தான் வித்யாஸமில்லாமல் நினைக்கிற வழக்கமிருக்கிறது; ஸரஸ்வதியாகவோ, லக்ஷ்மியாகவோ நினைக்கிறதில்லை. ஸௌந்தர்ய லஹரியிலேயே பராசக்தியை ''ஹிமகிரிஸுதே !'' ''துஹிநகிரிதநயே !'' என்பதுபோலப் பார்வதியின் அநேகம் பெயர்களில்தான் கூப்பிட்டிருக்கிறதே தவிர, ''ஸரஸ்வதியே ! லக்ஷ்மியே !'' என்று கூப்பிடவில்லை.

விஷயமென்னவென்றால், ருத்ரனுக்கே சிவ ஸாம்யம் (சிவனோடு ஸமநிலை). ப்ரஹ்ம விஷ்ணுக்களுக்கு இல்லை. இங்கே அம்பாளின் பாதத்தில் நீராஜனமாகக் கிரீடம் படிய நமஸ்காரம் செய்யும் தேவதைகளைச் சொல்ல (ஆசார்யாள்) நினைத்திருக்கிறார். அப்போது அவளுடைய பதியான சிவனை அப்படிச் சொல்வது முறையில்லை - லோகத்தின் ஒழுங்கு முறைக்கு அது ஸரியில்லை - என்று நினைத்திருக்கிறார். உத்தர பாகத்தில் முழுக்கக் காவ்ய ரஸங்களையே கொடுத்து ச்லோகங்கள் பண்ணும்போது வேண்டுமானால் ப்ரணய கலஹத்தில் (ஊடலில்) பரமசிவனே பராசக்தியின் காலில் விழுவதாகச் சொல்லலாமே தவிர, இந்த (பூர்வ) பாகத்தில் தத்வத்திற்கும் தந்த்ரத்திற்கும் ப்ராதான்யம் கொடுத்துப் பண்ணிக்கொண்டு போகும்போது அப்படிச் சொல்ல வேண்டாமென்று நினைத்திருப்பார் போலிருக்கிறது. முதல் ச்லோகத்திலேயேதான் அவள் பெருமையையும் அவர் சிறுமையையும் பளிச்சென்று சொல்லியாயிற்றே - அவளுடன் சேர்ந்தால்தான் அவர் அசையவே முடியும் என்று ! அடுத்த ச்லோகத்திலும் அவளுடைய ஒரு பாத ரேணுவைக் கொண்டுதான் அவர் ஸம்ஹார க்ருத்யமே பண்ணுவது என்று சொல்லியாயிற்றே ! இன்னமும் சும்மா சும்மா அவரை அவளுக்குக் கீழ் லெவலில் சொல்லிக் கொண்டிருக்க வேண்டாமென்றுதான் இங்கே சிவனைச் சேர்க்காமல் - சிவ ஸாம்யமாக நினைக்கப்படும் ருத்ரனையும் சேர்க்காமல் - முகுந்தனும் பிரம்மாவும் இந்திரனும் நமஸ்கரிப்பதாகச் சொல்லிவிட்டிருக்கிறார்.

மேலெழப் பார்த்தால் நான் சொன்னதற்கு வித்யாஸமாக ஒரு ச்லோகத்தில் சிவனுந்தான் அம்பாள் பாதத்தில் நமஸ்கரிக்கிறாரென்று ஸ்பஷ்டமாகச் சொல்வதாகத்

தோன்றும். ''உன் பாதத்துக்கு ஒரு அர்ச்சனை பண்ணிவிட்டால் போதும்; அதுவே த்ரிமூர்த்திகளுக்கும் பண்ணினதாகிவிடுகிறது. எப்படியென்றால் உன் பாதத்தில் அவர்கள் தங்கள் சிரஸை வைத்து, அதற்கும் மேல் தங்கள் கைகளை அஞ்ஜலியில் கூப்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆனபடியால் உன் காலில் பண்ணும் அர்ச்சனையே அவர்களுடைய சிரஸுக்கும் பண்ணியதாக ஆகிவிடுகிறது'' என்று அங்கே வருகிறது. அப்படியானால் சிவனுந்தானே அம்பாளுடைய நமஸ்காரக்காரர்களில் ஒருத்தராவதாகத் தெரிகிறது? ஆனால் ச்லோக வாசகத்தை கவனமாகப் பார்த்தால் அங்கே ருத்ரனுக்கும் சிவனுக்கும் ஸாம்யம் சொல்லக் கொங்சங்கூட இடம் கொடுக்காமல் த்ரிமூர்த்திகளில் ஒருத்தர் மட்டுமேயான ஸம்ஹார மூர்த்தியைத்தான் சொல்லியிருக்கிறதென்று தெரியும். அம்பாள் பாதத்தில் நமஸ்கரிக்கும் த்ரிமூர்த்திகளை அவளுடைய ஸத்வ ரஜோ தமோ குணங்கள் மூன்றில் ஒவ்வொன்றில் தோன்றியவர்களாக மட்டுமே 'க்ளிய'ராகச் சொல்லியிருக்கிறது: ''த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுண ஜநிதாநாம் தவ சிவே''. அம்பாளுடைய முக்குணங்களில தமஸில் ஜனித்த ருத்ரனைப் பற்றித்தான் இங்கே பேச்சு, அவளுடைய குணத்தில் பிறந்தவரென்றால் அவளுக்கே பிறந்த குழந்தை மாதிரிதானே? அந்தக் குழந்தை அம்மாவை நமஸ்காரம் பண்ணுவதும் நியாயந்தானே? பதி ஸ்தானம் பெற்ற பரமசிவன் நமஸ்கரிப்பதாக இல்லை என்பதற்கே சொன்னேன். த்ரிகுணங்களில் தோன்றிய மூவரான த்ரிமூர்த்திகளின் பூஜையும் அம்பாள் பூஜையிலேயே அடக்கம் என்ற ஐடியாவைச் சொல்ல நினைத்தால் அங்கே சிவனோடேயே ஸமமாக நினைக்கப்படும் ருத்ரனைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. பொதுவாக மஹா பெரிய தேவர்களும் அம்பாளைப் பூஜிக்கிறார்கள் என்ற ஐடியாவை டெவலப் பண்ணும் போதோ அப்படி நிர்பந்தமில்லாததால் சிவன். ஈச்வரன், ருத்ரன் என்று எந்தப் பெயரையும் போடாமல் முகுந்த, ப்ரஹ்ம, இந்த்ர என்று போட்டுவிட்டார். இங்கே இருப்பவர்கள் மஹா ப்ரளயத்தில் இல்லாமல் போய்விடுகிறார்கள்; அப்போதும் இருக்கிற ஒரே ஒருவர் இங்கே இல்லை!

## ''அத்வைத பக்தர்களுக்கு அழிவேயில்லை''

ஞாபகம் வரும்போதே, அந்த மஹா ப்ரளய நீராஜனம் வருகிற ச்லோகத்தில் ஒரு விஷயம் சொல்லிவிடுகிறேன். அந்த ச்லோகத்தில் ''த்வாம் அஹம்'' (''நீயே நான்'') என்று அம்பாளை அத்வைதமாக உபாஸிக்கிறவர்களுக்கு மஹா ப்ரளயாக்னி கர்ப்பூராரத்தி காட்டுகிறதென்று சொல்வதற்கு அர்த்தம் அப்போதும் அவர்கள் அழியவில்லை என்பதே. ஆனால் முன்னாடி ஒரு ச்லோகத்தில் (ச்லோ.26) மஹா ஸம்ஹார காலத்தில், அப்போதும் அவளோடு விஹாரம் பண்ணிக்கொண்டிருக்கும் (விளையாடிக் கொண்டிருக்கும்) பரமேச்வரன் ஒருவன் தவிர ஸகலரும், ஸகலமும், பிரம்ம விஷ்ணுக்கள் உள்பட, இல்லாமல் போய்விடுவதாகச் சொல்லியிருக்கிறார். பின்னே எப்படி இந்தத் த்வாம் - அஹம் உபாஸகர்களும் அழியாமல் தப்பினதாகச் சொல்லலாம்?

சொல்லலாந்தான். அவர்கள் அம்பாளுக்கு வேறாக இருந்தால் அழிய வேண்டியவர்கள்தான். ஆனால் அவர்களோ ஸகுணமான அம்பாளோடு அத்வைதமாக ஐக்யமாயிருப்பவர்கள் அல்லவா? ஸகுணந்தான்; நிர்குணமில்லை. நிர்குணத்திற்கு ஏது நீராஜனோபசாரம்? ஸ்வதேஹோத்பூதாபிர் - க்ருணிபிர் - அணிமாத்யாபிர் - அபிதோ என்று இங்கே அம்பாளைப் பற்றி வருவதால் அஷ்ட ஐச்வர்யங்களும் அவளுடைய

சரீரத்திலிருந்தே ரச்மிகளாக உத்பவித்து அவளைச் சூழ்ந்திருக்கும்படியான ஸகுண ஸ்திதியில்தான் இருக்கிறாளென்று நிச்சயப்படுகிறது. பவானி - த்வம் - தாஸன் மாதிரி இந்த ஸகுண அம்பாளோடு நிஜஸாயுஜ்யம் பெற்றவர்களாகத்தான் இங்கே சொல்லப்படும் 'த்வாம் - அஹம்' காரர்களையும் தெரிந்துகொள்ள வேண்டும். ஸகுணமோ, நிர்குணமோ எப்படியானாலும் அவளோடு வேறாயில்லாமல் ஒன்றிப் போனவர்கள். ஆனாலும் அவளுக்கு வேறாக 'அவர்கள்' என்று குறிப்பிட்டு, மஹா ப்ரளயாக்னியினால் அவர்கள் தீபாராதனை பெறுகிறார்கள் என்று சொல்லியிருக்கிறதே என்றால், அதற்குக் காரணம்: அவளுடைய இந்த ப்ரளயநாடக லீலையைத் தாங்களே பண்ணுவதாக அவர்களுக்கு அத்வைத பாவனை இருக்குமானாலும், அதோடேயே ஒரு மாதிரி கோத்துக் கொண்டு, ''இந்த அம்மா இப்படியொரு சக்தியோடு இப்படியொரு லீலை செய்கிறாளே!'' என்ற பக்தியின் ரஸிப்பும் ஆனந்தமும் இருந்துகொண்டேதான் இருக்கும். பிரபஞ்ச ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹார சக்தி வாஸ்தவத்தில் எந்த ஜீவாத்மாவுக்கும் வரவே முடியாது. அதாவது ஸகுண ப்ரமத்தோடு பூர்ணமான அத்வைதம் பெற்று பூர்ண ஐச்வர்யம் பெறுவது நடக்காத கார்யம். ஆனாலும் ரொம்ப உச்சி நிலையில் பக்தருக்கு ஸகுண ப்ரஹ்மம் பண்ணுவதெல்லாம் தானே பண்ணுகிற மாதிரி இருக்கும்; ரொம்ப ஆழமாகவே அந்த உணர்ச்சி இருக்கும். ஆனாலும் அஸலே அப்படி ஆகமுடியாது. இந்தக் குறைக்கு நிவ்ருத்தியாக, இதை இட்டு நிரப்புவதாக, அவள் பண்ணுவதை பக்தியோடு பார்த்து ஆனந்திப்பதாக இருக்கும். ஸகுணமாக உள்ள நிலையில் பரமாத்மா தரும் சிகர அநுபவம் இதுவே! ஸரியாகச் சொன்னால் இப்படியொரு சிகர அநுபவத்தை யாரோ கோடாநு கோடியில் ஒருத்தருக்குக் கொடுப்பதற்காகத்தான் பரமாத்மா ஸகுணமாகவே இருக்கிறதோ என்னவோ?

இப்படி த்வைதாத்வைதமாக அம்பாளோடு இருப்பவர்களை ப்ரளய விளையாட்டைப் பார்ப்பதற்காகவேதான் த்வைதமாக அவள் வைத்திருக்கிறாள். அப்டிச் சொன்னால் அந்த விளையாட்டுக்குள் அவர்கள் மாட்டிக்கொள்ளவில்லை என்றுதானே அர்த்தம்? ப்ரபஞ்ச நாடகத்துக்குள்ளேயே நடிப்பவர்களாக மாட்டிக்கொண்டவர்கள்தான் அதில் ப்ரளய ஸீன் வரும்போது அதிலும் மாட்டிக்கொண்டு அழிந்து போவார்கள். நடிப்பவர்களாக இருக்கிற நிலைக்கு ராஜிநாமா கொடுத்துவிட்டு, நாடகம் பார்க்கிறவர்களாக வெளியிலே உட்கார்ந்து கொண்டிருப்பவர்கள் நாடக ஸீனில் நடப்பதற்கு எப்படி ஆளாவார்கள்?

ஆனபடியால், ஸகுண அம்பாளோடு ஒரு தினுஸில் அத்வைத பாவம் பெற்றவர்கள் என்ற முறையிலும் ஸரி, த்வைதமாக அவளுடைய நாடகத்தைப் பார்ப்பவர்கள், பார்க்க மட்டுமே செய்கிறவர்கள், நடிக்கிறவர்களில்லை என்ற முறையிலும் ஸரி, அந்த 'த்வாம் - அஹம்'காரர்கள் ப்ரபஞ்ச நடப்புகளுக்கு அப்பாற்பட்டவர்கள். ''சிவன் ஒருத்தனே மிஞ்சுவான்'' என்று சொல்லும் ச்லோகத்தில் ப்ரபஞ்சத்தில் மாட்டிக்கொண்ட அத்தனை பேரும் அழிந்து போகும்போதும் அவன் மாத்திரமே தப்புகிறான் என்ற அர்த்தத்தில்தான் சொல்லியிருக்கிறார். ஆகையால் அங்கே அப்படிச் சொல்லிவிட்டு இங்கே அப்படி மாட்டிக்கொள்ளாத 'த்வாம் - அஹம்'காரர்கள் ப்ரளயாக்னியையே நீராஜனமாகப் பெறுகிறார்கள் என்பதில் முரண்பாடேதுவும் இல்லை.

'சிவன்' என்று நாம் பொதுப்பேரில் சொல்கிறவன் காமேச்வர சிவனாகவும், சிவம் என்ற நிர்குண தத்வமாகவும் இருக்கும்போதுதான் ப்ரபஞ்சத்தில்

மாட்டிக்கொள்ளவில்லை. ஆனால் ருத்ரனென்றும், மஹேச்வரனென்றும், ஸதாசிவனென்றும் ப்ரபஞ்சகார்யங்களில் மூன்றை நிர்வஹிக்கும்போது அவனும் அதில் மாட்டிக்கொண்டவன்தான். ப்ரளயத்தில் ப்ரபஞ்சம் அழிகிறபோது ருத்ரன் அதை அழிப்பவனாக வெளியிலே இருந்தாலும், அந்த அழிவின் முடிவில் அவனும் அழிய வேண்டியதுதான். இல்லாவிட்டால் ப்ரபஞ்சம் போனவிட்டும் ஸம்ஹார மூர்த்தி என்று ஒருத்தன் ஒரு கார்யமுமில்லாமல் இருப்பதாக அல்லவா ஆகும்? ஒரு ஆபீஸை எடுத்துவிட்டால் அந்த ஆபீஸிலுள்ள அதிகாரிகளும் போக வேண்டியதுதானே? ப்ரபஞ்சமே போய்விடும் போது அதிலே பஞ்ச க்ருத்யம் செய்யவே ஏற்பட்ட அதிகாரிகளும் போய்விடவேண்டியதுதான். ஸ்ருஷ்டிக்கவோ, பரிபாலிக்கவோ, ஸம்ஹரிக்கவோ, மாயையில் பிடித்துப்போடவோ, பிடித்துப் போட்டதிலிருந்து விடுவிக்கவோ ஜீவர்கள் யாருமே இல்லாதபோது ப்ரஹ்மாவிலிருந்து ஸதாசிவன் வரையிலான மூர்த்திகளும் இருக்கவேண்டியதில்லை. அப்படித்தான் நடக்கிறது. அம்பாளின் ஸௌமங்கல்யத்தை உத்தேசித்து அவளுடன் அபின்னமாயிருக்கும் காமேச்வரனும், அவளுக்கு ஆதாரபூதமாக இருக்கும் நிர்குண சிவமுந்தான் அப்போதும் இருப்பது. சிவத்தின் நித்யஸத்யத்தைச் சொல்லவேண்டிய அவசியமேயில்லை. அது ஒருபோதும் இல்லாமலிருக்கமுடியாது. அதை விட்டால் பரப்ரஹ்ம சக்தியின் பதியாக - (சிரித்து) ஒப்புக்கோஸரம் பதியாக - உள்ள காமேச்வர சிவனொருத்தன்தான் மஹாப்ரளயத்திலும் மிஞ்சுவது. இவளுடைய விளையாட்டில் இவளோடு சேர்ந்து விளையாடவே அவன் ஏற்பட்டதால்தான் ''விஹரதி ஸதி த்வத் - பதிரஸௌ'' (''ஸதிதேவியே ! உன்னுடைய இந்தப் பதி விளையாடுகிறார்'') என்று (26-வது ச்லோகத்தில்) சொல்லியிருக்கிறார். பரப்ரஹ்ம சிவத்தையே அவளுக்குப் பதியாக நினைத்தும் பின்னாடி ''பரப்ரஹ்ம மஹிஷி'' என்று அவளை ஆசார்யாள் சொல்லியிருப்பது ப்ரஸித்தம். ஆனால், கூடச் சேர்ந்து விளையாடுவதென்பது நிர்குணத்திற்குப் பொருந்தாதாகையால் இங்கே காமேச்வர சிவன் என்று அர்த்தம் பண்ணியது.

'த்வம் - அஹம்'காரர்களைச் சொல்லும் ச்லோகத்தில் அவர்கள் அந்த சிவனுடைய ஐச்வர்யத்தையும் த்ருணமாத்திரமாக நினைப்பவர்கள் என்று ஒரே உசத்தியாக உசத்தி வைத்து, ஸ்வாமியை ஒரே இறக்காக இறக்கிச் சொல்லியிருக்கிறார்: ''த்ரிநயந ஸம்ருத்திம் த்ருணயத:'' என்ற அழகான சப்தாலங்காரத்தோடு ! முக்கண்ணனின் ஐச்வர்யமே 'த்ரிநயந ஸம்ருத்தி. அதைப் புல்லளவாக நினைக்கிறார்களாம் - 'த்ருணயத:' ஏனிப்படிச் சொன்னாரென்றால் அவனுக்கு 'ஈச்வரன்' என்று பெத்தப் பேர் இருந்தாலும் ஸொந்தத்தில் 'ஐச்வர்யம்' ஏது? பராசக்தியா, ஸர்வரின் ராணியாகவுள்ள அவள்தானே அவனை ஈச்வரனாக வைத்திருப்பதே ! அவள் கொடுத்த ஐச்வர்யத்தை, (சிரித்து) by Her leave - அவளுடைய தயவில் - கட்டியாளுகிறவன்தான் அவன். ஆனால் ''நீயே நான்'' என்று உபாஸனை பண்ணி அப்படியே அவள் ஆக்கிக் கொண்டவர்களோ அவளுடையதேயான அந்த ஐச்வர்யத்தை, சக்தியை அவளோடு ஒன்றுபட்ட தங்களுடையதாகவே கண்டுகொள்கிறார்கள். இந்த காம்பீர்யத்திற்கு முன்னாடி ஈச்வரன் பெறுகிறது ஒன்றுமேயில்லை. அவனுக்கு அவள் பூர்ண ஐச்வர்யத்தையும் கொடுக்கவுமில்லை. இன்னும் வேறே பல அதிகாரிகளுக்கும் அதில் பங்கு போட்டுக் கொடுத்திருக்கிறாள். அவளோடு ஏகீ பாவம் பெற்ற 'த்வாம் - அஹம்'காரர்களே

*அவளுடைய பூர்ண ஐச்வர்யத்தையும் தங்களுடையதாக அநுபவிப்பவர்கள். அதனால்தான் ''திரிநயந ஸம்ருத்திம் த்ருணயத:'' என்றார்...*

*அத்வைதமான பக்தியுபாஸனையைப் பெருமைப்படுத்துவதற்காக இப்படி உசத்திச் சொன்னது. அப்படியேயதார்த்தம் என்று நினைத்துவிடக்கூடாது. அம்பாள் ஈச்வரன் வேறே வேறே இல்லவேயில்லை. அவளுடையதெல்லாம் அவருடையதுந்தான். அவளே அவருடைய ஐச்வர்யந்தான்: ''ஐச்வர்யம் இந்துமௌளே:''' என்று மூகர் பாடியிருக்கிறார்.*

*''த்வாம் அஹம்'', ''நீ நான்'' என்று உபாஸிக்கிறவர்களின் காம்பீர்யத்தைச் சொன்னேன். ஆனால் ''நான் நீ'' என்று சொல்லாமல் ''நீ நான்'' என்று அவர்கள் சொல்வதிலேயே விநயமும் இருக்கிறது. மஹாவாக்யங்களில் ஒன்று ''நான் ப்ரஹ்மமாயிருக்கிறேன்' என்கிறது; இன்னொன்று 'இந்த ஆத்மா, அதாவது ஜீவாத்மாவாகத் தெரிவது ப்ரஹ்மமமே' என்கிறது. இங்கே சொன்ன ''நீ நான்'' - உம் அந்த மஹாவாக்யங்களும் தாத்பர்யத்தில் ஒன்றேதான் என்றாலும், ஸரியாகப் புரிந்துகொள்ள முடியாதவர்கள் அங்கே (மஹாவாக்யங்களில்) சொல்லமைப்பை மட்டும் பார்த்தால், ப்ரஹ்மந்தான் ஜீவனாயிருப்பது என்று புரிந்துகொள்ளாமல், ஜீவபாவத்திலிருப்பவன்தான் ப்ரம்மம் என்று தன்னையே சொல்லிக் கொண்டிருக்கிறான் என்று தப்பர்த்தம் பண்ணிக் கொள்ள இடமிருக்கிறது. குருமுகமாக வரும் மஹாவாக்யத்தில்தான் இந்தக் குழறுபடிக்கு இடமில்லாமல், ''அது (ப்ரஹ்மம்) நீயாயிருக்கிறாய்'' என்று தெளிவாக வருகிறது. இங்கேயும் 'த்வாம் அஹம்' என்பதில் அதேபோல 'நீதான் நானானது' என்று த்வனிக்கிறது. 'நீயில்லாமல் நானென்று ஒன்றுமில்லை' என்ற விநயம் அதில் இருக்கிறது. வாசகத்திலேயே ஸத்யம் ஸ்பஷ்டமாகத் தெரிவதோடு விநயமுமிருக்கிறது. அதே ஸமயத்தில் அம்பாளின் ஐச்வர்யத்தில் பூர்ண பாத்யதை அநுபவிக்கிற காம்பீர்யமும் ! அதை வைத்துத்தான் உபாஸகலோகத்தை உத்ஸாஹப்படுத்துவதற்காக ஆசார்யாள் ஈச்வரனுடைய ஐச்வர்யமும் இவனுக்கு த்ருணமாத்திரம் என்று கூட்டிச் சொன்னது...*

*ஏகீபாவம் பெற்ற ஜீவன், அம்பாளோடு எப்போதும் அபின்னமாயிருக்கும் ஸ்வாமி இரண்டு பேருக்கும் அழிவேயில்லை என்பதுதான் மொத்தத்தில் விஷயம்.*

### *''அம்பாளுடைய கற்புச் சிறப்பு''*

*மற்ற எல்லோரும் அழிந்து போய்விடும் மஹாஸம்ஹார காலத்திலும் ஸ்வாமி மட்டும் அம்பாளோடு விளையாடிக் கொண்டிருப்பதை அந்த ச்லோகத்தில் பேர் பேராகச் சொல்லி விவரிக்கிறார்: (ச்லோ.26)*

*அந்த மஹா ப்ரளயத்திலே ''விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி'' - பிரம்மா அழிவை அடைகிறார். ''ஹரி: ஆப்நோதி விரதிம்'' - விஷ்ணு ஃபுல் ஸ்டாப்பாகிவிடுகிறார் ! ''விநாசம் கீநாசோ பஜதி'' - எல்லாரையும் நாசமடையச் செய்கிறானே யமன், அவனும் நாசமடைகிறான். 'கீநாசன்' என்பது யமனுடைய ஒரு பேர். ''தநதோ யாதி நிதநம்'' - செல்வத்திற்கு எவனை மிஞ்சி இல்லையோ அவனையும் அப்போது அத்தனை செல்வமும் காப்பாற்ற முடியாது. அவனும் முடிந்து போகிறான்: ''யாதி நிதநம்''. தநதன் என்றால் குபேரன். நிதநம் என்றால் முடிவு. தநத - நிதந, விநாச - கீநாச என்று, அந்த மஹா*

ப்ரளயத்திலும் அம்பாள் விளையாடுகிற மாதிரி, ஆசார்யாள் வார்த்தைகளோடு விளையாடுகிறார்! ''விதந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலித த்ருசா'' - ஒரு இந்திரனில்லை, அநேக இந்திரர்கள் சேர்ந்த பட்டாளமே கண்மூடிப்போய் ''மீளா நித்திரை'' என்பதை அடைந்துவிடுகிறது. கண்மூடாத தேவர்களின் கண்மூடிப் போகிறது! ஸ்ருஷ்டி ஆரம்பத்திலிருந்து அந்த ப்ரளய பர்யந்தம் அநேக மன்வந்தரங்களும், ஒவ்வொரு மன்வந்தரத்திற்கும் ஒரு புது இந்திரனும் வந்திருப்பார்களாதலால் இந்திரப் பட்டாளம் - ''மாஹேந்தரீ விததி:'' - என்று போட்டிருக்கிறார்.

இப்படிப்பட்ட ஸர்வ ஸம்ஹார காலத்திலும் - ''மஹா ஸம்ஹாரே (அ)ஸ்மிந்''; அப்போதுங்கூட, ''விஹரதி ஸதி த்வத் பதி - ரஸௌ'' - உன்னுடைய பதி இருக்கிறானே, அவன் மட்டும் உன்னோடு விளையாடிக் கொண்டிருக்கிறான்!

''ஸதி'' என்று அம்பாளைக் கூப்பிட்டுச் சொல்கிறார். அர்த்த புஷ்டியோடுகூடத்தான் அந்தப் பெயரைச் சொல்லிக் கூப்பிடுகிறார். ஸதி என்றால் பரம பதிவ்ரதை. பதிக்கு மரியாதை இல்லாத இடத்தில் தான் ப்ராணதாரணம் பண்ணுவதே பாபம் என்று (தக்ஷனின்) யஜ்ஞ சாலையில் ஜீவனையே விட்ட அம்பாளின் பெயர் அது. அவள் அந்த ரூபத்தில் அப்போது முடிந்து போனாலும் வாஸ்தவத்தில் அழியவே முடியாத நித்யை. ப்ரஹ்ம சக்தி எப்படி முடிய முடியும்? நித்யையாயுள்ள அவள் ஸதியான பதிவ்ரதையாயிருக்கிறாள். ஆனபடியால், அவளுடைய பதியும் அழிவே இல்லாதவனாகத்தானே இருந்தாகணும்? வேறே மாதிரி நடந்துவிட்டால் அந்த ஸதி - கற்பரசி - மஹா ப்ரளயாக்னியில் தானும் விழுந்து 'ஸதி' பண்ணிக்கொண்டுவிடுவாள்! ஆகையால் அந்த ஸதியின் நித்ய ஸௌமங்கல்யத்தை முன்னிட்டேதான் அவளுடைய பதியும் அந்த ப்ரளயத்தில்கூடப் பிழைத்துப் போகிறார்.

இதே அபிப்ராயத்தைத்தான் ''தாடங்க மஹிமா'' என்னும்போதும் தெரிவித்திருக்கிறார் - தவ ஜநநி தாடங்க மஹிமா.

''ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபய ஜரா - ம்ருத்யு - ஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதி-சதமகாத்யா திவிஷத: ।
கராலம் யத் க்ஷ்வேலம் கபலிதவத: காலகலநா
ந சம்போஸ் - தந் - மூலம் தவ ஜநநி தாடங்க மஹிமா ॥''28

(ஜநநி தாயே! (ப்ரதிபய) மிகவும் பயங்கரமான (ஜராம்ருத்யு ஹரிணீம்) மூப்பையும் சாவையும் இல்லாமற் செய்யும் (ஸுதாம்) அமுதத்தை (ஆஸ்வாத்ய அபி) அருந்தியுங்கூட (விதி சதமகாத்யா:) பிரம்மா, இந்திரன் முதலான (விச்வேதிவிஷத:) அனைத்து தேவர்களும் (விபத்யந்தே) (மஹா ப்ரளயத்தின்போது) அழிவுறுகின்றனர். (அப்போதும்) (கராலம்) மிகக் கொடியதான (க்ஷ்வேலம்) (காலகூட) விஷத்தை (கபலிதவத:) உண்டவரான (சம்போ:) சிவபெருமானுக்கு (மட்டும்) (கால கலனா) காலனுக்கு ஆட்படுவதென்பது (ந யத்) கிடையாதென்றால் (தந் மூலம்) அதற்குக் காரணம் (தவ) உனது (தாடங்க மஹிமா) தாடங்கத்தின் மஹிமைதான்.)

விஷத்தை, அதிலும் மஹா உக்ரமான காலகூட விஷத்தை, சாப்பிட்டவர் உடனே

க்ளோஸாக வேண்டியதுதான்; அம்ருதம் சாப்பிட்டவர்களோ என்றைக்கும் சாகாமலிருப்பார்களென்று தாம் நினைத்துக்கொண்டிருக்கிறோம். ஆனால் இங்கே நடக்கிற கதையோ தலைகீழாயிருக்கிறது! ஸர்வஸம்ஹார காலத்திலே, அம்ருதம் சாப்பிட்ட தேவர்களெல்லாரும்கூட அழிந்துபோய்விடுகிறார்கள். காலகூடம் என்றும் ஹாலாஹலம் என்றும் சொல்லும் பயங்கர விஷத்தைச் சாப்பிட்ட பரமேச்வரன் ஒருத்தன் மாத்திரம் மிஞ்சி நிற்கிறான்!

## "ஈசனோடும், ஏனைய தேவரோடும் அம்பிகையின் மாறுபாடான லீலை"

ஒரு வேடிக்கை என்னவென்றால் இங்கே அவன் மட்டும் தனித்து ஒரு பக்கம், மற்ற தேவர்களெல்லாம் சேர்ந்து ஒரு பக்கம் என்று இருக்கிற மாதிரியேதான் அம்பாள் ஸேவையிலும் இருக்கிறது! முகுந்த-ப்ரஹ்ம-இந்திரர் என்று சொன்னால் பாக்கி எல்லா தேவதைகளும் அதில் அடக்கந்தான்; அப்படி, எல்லா தேவதைகளும் அம்பாளின் சரணத்தில் தங்களுடைய கிரீடம் சூடிய சிரஸு பட ஸேவிக்கிறார்கள். அப்போது ஈச்வரன் ஒருத்தன் மாத்திரம் ஸேவிக்காமல் தனிக் கக்ஷியாக இருக்கிறான். அந்தக் கிரீடக்காரப் பிரமுகர்களோடு சடையாண்டியான அவன் சேரவில்லை! ஸேவிக்கிறவர்களுக்கும், ஸேவிக்காதவனுக்கும் அவள் எப்படி ப்ரதி பண்ணுகிறாளென்று பார்த்தால்தான் விசித்ரமாயிருக்கிறது! ஸேவித்தவர்களெல்லாம் ப்ரளயத்தில் அழிந்துபோகிறார்கள்! ஸேவிக்காதவன் மாத்திரம் அப்போதும் விளையாட்டுப் பார்த்துக்கொண்டு, அவளோடேயே விளையாடுகிறான்!

ஸேவிக்கிறவர்களின் கிரீடங்களையெல்லாம் இடறிக் கொண்டு, ஸேவிக்காதவனை ஸேவிப்பதற்காக அம்பாள் ஓடுகிறுள் என்று கூட ஒரு சுலோகம் இருக்கிறது. தேவ ச்ரேஷ்டர்களெல்லாம் அவளுடைய சரணத்திலே தங்களுடைய கிரீடங்களைச் சாய்த்து நமஸ்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்களாம். அப்போது ஈச்வரன் எங்கேயோ போய்விட்டுத் திரும்பிவருகிறாராம். அவர் எங்கேயோ தூரத்தில் வருகிறதைப் பார்த்தவுடனேயே அம்பாளுக்குப் பதிபக்தி, ப்ரேமை இரண்டும் பொங்கிக்கொண்டு வருகிறதாம். அவரை எதிர்கொண்டழைக்கணும் என்று தன் ஆஸனத்தைவிட்டு எழுந்து ஓடுகிறாளாம். அப்போது அவளுடைய சேடிகள், பார்த்துப் போகும்படி அவளை எச்சரிப்பதாக ச்லோகம் பண்ணியிருக்கிறார். விஷயம் என்ன, ஸந்தர்பம் என்ன என்று சொல்லாமல் சேடிகளுடைய எச்சரிக்கை வார்த்தைகளை மட்டுமே சொல்லி ச்லோகத்தை ஆரம்பித்து பெரிய drama - effect கொடுத்து விடுகிறார்:(ச்லோ-29)

''கிரீடம் வைரிஞ்சம் பரிஹர'' - ''ப்ரம்மாவோட கிரீடத்திலேயிருந்து விலகிப் போங்கோ.'' (இது அம்பிகையின் காலடியில் பணியும் பிரம்மாவின் கிரீடத்தில் அவள் தடுக்கிக் கொள்ளாமலிருப்பதற்காக அவளது சேடியர் செய்யும் எச்சரிக்கை.)

'வைரிஞ்சம்' என்றால் 'விரிஞ்சியான ப்ரம்மாவுடைய'. பிரம்மாவுடைய பல பேர்களில் 'விரிஞ்சி' என்கிறதைத்தான் ஆசார்யாள் நிறைய 'யூஸ்' பண்ணியிருக்கிறார். ஆரம்ப ச்லோகத்திலேயே ''ஹரி-ஹர-விரிஞ்சாதி'', அடுத்த ச்லோகத்திலும் ''விரிஞ்சி: ஸஞ்சிந்வன்''. ''விரிஞ்சி ப்ரப்ருதய'' என்று கவிகளின் கூட்டத்தைச் சொல்லுமிடத்தில்

*''விசேஷேண ரிஞ்சதீதி விரிஞ்சி:'' என்று டெஃபனிஷன் சொல்லியிருக்கிறது. 'ரிஞ்சதி' என்றால் 'ஸ்ருஷ்டி பண்ணுகிறார்' என்றும், இந்தக் காரியத்தை, 'விசேஷமாக' அதாவது தமக்கே உரிய சிறப்புப் பணியாக ப்ரம்மா செய்கிறார் என்பதால் 'விரிஞ்சி' என்று பெயர் என்றும் எக்ஸ்ப்ளெய்ன் பண்ணியிருக்கிறது. விசேஷம் கொடுத்திருக்கிறார் போலிருக்கிறது !...*

*''விரிஞ்சியின் கிரீடத்தை விட்டு விலகி நடங்கோம்மா!''*

*அப்புறம், ''கைடபபித: கடோரே கோடீரே ஸ்கலஸி'' - ''கைடபாஸுரனைப் பிளந்து தள்ளினவர் இருக்கிறாரே - அதுதான் விஷ்ணு - அவருடைய கெட்டியான கிரீடத்திலே தடுக்கிண்டுடப் போறேள்! பார்த்துப் போங்கோ!''*

*மது-கைடபர்கள் விஷ்ணு நித்ரை பண்ணிக்கொண்டிருக்கும்போது அவருடைய நாபி கமலத்தில் இருக்கும் பிரம்மாவை வதைக்க வந்தார்கள். அப்போது அவர் தூங்குகிற தகப்பனாரைத் தானாக எழுப்ப முடியாது என்பதால் அவரை அப்படி யோக நித்திரையில் தள்ளி, அந்த யோக நித்ரையாகவே இருக்கும் அம்பாளை வேண்டிக்கொண்டு, அவள் அநுக்ரஹத்தால்தான் அவரை எழுந்திருக்கப் பண்ணவேண்டுமென்று நினைத்து அவளை ஸ்தோத்ரம் பண்ணினார். அவளும் அதே மாதிரி மஹாவிஷ்ணுவை ஆக்ரமித்திருந்த... அப்படிச் சொன்னால் விஷ்ணு பக்தர்களுக்குக் கோபம் வருமோ என்னவோ? அதனால் 'ஆச்ரயித்திருந்த' என்று வேண்டுமானால் திருத்திக் கொள்கிறேன்... விஷ்ணுவை ஆச்ரயித்திருந்த தன்னுடைய நித்ரா சக்தியை விலக்கிக்கொண்டாள். அவரும் எழுந்திருந்து மதுகைடபர்களை வதம் பண்ணினார். நம் ச்லோகத்தில் ப்ரம்மாவைச் சொன்னவுடனே விஷ்ணுவையும் சொல்ல நேர்ந்தால் இரண்டு பேரையும் அம்பாளுடன் ஸம்பந்தப்படுத்துவதான மதுகைடபவ்ருத்தாந்தத்தை allude பண்ணுகிறார்போல ''கைடபபித்'' என்று விஷ்ணுவுக்குப் பேர் போட்டிருக்கிறார்.*

*அவருடைய கிரீடம் 'கடோர'மாயிருக்கிறது என்கிறார்: 'கடோரே கோடீரே' 'கோடீரம்' என்றால் கிரீடம். ''குருவிந்த மணி-ச்ரேணீ-கநத்கோடீர-மண்டிதா'' என்று லலிதா ஸஹஸ்ரநாமத்தில் அம்பாளை ரத்னமயமாக ப்ரகாசிக்கிற கிரீடம் அணிந்தவள் என்ற அர்த்தத்தில் சொல்லியிருக்கிறது. கடோரமான கிரீடம் என்றால் கெட்டியான கிரீடம். 'போல்' இல்லை; அப்படியே 'ஸாலி'டா இருக்கும் கிரீடம். ஏன் என்றால், அதற்கு விடை ஆசார்யாளின் 'விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ர'த்தில் இருக்கிறது. க்ருத - மகுட - மஹாதேவ - லிங்க - ப்ரதிஷ்டே என்று அங்கே சொல்கிறார். சிவலிங்க ரூபமாகவேயுள்ள கிரீடத்தை விஷ்ணு வைத்துக் கொண்டிருக்கிறாராம் ! சிவலிங்கமென்றால் போலாயில்லாமல் 'ஸாலி'டாகத்தானே இருக்கணும்? வேடிக்கை என்னவென்றால், அம்பாள் பக்தியிலே, அந்த லிங்கத்திற்கு அபசாரமாச்சே என்பதைக்கூட மஹாவிஷ்ணு நினைத்துப் பார்க்காமல் கிரீடத்தை அவளுடைய பாத பீடத்தில் சாய்த்திருக்கிறார்? அம்பாளும் பதியிடம் பரமபக்தியில் ரிஸீவ் பண்ண ஓடும்போதே அந்த லிங்கத்தைக் காலால் இடறப் பார்க்கிறாள்! பக்தியும் ப்ரேமையும் ஒரேயடியாக மேலிடும் போது - கண்ணப்பர் சிவலிங்கத்தின் நேத்ர ஸ்தானத்திலேயே செருப்புக் காலை ஊன்றிக் கொண்ட மாதிரி - எந்த அபசாரமும் அபசாரமாவதில்லை!*

முகுந்த - ப்ரஹ்ம - இந்த்ரர்களின் மகுடங்கள் அம்பாள் பாதத்திற்கு நீராஜனம் செய்வதாக முன்னால் சொன்னதற்கேற்ப இங்கேயும் ப்ரஹ்ம - விஷ்ணுவைச் சொன்னதற்கப்புறம் இந்திரனைச் சொல்கிறார் - ''ஜஹி ஜம்பாரி மகுடம்''. ஜம்பன் என்ற அஸுரனைக் கொன்றதால் இந்த்ரனுக்கு ஜம்பாரி என்று பெயர். ''இந்த்ரனோட கிரீடத்தை ஒதுக்குங்கோ; அதுலே பாதத்தை இடிச்சுண்டுடாதேள்!'' - இப்படியெல்லாம் அம்பாளுடைய சேடிகள் அவளுக்கு எச்சரிக்கை பண்ணுகிறார்கள். அம்பாளை நேரில் நிறுத்தி வைத்துக்கொண்டு ஸ்தோத்ரிக்கும் ஆசார்யாள் ''தவ பரிஜநோக்தி: விஜயதே - இப்படியெல்லாம் உன்னுடைய பரிவாரப் பணிப்பெண்கள் சொல்வது அத்புதமாக விளங்குகிறது'' என்கிறார்.

அவர்களுடைய எச்சரிக்கை வசனங்களை முதலில் ட்ராமாவாகக் கொடுக்கிறார். முடிக்கும்போது எச்சரிக்கை பண்ணுவது யாரென்று அதாவது அம்பாளுடைய பணிப்பெண்களென்று, தெரிவித்திருக்கிறார். நடுவிலே எந்த ஸந்தர்பத்திலே என்று - அதுதானே முக்யம்? அதை - சொல்லியிருக்கிறார்... ''ப்ரணம்ரேஷ்வேதேஷு'' - 'ச்லோகத்தில் சொன்ன தேவ ச்ரேஷ்டர்கள் நமஸ்காரம் பண்ணிக்கொண்டிருக்க'. அவர்கள் நமஸ்காரம் பண்ணுவதுதான் ஸந்தர்பமாக என்றால், இல்லை. ஸந்தர்பம் என்றால் குறிப்பிட்ட ஒரு காலத்தில் மட்டும் நடப்பது. தேவர்கள் நமஸ்கரிப்பதோ ஸதா காலமும் நடப்பது; ''சச்வந் (சாச்வதமாக) முகுளித கரோத்தம்ஸ மகுடா:'' என்று இன்னொரு இடத்தில் (ச்லோ.25) சொல்லியிருக்கிறாரே! பின்னே இங்கே சொல்லும் ஸந்தர்பம் - 'கான்டெக்ஸ்ட்' - என்ன? அதை ''பவன் என்கிற சிவன் பவனமான உங்கள் க்ருஹத்திற்குத் திரும்பி வரும்போது'' - 'உபயாதம்' என்றால் திரும்பிவருவது. அப்போது அம்பாள் எழுந்திருந்து எதிர் கொண்டழைப்பதைத்தான் 'அப்யுத்தானம்' என்கிறார்.

''அப்யுத்தாநம் அதர்மஸ்ய'' என்ற வார்த்தை கேட்டமாதிரி இருக்கலாம்! பகவான் கீதையில் (IV.7) சொல்வதுதான்.

> ''யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் - பவதி பாரத ।
> அப்யுத்தாநம் அதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥

''எப்போது எப்போது தர்மத்திற்குக் குறைவு வருகிறதோ, அதர்மத்திற்கு ''அப்யுத்தானம்'' உண்டாகிறதோ அப்போதெல்லாம் நான் என்னையே அவதாரமாகப் படைத்துக்கொள்கிறேன்'' என்று சொல்கிறார். இங்கே 'அப்யுத்தானம்' என்பதற்கு 'எழுந்திருப்பது' என்பதை வைத்து 'எழுச்சி' என்று அர்த்தம் பண்ணுவது வழக்கம். 'அப்யுத்தானம்' என்பதற்கு எழுந்திருப்பதோடு எதிர் கொண்டழைக்கப் போவது என்ற அர்த்தமும் ஸௌந்தர்யலஹரியில் கிடைக்கிறது. இதைப் பார்க்கிறபோது கீதை ச்லோகத்தில்கூட இப்படியே அர்த்தம் பண்ணலாமோ, பகவானை அவதாரம் பண்ணும்படியாகப் பாதி வழிபோய் இழுத்துக்கொண்டு வருவதே அதர்மந்தான் என்று அர்த்தம் பண்ணலாமோ என்று... (நெடு நேரம் சிரிக்கிறார்.) ராவணன், கம்ஸன், ஹிரண்யகசிபு அதர்மம் பண்ணினதுதானே அவரை அவதாரம் பண்ணும்படியாக இழுத்துக் கொண்டுவந்தது? அதனால் நாம் எல்லோரும் நிறைய அதர்மம்... (வெகுவாகச் சிரிக்கிறார்)! ஆனால் அதர்மம் பண்ணியவர்களுக்கு அவதாரங்களால் என்ன கதி ஏற்பட்டது? அதையும் மறந்துவிடப்படாதே!...

ஈச்வரன் அகத்துக்குத் திரும்பும்போது அவனை வரவேற்கிற துடிப்பில் - ''ப்ரஸபம்'' என்று வருவதற்கு 'ஒரே வேகமாகத் துடித்துக் கொண்டு' என்று அர்த்தம் - அப்படி அம்பாள் எழுந்திருந்து ஓடுகிற ஸந்தர்பத்தில்தான் அவளுடைய சரணங்களில் படிந்துகிடக்கிற தேவர்களின் கிரீடங்களில் அவள் இடறிக் கொள்ளாமல் ஜாக்ரதையாகப் போகும்படி சேடிகள் எச்சரிக்கிறார்கள்.

சரண ஸேவை செய்த இவர்களையெல்லாம் அம்பாள் மஹாப்ரளய காலத்தில் அழிந்துபோக விட்டுவிட்டு, தான் யாருடைய சரணத்தில் விழணும் என்று ஓடினாளோ அவருக்கு மட்டும் அப்போதும் ரக்ஷையாக இருக்கிறாள்!

காலில் விழுந்தவர்களை இப்படிக் கைவிடலாமா என்றால் வாஸ்தவத்தில் அவர்கள் அந்த ப்ரளயத்தில் அழிந்தா போகிறார்கள்? அவர்களுடைய சரீரந்தான் அழிகிறது. உயிர்? அவளோடேயே ஐக்யமாகிவிடுகிறது. அதைவிட என்ன உண்டு? கவி சாதுர்யத்திற்காக மற்றவர்கள் செத்துப்போகிறார்களென்றும், ஈச்வரன் மாத்திரம் அம்பாளுடைய பாதிவ்ரத்யத்தினாலும், ஸௌமங்கல்ய விசேஷத்தாலும் அப்போதும் பிழைத்திருக்கிறானென்றும் சொல்லியிருக்கிறது.

அந்தப் பாதிவ்ரத்ய, ஸௌமங்கல்ய ஸமாசாரங்களும் வாஸ்தவந்தான். அதனால்தான் ப்ரளய காலத்தில் மற்ற தேவர்களுக்கு சரீர ஹானி ஏற்படுகிற மாதிரி ஈச்வரனுக்கு ஏற்படாமல் அவனுடைய சரீரமும் சாச்வதமாயிருக்கிறது. எப்போதுமே அவனுடைய உயிரும் அம்பாளுடைய உயிரும் ஐக்யமாயிருப்பவைதான். இரண்டு சரீரங்களில் அவர்கள் தனித்தனியாக இருக்கிறபோதும் இரண்டு பேர் உயிரும் ஒரே பேருயிராக ஐக்யப்பட்டுத்தான் இருக்கிறது. சரீரங்களை வைத்தே வெளிப்பார்வைக்குப் பதி-பத்னி என்று இருப்பதால் அவளுடைய ஸௌமங்கல்யத்திற்கு அந்த தினுஸிலும் பங்கம் வராமல் ஸ்வாமியின் சரீரம் ஸர்வ ஸம்ஹார காலத்திலும் ஹானியடையாமலிருக்கிறது.

## ''ரக்ஷணை - சிக்ஷணை லீலை''

ஸர்வ ஸம்ஹார காலத்தில் மட்டுமில்லாமல் தேவர்களை வாழ்விக்கவே அம்ருத மதனம் நடந்த காலத்திலும் ப்ராணாபத்து வந்தது. அம்ருதம் திரண்டு வருவதற்கு முந்தி அவர்களை ஜ்வாலையாலேயே பொசுக்கிவிடுகிற மாதிரி காலகூட விஷந்தான் வந்தது. அம்ருதம் எடுத்துச் சாப்பிடுவதற்கு ஈச்வரனைக் கூப்பிடாத தேவர்கள் இப்போது ப்ராணாபத்து வந்தபோது மட்டும் அவனிடமே ''அபயம்!'' என்று ஓடினார்கள்! அவனும் ''இப்பதான் வழி தெரிஞ்சுதோ?'' என்று கேட்காமல், மனஸால்கூட அப்படி நினைக்காமல், பரம காருண்யனாக, பரம த்யாகியாக, அந்தக் காலகூடத்தை அப்படியே உருட்டிச் சாப்பிட்டுவிட்டான்.

உண்மையான ப்ரபு, அதாவது 'யஜமான்', Lord என்கிறோமே அப்படிப்பட்டவனுக்கு ரக்ஷணம் சிக்ஷணம் இரண்டுமே லக்ஷணம் என்று சாஸ்திரம் சொல்லும். தன் கீழேயிருக்கிறவர்களை அவன் ரக்ஷிக்கவேண்டும். அது மட்டும் போதாது. அவர்கள் தப்புச் செய்தால் சிக்ஷிக்கவும் வேண்டும். ராஜாங்கத்தில் அப்படித்தானே பார்க்கிறோம்? ஆஸ்பத்திரி, ஸ்கூல், P.W.D இவை ரக்ஷிக்க

ஏற்பட்டவை. அதே மாதிரி, அதைவிட முக்யமாக, போலீஸ் என்றும் கோர்ட் என்றும் சிக்ஷிக்கவும் டிபார்ட்மென்ட்கள் இருக்கின்றன.

ஸ்வாமி-அம்பாள் தம்பதியின் ரக்ஷணை-சிக்ஷணை லீலைகள் ரொம்ப ரஸமானவை. பல தினுஸாக மாற்றி அந்த விளையாட்டு நடந்திருக்கிறது.

தக்ஷ யஜ்ஞத்திலே அம்பாள் சரீர பரித்யாகம் பண்ணியதை மற்ற தேவர்கள் சும்மா பார்த்துக்கொண்டிருந்தார்களென்பதாலேயே ஸ்வாமி அவர்களை சிக்ஷித்தார். சரீர த்யாகம் பண்ணினவளோ ஹிமவான் புத்ரியாக அடுத்த அவதாரம் எடுத்து, அதே தேவர்களுக்கு ஸேநா நாயகனாக ஸ்வாமியே ஒரு புத்ரனை உண்டு பண்ணுவதற்கு அந்த அவதாரத்தில் தானே ஹேதுவாக இருந்து அவர்களை ரக்ஷித்தாள் ! யமன் மார்க்கண்டேயரோடு சிவலிங்கத்தையும் சேர்த்துப் பாசத்தை வீசியபோது, தன்னுடைய ஸ்வாமியை யம பாசம் கட்டவா?'' என்று அந்த மஹா பதிவ்ரதைக்குக் கோபம் வந்து அவள்தான் யமனை சிக்ஷித்தது. அதைத்தான் ஸ்வாமி இடது காலால் அவனை உதைத்தார் என்பது ! அது காலன் கதை. காமன் கதையைப் பார்த்தாலோ நெற்றிக்கண் நெருப்பில் அவன் பஸ்மமானான் என்றால் அந்த நெற்றிக் கண்ணில் பாதி ஸ்வாமியின் இடது பாகமாயிருக்கும் அம்பாளுடையதுதான். அதாவது இங்கே சிக்ஷையில் ஒரு பாதி அவள் பங்கு ஆனால் அப்புறம் அவளே, ஸ்வாமி ஸம்பந்தமில்லாமல் அவள் மட்டுமே, அவனுக்குப் புத்துயிர் கொடுத்து ரக்ஷித்துமிருக்கிறாள் ! அதோடு நிற்காமல் ஸ்வாமியையே ஜயிக்கிற அளவுக்கு அவனுக்கு அவள் சக்தி தந்து, தானே மறைமுகமாக ஸ்வாமியையும் சிக்ஷித்திருக்கிறாள் என்ற அளவுக்குக் 'காமாக்ஷி விலாஸ'க் கதை போய்விடுகிறது ! இங்கே (ஸௌந்தர்ய லஹரியில்) தாடங்க மஹிமையைச் சொல்கிற ச்லோகத்திலோ, ப்ரபுவின் ரக்ஷண கார்யத்திற்குப் பரமோத்தம உதாரணமாக அவர் விஷத்தைச் சாப்பிட்டு தேவர்களைக் காப்பாற்றியபோது அவள் அவரையே ரக்ஷித்ததை ஞாபகப்படுத்தியிருக்கிறது.

விஷம் அவர் வயிற்றுக்குள்ளே போகாமல் அவள் அவருடைய கண்டத்தைத் தன்னுடைய ஹஸ்தத்தால் ம்ருதுவாகப் பிடித்து அங்கேயே நிறுத்தினாள் என்று புராணக் கதையில் சொல்வார்கள்.

அப்படியானால் காலகூடம் கண்டத்திற்குள்ளே இருந்தால் மட்டும் ஹானி பண்ணாமல் விட்டு விடுமா என்ன? அதன் நெடியே உயிரை எடுப்பதாச்சே !

## ''ஈசனுக்கு உயிரூட்டும் மருந்து அம்பாள்''

ஆகவே தாத்பர்யமே வேறே. இந்தப் புராணக்கதைகளுக்குத் தாத்பர்யமான தத்வம் வேதத்திலேயே இருக்கிறது. என்ன இருக்கிறதென்றால்: ''சிவா'' என்று ஒரு மருந்து இருக்கிறது. அது ஸகலத்திற்கும் மருந்து - ''விச்வபேஷஜீ''. ஜனங்களின் ஸர்வ ரோகங்களுக்கும் அது மருந்து என்பது மட்டுமில்லை. இத்தனை ரோகத்திற்கும் காரணமாக பவரோகம் (பிறவிப்பிணி) என்று இருக்கிறதே, அது தீரவும் அந்த சிவா மருந்து. அவ்வளவுதானா? பேஷஜீ'' - இப்படி வேதம் சொல்கிறது. அதை ஸ்ரீருத்ர மந்த்ரமாக நித்யமும் சொல்லி அந்த ருத்ரனை அபிஷேகம் செய்கிறோம்.

''ஹே பரமேச்வரா ! காலகூட விஷத்தைச் சாப்பிட்டும் நீ பிழைத்திருக்கிறாயென்றால் உனக்கு யார் மருந்து கொடுத்தது ! அந்த ரஹஸ்யம் எனக்குத்

தெரியாது என்று நினைக்காதே ! அதை மந்த்ரமாக இப்போது எல்லோருக்கும் சொல்லிவிடப் போகிறேன் !'' என்று காவ்யமாக 'ஸ்ரீ ருத்ர ப்ரச்ன'த்தில் அந்த இடத்தில் தெரிகிறது. என்ன அந்த ரஹஸ்யம்? அதை எப்படி வேதமாதா ஸ்வாமியிடம் பேசும் பாவனையில் லோகத்துக்குத் தெரிவிக்கிறாள்?

''அப்பா ! உனக்கு இரண்டு சரீரம். இப்போது அதிலே ருத்ர சரீரமாகத் தெரிகிறாய். 'ரௌத்ராகாரம்' (ருத்ரனுக்குரிய சரீரம்) என்றாலே லோகம் நடுங்குகிற அப்படிப்பட்ட கோரத்திலும் இன்னும் கோரமான 'கோரதரம்' - என்றெல்லாம் அதை நான் 'அட்வர்டைஸ்' பண்ணியிருக்கிறேன். ஆனால் அப்படிப்பட்ட உனக்கே 'சிவ' என்ற பரம மங்களப் பேரும் இருக்கிறதே ! அதெப்படி? எப்படியென்றால், உனக்கே இப்படி மங்களமான இன்னொரு சரீரமுமிருப்பதால்தான்''.

(வேதமாதாவின் வாக்காகப் பேசி வந்தவர்கள் தமது வாக்காகத் தொடர்கிறார்கள்:) த்வைத லோகத்தில் நல்லது-கெட்டது என்று இருக்கிற எல்லாமே ஒரே ஈச்வர ஸ்வரூபந்தானே தவிர, நல்லதற்கு மட்டும் God, கெட்டதற்கு satan என்று நம்முடைய மத சாஸ்திரங்களில் இல்லை. ஈச்வரன்தான் ஸம்ஹார ருத்ரனாகவுமிருக்கிறான்; பரம சாந்தனாக, பரமாநுக்ரஹ மூர்த்தியாக சிவன் என்றுமிருக்கிறான்.

கோர மூர்த்தி, அழகுமூர்த்தி என்று இரண்டாகச் சொல்லும்போது கோரம் என்பதில் கோபம் மட்டுமில்லாமல் கஷ்டம் முதலிய எல்லாக் கெட்டவையுமே அடக்கமென்றும், அழகு என்பதில் அன்பு, சாந்தம், ஸந்தோஷம் முதலிய எல்லா நல்லதுமே அடக்கமென்றும் அர்த்தம். லோக வாழ்க்கையைப் பார்த்தால் கெட்டதுதான் நிறைய இருப்பது தெரிகிறது. அதனால்தான் 'கோர ஸம்ஸாரம்' என்றே பெரியவர்கள் சொல்வது. ஆனாலும் முழு கோரமாக முடிந்துவிடாமல் அங்கங்கே அப்பப்போவாவது ஒரு இழை சாந்தம், ஸௌக்யம், அழகு வந்து கோரத்தை சமனப்படுத்துகிறது; வியாதிக்கு மருந்து தந்து ஸரி பண்ணுகிற மாதிரி கோரத்துக்கு மருந்து தந்து சிவம் பண்ணுகிறது. நல்லது கெட்டது இரண்டும் கலந்த மிச்ர லோகம் என்பதாக இந்த மநுஷ்ய லோகம் நடக்கணுமென்று பரமாத்ம ஸங்கல்பம். இதில் கெட்டது கொஞ்சம் ஜாஸ்தி இருந்தால்தான் லோகத்திலிருந்தே தப்பித்து, நல்லது கெட்டது இரண்டுக்கும் அதீதமான ஆத்ம ஸ்திதிக்குக் கரையேறத்தோன்றும் என்பதால் கெட்டதை ஜாஸ்தியாய் வைத்திருக்கிறது என்று வைத்துக்கொள்ளலாம். ஸ்ருஷ்டியின் உத்தேசம் நம்மில் எவருக்கும் ''இதுதான்'' என்று நிச்சயமாகத் தெரியாது. அதனால்தான், 'நாம், இப்படி வேண்டுமானால் வைத்துக் கொள்ளலாம்' என்றேன். ஜாஸ்தி கெட்டது இருந்தாலும் அடியோடு கெட்டதுதான் என்று லோகத்தை ஆக்கிவிடக்கூடாது என்று பரமாத்ம சித்தம் இருக்கிறது. 'மிச்ரம்' (கலப்பானது) என்றபின் முழு கெட்டதாக மட்டும் எப்படி இருக்கமுடியும்? அதனால் வ்யாதிக்கு மருந்து தருகிறாற்போல கோர லோகத்திற்கு சிவ மருந்து. ஒரேயடியாக வ்யாதியைத் தீர்த்துவிடுவதில்லை. அப்படிப் பண்ணினால் லோகம் ஒரே நல்லதாகிவிடுமே ! ஒரு வேளை சாப்பாடு போட்டு அப்புறம் பசியே இல்லை என்று ஆக்க முடியவில்லையோல்லியோ? பசிக்கிறது, சோறு போட்டு அப்போதைக்குப் பசி தீர்க்கிறது, மறுபடி பசி, மறுபடி சோறு என்கிற மாதிரி கோர வியாதிக்கு அப்பப்போ சிவம் பண்ணும் மருந்து. அதென்ன மருந்து? அதைத்தான் வேதம் சொல்லுகிறது, 'சிவா' என்று.

''அப்பா ! உன் ரௌத்ர சரீரத்தை சிவ சரீரமாகப் பண்ணியிருக்கும் மருந்து என்ன தெரியுமா? அந்த சிவப் பெயரையே நீட்டி 'சிவா' என்று சொல்வதுதான் மருந்து. எல்லா சரீரத்திற்கும் மூலமாக இருக்கப்பட்ட பரமாத்மாவுக்குள்ளே பரம மங்களமான அன்பு என்ற ஒரு மாத்ருத்வம் (தாய்மை) இருக்கிறதே ! அந்த சிவாதான் உன் ரௌத்ரத்தை சமனம் பண்ணி சிவனாக ஆக்குகிற மருந்து'' - இப்படி ச்ருதி சொல்கிறது.

லோகத்தில் மாட்டிக் கொண்டுள்ள நம்முடைய கஷ்டத்திற்கெல்லாம் அம்பாள்தான் மருந்து என்பதோடு மட்டும் வேதம் முடிந்துவிடவில்லை. அவள் ''விச்வபேஷஜீ'' என்று முடித்துவிடவில்லை. லோக நாடகமாடும் மூல வஸ்துவுக்குள்ளே ரௌத்ர ரஸம் ஜாஸ்தியாகிவிடாமல் கருணா ரஸம் பெருக்கி சமனம் பண்ணும் ''ருத்ரஸ்ய பேஷஜீ''யும் அவள்தான் என்று பூர்த்தி செய்திருக்கிறது.

சிவனுடைய பத்னி சிவா என்று அர்த்தம் செய்யும் போது அவன் என்னவோ ஸ்வபாவமாகத் தானே மங்களமாக இருப்பதாக வைத்துக்கொண்டு, அவனுடைய பத்னி என்பதாலேயே - அதாவது அவளுடைய குணம் என்று பார்க்காமலேயே - அவளை 'சிவா' என்று சொல்கிறோம். ஆனால், இங்கே வேத வசனம் இதை அப்படியே மாற்றி அந்த சிவா மருந்து சேர்ந்தால்தான் ருத்ரனே சிவன் என்று ஆனான் என்கிறது ! (ஆண்பாலில்) சொல்லாமல் (பெண்பாலில்) 'சிவா தநூ' என்கிறது. அப்படியென்றால், சிவா என்கிற மாத்ருபாவத்தால் ஏற்பட்ட சரீரம். பாவம் மாதாவுடையது. ஆனால் சரீரம் பிதாரூபத்திலே இருப்பது. மருந்துச் செடியை 'மூலிகை' என்கிறோம். 'மூலிகா' ('மூலிகை') பெண்பால். அந்த மூலிகையைச் சாப்பிட்டு ஆண்குழந்தை பிறக்க முடியுமல்லவா? அப்போது, ''இந்த சரீரமே அந்த மூலிகையால்தான்'' என்று சொல்கிறாற்போலத்தான் ருத்ரனுடைய சரீரத்தை சிவனுடைய சரீரமாக மாற்றிய சிவா பேஷஜியை வைத்து அந்த சரீரத்தையே சிவா தநூ என்றது. 'பேஷஜி'யும் பெண்பால்தான். 'பேஷஜம்' என்று நபும்ஸகமாகச் சொல்லாமல் தாய் மனஸைக் காட்டி இப்படிச் சொல்லியிருக்கிறது.

அப்படி புருஷாகாரமாக சிவசரீரம் ஏற்பட்ட அப்புறம் வெளியிலும் தாயும் தந்தையுமாக அவரே தெரிய வேண்டுமென்பதற்கே அதில் பாதி சரீரம் அம்பாளாகவே அவயவ அமைப்பிலும் ஆயிற்று. அவருக்கே ஸ்வாபாவிகமாக இருந்த ரௌத்ர ரோகத்திற்கு மருந்தாக முதலில் அவள் வந்தாள். அதனால் அவர் உள்ளத்திலே கருணை பெருகித்தான் அவர் தேவர்களைக் காலகூடம் பாதிக்காமல் அதைத் தாமே வாங்கிச் சாப்பிட்டது. இப்போது அவருக்கு வெளியிலேயிருந்து வந்த அந்த விஷத்தால் ரோகம், சரீர ஹானி ஏற்படாமலும் மருந்தாக அவளே, அவரோடு கலந்திருக்கும் அவளே, ரக்ஷித்தாள்.

லோக ஜனங்களுக்கே அம்பாள் கடாக்ஷம் இருந்துவிட்டால் போதும், அகால ம்ருத்யு ஏற்படாது. அப்படியிருக்க ஸ்வாமிக்கு உள்ளேயும் கருணா பாவமாக இருந்துகொண்டு சரீரத்திலேயும் பாதியாக அவள் இருக்கும்போது விஷம் எப்படி அவரைத் தாக்கும்? ப்ரளயம், மஹாப்ரளயம் எதுவுந்தான் எப்படித் தாக்கும்? ஆசார்யாள் வாக்குப்படி ஈச்வரனுக்கு காலகலநா இல்லே. காலக் கணக்கு அவரிடம் எடுபடாது; காலத்தின் முடிவு அவருக்கில்லை. ''காலமானார்'' என்கிறோம். காலனிடம் மாட்டிக்கொள்வதைத்தான் அப்படிச் சொல்வது. இவரோ காலகாலன். 'ம்ருத்யுஞ்ஜயன்'

என்றும் அதனாலேயே அவரை விசேஷித்துச் சொல்லி, ம்ருத்யுஞ்ஜய மந்த்ரம் ஆயுராரோக்யத்திற்காக ஜபிக்கிறோம். ம்ருத்யுவை ஜயித்தவருக்கே எப்படி ம்ருத்யு உண்டாகும்? ஜயித்துக் கொடுத்த இடதுகால்காரி அவரைத் தன்னுடைய ஸங்கத்தால் என்றென்றைக்கும் அமரமாக ஆக்கியிருக்கிறாள்.

அவரோடு தான் அபின்னமாகக் கலந்திருப்பதாலேயே அவரை விஷம் பாதிக்காமல் ரக்ஷித்ததையே ஸகல ஜனங்களுக்கும் புரிகிற வித்தில் அவர் கழுத்தைப் பிடித்து அதில் விஷத்தை நிறுத்தி வைத்ததாகக் காட்டினாள். வாஸ்தவத்தில் அது அவர் வயிற்றுக்குள்ளேயே போயிருந்தால்கூட ஒரு ஹானியும் பண்ண முடியாமல் அவளுடைய ரக்ஷை இருந்துதானிருக்கும். இருந்தாலும் ஜனங்களுக்குப் பாதிவ்ரத்ய மஹிமை தெரியவேண்டும். அம்பாள் பெருமை தெரியவேண்டும், அவளுக்குப் பதியிடமிருந்த ப்ரேமை தெரியவேண்டும் என்றே வெளிப்படத் தன் கையால் அவர் கண்டத்தைப் பிடித்து அங்கே விஷத்தை நிறுத்தினாள்.

அந்த விஷ ஜ்வாலையே மஹா உக்ரமாச்சே! அத்தனை தேவர்களையும் கதிகலங்க வைத்ததாச்சே! அதைப் பார்த்தாலே கண் எரிச்சலாக எரியுமே! அப்படியிருக்க அதை எப்படி நீ கண்ணை மூடிக்கொள்ளாமல் பார்க்க முடிந்தது? பார்த்தது மட்டுமில்லை. கையிலே அப்படியே உருட்டித் திரட்டி எடுத்துக் கொண்டாயே! அதென்ன உனக்கு நாகப் பழமா (நாவற்பழமா) என்ன? பார்த்தது மட்டுமில்லை, கையில் எடுத்துக்கொண்டது மட்டுமில்லை. நல்ல நீலமாக, பளபளவென்று உருண்டையாக ஒரு நாகப்பழம் மாதிரித் திரட்டினதை 'லபக்' என்று வாய்க்குள்ளே போட்டுக் கொண்டாயே! நாகப் பழமாகயிருந்தது, ஸித்தர்கள் அதிசய குளிகை கொடுப்பார்களே, அப்படியொரு குளிகையாகிவிட்டதா? ('நாக்குக்கு அடியிலே வெச்சுக்கோ, ஆகாசத்திலே பறக்கலாம்' என்கிற மாதிரி அத்புதமாக ஒன்றைச் சொல்லி ஸித்தர்கள் குளிகை கொடுப்பார்கள்.) அப்படி இந்தக் காலகூடமும் ஒன்றாக உனக்கு தோன்றித்தான், பார்த்தாலே கண்ணை எரிக்கிற அதை வாய்க்குள்ளேயே போட்டுக் கொண்டாயோ?'' இப்படி ஆசார்யாள் கேட்கும்போது - 'சிவாநந்த ஸஹரி'யிலிருந்துதான் சொல்லிக் கொண்டிருக்கிறேன் - 'ஸித்த குளிகை' என்கிறபோது ஸித்த வைத்யத்தில் தருகிற குளிகையையும் நினைத்துக்கொண்டு 'ருத்ர'த்தில் வரும் 'சிவாபேஷஜீ'யோடு கனெக்ட் பண்ணியே கேட்பதாகத் தோன்றுகிறது. அதோடு அவள் அதைக் கழுத்தில் நிறுத்தியதற்கு ஒரு அழகான காரணமும் இங்கே கிடைக்கிறது. ''பார்த்தாய், எடுத்தாய், வாயில் போட்டுக்கொண்டாய்! அதோடவாவது நின்றாயா? இல்லை, வாயில் போட்டுக்கொண்டதை இன்னும் உள்ளே தள்ளிக் கண்டத்தில் வைத்துக்கொண்டாய். உனக்குக் கழுத்தில் நீலமணி 'நெக்லேஸ்' போட்டுக்கொள்ள வேண்டுமென்று ஆசையிருந்துதான் இப்படிக் கண்டபூஷணமாக அடக்கிக்கொண்டாயா? சொல்லு'' என்று கேட்கிறார். ''சொல்லு'' - ''வத'' என்றே ஸ்வாமியைக் கேட்டு ச்லோகத்தை முடித்திருக்கிறார்.

ஸ்வாமி ஒன்றும் ஆசையில்லாதவர். அதனால் அவருக்கு பூஷணம் எதுவும் போட்டுக் கொள்ள வேண்டும் என்று இருந்திருக்காது. அம்பாளுக்குத்தான் பதிக்கு அலங்காரமாக அந்த வெள்ளைக் கழுத்தில் நீலமணி பூஷணம் அழகு செய்ய வேண்டுமென்று இருந்திருக்க வேண்டும். அதனால்தான் தன் ஸங்கல்பத்தால் மட்டுமோ, அல்லது கர ஸ்பர்சத்தால் மட்டுமோ அவள் அந்தக் காலகூட விஷத்தை

இருந்த இடம் தெரியாமல் அற்றே போகும்படி செய்திருக்க முடியுமானாலும் அப்படி பண்ணாமல் அந்த சங்கு மாதிரியான கண்டத்தின் மத்தியில் பளபளவென்று நீலமணியாக அது மின்னிக் கொண்டிருக்கும்படியாக வைத்துவிட்டாள் !

அம்பாள் சாச்வதை, அதோடு பதிவ்ரதை, நித்ய ஸுமங்கலி என்பதால் பரமேச்வரனும் எந்த ப்ரளயத்திலும் அழிபடாத சாச்வதனாக ஆகிறான். அவள் சாச்வதமென்றால் தேவர்கள் சாப்பிட்ட க்ஷீர ஸாகர அம்ருதத்திற்கு மேலே எதுவாகவோ அவள் இருக்க வேண்டும். ஏனென்றால் அந்த அம்ருதத்தைச் சாப்பிட்டவர்களும் மஹா ஸம்ஹாரத்திற்குத் தப்பமுடியவில்லையே ! அவளுடைய லோகத்தைச் சுற்றியே அம்ருதம் ஸாகரமாக ஓடுகிறதென்றால் அது அவளுக்குத் 'தண்ணி பட்ட பாடு' என்றுதானே அர்த்தம்? ஆகையால் அவள் அம்ருதத்திற்கு மேலே ஏதோ ஒன்றால் ஆனவளாயிருக்க வேண்டும்.

அது என்னவென்றால் உயிர்த் தத்வமேயான சித்துதான், சைதன்யம்தான். ப்ரளயத்திலே ப்ராண ரக்ஷை பண்ண சக்தியில்லாத க்ஷீர ஸாகர அம்ருதத்தை விடவும் நித்ய ரக்ஷை தருகிற இதுதான் நிஜமான அம்ருதம் ! அதனால்தான் அவளை அம்ருத சைதன்ய மூர்த்தி'' என்று சொல்வதாயிருக்கிறது. க்ஷீர ஸாகர அம்ருதத்தையே மருந்துக்கெல்லாம் மேலான மருந்து என்று சொல்வது வழக்கம். ''மூவா மருந்து என்று சொல்வது வழக்கம். ''மூவா மருந்து'' என்பது அதுதான். மூப்பைத் தராத மருந்து, என்றைக்கும் இளமையாய் வைத்திருப்பது என்று அர்த்தம். இங்கே நம் ச்லோகத்தில் ''ஜரா - ம்ருத்யு - ஹரிணீ'' என்று 'ம்ருத்யு'வுக்கு முன்னாடி சொன்ன 'ஜரா' என்பது மூப்புதான். சாகாமலே, ஆனாலும் விருத்தாப்யத்தினால் அசக்தமாகிக் கண் தெரியவில்லை, காது கேட்கவில்லை, நடக்க முடியவில்லை என்று அவஸ்தைப்பட்டுக் கொண்டு சிர ஜீவனம் பெற்றால் என்ன ப்ரயோஜனம்? அதற்குச் சாவே மேல் ! அதனால்தான் 'மூவா மருந்து' என்றது. அம்ருதமே ஜரா ம்ருத்யுக்களை நிவர்த்திக்கும் மருந்து, நமக்குத் தெரிந்த மருந்துக்கெல்லாம் மேலான மருந்து என்றால் அம்ருத சைதன்யம் அந்த மருந்துக்கும் மேலான மருந்துதானே? அந்த அம்ருத சைதன்யமே மூர்த்தீகரித்த மஹா மருந்தான - 'விச்வ பேஷஜீ'யான - அம்பாள் ஸ்வாமியுடைய வாம பாகமாகவே இருக்கும்போது அவருக்கு எப்படி அழிவு ஏற்பட முடியும்?

ஆக, 'தாலி பாக்யம், தாலி பாக்யம்' என்கிறோமே - பெரிய ஆக்ஸிடெண்ட், வைத்தியமே கிடையாது என்று இருக்கிற ஒரு மஹாரோகம். ஆகியவற்றிலும் ஒருத்தன் தப்பிப் பிழைத்தால் அது அவன் பெண்டாட்டியுடைய தாலி பாக்யந்தான் என்கிறோமே - அப்படி அம்பாளின் தாலி பாக்யத்தால்தான் ஸ்வாமி மஹாப்ரளயத்திலாகட்டும் காலகூட பானத்தின் போதாகட்டும், தப்பித்தது.

## ''அம்பாளின் தாடங்கம்''

அந்தத் தாலி பாக்யத்தைத்தான் அவளுடை ''தாடங்க மஹமா'' என்று சொல்லியிருக்கிறார்.

வேதம் ச்ருதி என்றால், ரிஷிகள் பண்ணிய தர்ம சாஸ்த்ரங்களும், கிருஷ்ண பரமாத்மா உபதேசித்த கீதையும் ஸ்ம்ருதி என்பார்கள். ஆசார்யாள் வாக்கையும் ஸ்ம்ருதியோடு சேர்க்கலாம். ஸ்வாமிக்கு அம்பாள் மருந்து என்ற ச்ருதி வாக்கைத்தான்

ஆசார்யாள் இங்கே ஸ்ம்ருதி வாக்காகக் கொடுத்திருக்கிறார். அப்படியே காப்பியடித்தால் அழகில்லை என்பதால், ஸ்வாமியின் உயிரை ரக்ஷிப்பது அம்பாள் என்றே திருப்பிச் சொல்லாமல், (அவ்வாறு ரக்ஷிப்பது) அவளுடைய ஸௌமாங்கல்யச் சின்னமான தாடங்கம் என்று நூதன நயம் சேர்த்துச் சொல்லியிருக்கிறார்! 'தாலி பாக்யம்' என்று பொதுவில் சொல்வதைத் 'தாடங்க மஹிமை' என்கிறார்.

வேடிக்கையாக, அந்தத் தாடங்கமும் தாலிதான்! இதென்ன புதிர் போடுகிறேனே என்றால், நான் ஒன்றும் புதுசாகச் சொல்லவில்லை. காளிதாஸன் சொன்னதைத்தான் ஒப்பிக்கிறேன். ''தாலீ பலாச தாடங்காம்'' என்பது காளிதாஸன் வாக்கு. தாலம், தாலீ என்றால் பனை. பலாசம் என்றால் புரசு என்று ஒரு அர்த்தம். 'பலாச'தான் திரிந்து 'புரசு' ஆயிற்று என்று தோன்றுகிறது. இன்னொரு அர்த்தம். எந்த இலைக்குமே 'பலாசம்' என்று பெயர். 'தாலீ பலாசம்' என்றால் பனையோலை என்று அர்த்தம். ஆதி காலத்தில் ஜனங்கள் படாடோபமில்லாமல் எளிமையாயிருந்தபோது ஸ்த்ரீகளுடைய பரம ஸௌமங்கல்ய ஆபரணங்களான மங்கள ஸூத்ரப் பதக்கமாயிருந்த ஓலை நறுக்குக்கே தாலி என்று பேர் வந்துவிட்டது. 'தோடு' என்பதும் பனையோலையின் பெயர்தான். காதிலும் அந்த ஓலையைச் சுருட்டித்தான் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நானே பார்த்திருக்கிறேன். அநேக குடியான ஸ்திரீகள் அப்படிப் போட்டுக்கொண்டு பிற்கால ஜம்ப வழக்கங்கள் வராத ஆதி நாளில் ப்ராஹ்மண ஸ்த்ரீகள் உள்பட - காளிதாஸன் வாக்குப்படி ஸாக்ஷாத் பராசக்தி உள்பட - எல்லாரும் ஓலைத் தோடுதான் போட்டுக் கொண்டிருந்திருக்கிறார்கள். அதனால்தான் பிற்காலத்தில் ஏகச் செலவில் வைரத்தோடு போட்டுக் கொண்டபோது கூட அதை 'வைர ஓலை' என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டது.

'கம்மல்' என்று தோட்டைச் சொல்வது. 'கமலம்', 'கமல்' என்பதுதான் அப்படி ஆனது. நடுவே ஒரு கல், சுற்றிலும் ஆறு என்று, நடுவே கர்ணிகையும் சுற்றி இதழுமாக ஒரு தாமரை இருக்கிறாற்போலத் தோடு கட்டியதால் 'கமலம்' என்று பேர் வைத்துக் 'கம்மல்' ஆயிற்று. அப்படிக் கட்டப்படுகிற வைரக் கல்லுக்கும் அதனாலேயே 'கமலம்' என்று பெயர் வந்தது. ''நல்ல உடானி கமலம்'' என்று உசந்த வைரத்தைச் சொல்வார்கள்.

இத்தனை ஜம்பம், டம்பம், டாம்பீகம் வந்துவிட்ட இன்றைக்கும் அம்பாள் பூஜையில் அவள் போட்டுக்கொள்கிற பரம எளிமையான கருகுமணியும் பச்சோலையுமே ஸுமங்கலிகளுக்குக் கொடுக்கிறோம்.

'தாலி'யில் தாலம் (பனை) என்று தெளிவாகவே தெரிகிறதென்றால், 'தாடங்கம்' என்று ச்ரோத்ராபரணமும் (காதணியும்) 'தால'த்தின் அடியாகப் பிறந்ததுதான். 'தாலம்' என்பது 'தாட(da)ம்' என்றும் ஆகும். 'அங்கம்' என்றால் சின்னம். தாடத்தாலான மங்களச் சின்னம் 'தாடங்கம்'. 'தாட பத்ரம்' என்றுகூட அந்த ஆபரணத்தைச் சொல்வதுண்டு. 'தாலீ பலாசம்' என்ற பனையோலையே 'தாட பத்ரம்' என்பதும். 'தாட(da)ங்கம்' என்பதே அப்புறம் 'தாட(ta)ங்கம்' என்று வந்திருக்கிறது. தோடு, அதற்கு வேறாகக் குண்டலம் (இந்த நாள் லோலாக்கு, ஜிமிக்கி) என்று இல்லாமல், தோடு குண்டலம் இரண்டும் சேர்த்துப் பண்ணிய நகை தாடங்கம் என்று தோன்றுகிறது.

தாலி, தோடு இரண்டும் விசேஷமான ஸௌமங்கல்யாபரணங்களாகும். ஸுமங்கலித்வம் போனால் கழுத்தைவிட்டுத் தாலி இறங்குவது போலவே காதை

புஷ்பங்களின் மேலேயும் மற்ற ஸகல பக்தர்களும் உன்னுடைய சரணத்தில் அர்ச்சனை செய்யும் புஷ்பங்கள் விழுந்துதானே ஆகணும்? இப்படி உன்னொருத்திக்குச் செய்யும் பூஜையே த்ரிமூர்த்திகளின் சிரஸுக்கும் கரத்துக்கும் செய்த பூஜையுமாகிவிடுகிறது'' என்கிறார். பூஜிக்கிறவர்களே பூஜிக்கப்படுபவர்களுமாகி விடுகிறார்கள் - சிவாம்சமான - ருத்ரன் அம்பாளுக்கு பக்தராகவும் அவள் அவருக்கு தெய்வமாகவுமிருக்கிறாள்.

அதோடு அவளுடைய குழந்தையாகவும் அவர் இருப்பதாகச் சொல்லலாம் எப்படியென்றால் -

''த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுண ஜநிதாநாம் தவ சிவே'' என்று ஆசார்யாள் சொல்கிறார். 'சிவா' என்ற பெயரை அர்த்த புஷ்டியோடு போட்டிருக்கிறார். ''சிவம் சதுர்த்தம்'' என்று மாண்டூக்யம் சொல்கிறது. த்ரிகுணங்களுக்கு மேலேயுள்ள துரீயம் என்ற ப்ரஹ்ம நிலைதான் சதுர்த்தம். சிவமாக உள்ளபோது அது கார்யமில்லாத ப்ரஹ்மம். சிவாவாக உள்ளபோது கார்ய ப்ரஹ்மம். சிவம் த்ரிகுணங்களில் பட்டுக் கொள்ளாது. அதன் சித்சக்தி இச்சையாகக் கிளம்பிக் காமேச்வரியாகித்தான் த்ரிகுணங்களைப் பிறப்பித்து முத்தொழில்களென்ற க்ரியைக்காக த்ரிமூர்த்திகளை அந்த த்ரிகுணங்களிலிருந்து பிறப்பித்தது. ''தவ த்ரிகுண ஜநிதாநாம்'' - ''உன்னுடைய த்ரிகுணங்களில் ஜனித்தவர்களே த்ரிமூர்த்திகள்'' - என்கிறார். அப்படியென்றால் அவளுக்கு ஜனித்தவர்கள் தான். த்ரிமூர்த்திகளுக்கும் அவள் ஜனனீ. ஸ்வாமிக்கு அம்பாளை மாதாவாகவும் தத்வ ரீதியில் சொல்வதுண்டு. ருத்ரனான தமோகுண மூர்த்தியாக அவர் இருக்கும்போது, தத்வம் அவ்வளவு புரியாதவர்கள்கூடப் புரிந்து கொள்ளும் படியாக - ''ஒரு மூலசக்தியிலிருந்துதானே முக்குணங்கள் பிறந்து அவற்றுக்கு பெர்ஸானிஃபிகேஷனாக மும்மூர்த்திகள்? அப்போது அந்த சக்தி அம்மாதானே?'' என்று புரிந்து கொள்ளும்படியாக - இருக்கிறாள்.

(சிரித்து) பாட்டி என்றுகூடச் சொல்லலாம்! ஸ்வாமிக்கும் அவள் அம்மா என்பது பல பேர் சொன்னது. யாரும் சொல்லாதது, நான் 'நாவ'லாகச் சொல்வது, பாட்டி என்று! முதலில் த்ரிகுணங்கள் துரீய பராசக்தியின் குழந்தைகளாகப் பிறந்தன; அந்த த்ரிகுணங்களின் குழந்தைகளாக, ''த்ரிகுண ஜநிதாநாம்'' என்று ஆசார்யாள் சொல்கிறபடிப் பிறந்தவர்கள் த்ரிமூர்த்திகள் என்றால் அவளுக்குப் பேரக் குழந்தைகள்தானே? இப்படி ஒரு ரிலேஷன் ருத்ர சிவனுக்கு அம்பாளுடன்!

அடுத்த ச்லோகத்தில் (26) மற்ற எல்லா தேவர்களும் முடிந்துபோகிற மஹா ஸம்ஹார காலத்திலும் அம்பாளோடு ரமித்துக் கொண்டிருப்பவராக ஸ்வாமியைச் சொல்லியிருக்கிறது. அங்கே பஞ்சமூர்த்திகளுக்குங்கூட முடிவுதான். ஸம்ஹார ருத்ரனும் முடிந்து போகிற மஹா ஸம்ஹாரம் அது. அதைப் பண்ணுவது டைரக்டாகப் பராசக்தியே. போதும் விளையாட்டு என்று த்வைத ப்ர்பஞ்சத்திற்கு அவள் அப்படியே கடை கட்டிவிடுகிற காலம் அது. அப்போது திரோதான-அநுக்ரஹங்கள் பண்ணவும் ஏது இடம்? அதனால் சிவ ஸாம்யர்களாகவே நினைக்கப்படுகிறவர்களில் மூன்று பேர் (ருத்ரனும், மஹேச்வரனும், ஸதாசிவனும்) அப்போது முடிந்து போக வேண்டியதுதான். 'அம்பாளுடைய பஞ்ச ப்ரஹ்மாஸனத்தைப் பஞ்ச ப்ரேதாஸனம் என்றும் சொல்வதுண்டு. இவள்தான் அந்த ஐந்து மூர்த்திகளுக்கும் வேலையும் அதற்கான சக்தியும் கொடுப்பது; இவள் அப்படிக் கொடுக்காவிட்டால் அவர்கள் வெறும்

ப்ரேதத்துக்கு ஸமானந்தான் என்பதாலேயே அப்படியே பேர் என்று சொன்னேன். ஞாபகம் இருக்கிறதோ, இல்லையோ? அந்த (வேலை கொடுக்காத) ஸ்டேஜ்தான் மஹாஸம்ஹார காலம். அப்போதும் அந்த மஹாஸம்ஹாரத்தைப் பண்ணிப் பார்க்க வேண்டும் என்பதாகப் பண்ணுவது என்ற க்ரியையும் பார்க்க வேண்டும் என்ற இச்சையும் பராசக்திக்கு இருப்பதால் அவள் காமேச்வரியாக இருக்கிறாள். அந்த நித்ய ஸுமங்கலிக்கு எப்போதும் பதி இருந்தேயாக வேண்டுமாதலால் காமேச்வரனும் இருக்கிறான். ''சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்'' என்று ரொம்ப முந்தி ஒரு ச்லோகத்தில் (ச்லோ-8) சொன்னதில் பஞ்சப்ரேத, அல்லது பஞ்சப்ரஹ்ம, ஆஸனத்தில் அம்பாளை மடியில் உட்கார்த்தி வைத்துக்கொண்டிருக்கும் அந்தப் 'பரம சிவன்' இந்தக் காமேச்வரன்தான். அவர்களை ஆனந்தமாகச் சேர்ந்து விளையாடிக் கொண்டிருக்கிற தம்பதியாக இங்கே (ச்லோ-26-ல்) காட்டுகிறார். ஸம்ஹாரத்திலே என்ன ஆனந்தம் என்றால் வெளியிலே அது கோரமாகத் தெரிந்தாலும், வாஸ்தவத்திலே அவர்கள் தங்கள் குழந்தைகளான ஸகல ஜீவ கோடிகளையும் கர்ம பாதையிலிருந்து விடுவித்து தங்களுக்குள்ளே இழுத்து வைத்தக் கொள்கிற கார்யந்தானே? அந்த ஆனந்தம்தான்!

ஒன்று தோன்றுகிறது: இங்கே 'மஹா ஸம்ஹாரே (அ)ஸ்மிந் விஹரதி ஸதி த்வத்-பதி-ரஸௌ'': 'மஹா ஸம்ஹார காலத்தில் உன் பதி விஹரணம் பண்ணுகிறார்'' என்று போட்டிருக்கிறார். 'விஹரணம்' என்றால் விளையாடி ஸந்தோஷப்படுவது, கூடிக் களிப்பது என்ற அர்த்தத்தில் இத்தனை நாழி சொன்னேன். அது மட்டுமில்லாமல் அந்த வார்த்தைக்கே 'ஸம்ஹாரம்' என்றும் அர்த்தமுண்டு. ஹரணம், அபஹரணம், ஸம்ஹரணம், விஹரணம், அபஹாரம், ஸம்ஹாரம், விஹாரம் என்ற எல்லா வார்த்தைகளையுமே பொதுவாக நாம் 'ஸம்ஹாரம்' என்று சொல்கிற வார்த்தைக்குப் பதிலாக போடலாம். அப்படி இங்கே காமேச்வரன் மட்டுமே, காமேச்வரியைச் சேர்த்துக் கொள்ளாமல் அவன் மட்டுமே, மஹாஸம்ஹாரம் செய்கிறான் என்பதைத்தான் 'த்வத் பதி: விஹரதி' என்று சொல்லியிருக்கிறார் என்றுகூட ஒரு அர்த்தம் பண்ணலாமோ என்று தோன்றுகிறது. அம்பாளோடுகூடச் சேர்ந்து அவன் ஸம்ஹார விளையாட்டுச் செய்கிறானென்றோ, அல்லது ஸம்ஹாரத்தின் ப்ரஸ்தாபமில்லாமல் அவன் பாட்டுக்குப் பத்னியோடு ரமித்து விளையாடுகிறானென்றோ காட்ட ச்லோகத்தில் வார்த்தையில்லை. ''அந்த மஹாஸம்ஹாரத்தின்போது இந்த உன் பதி விஹரணம் பண்ணுகிறாள்'' என்று மட்டுந்தான் வாக்கியம் இருக்கிறது: ''மஹா ஸம்ஹாரே (அ)ஸ்மிந் விஹரதி ஸதி த்வத் பதி-ரஸௌ.'' அதனால் அவனேதான் அந்த ஸம்ஹாரத்தைப் பண்ணுகிறான் என்று அர்த்தம் பண்ணிக்கொள்ள நன்றாக இடம் கொடுக்கிறது.

இப்படி எதற்கு அர்த்தம் பண்ணகிறேன் என்றால், (சிரித்து) அம்பாளுக்குப் பரிந்துகொண்டுதான்! அவர்களுக்கு நல்ல பேர் வாங்கிவைப்பதற்குத்தான்! 'வெளிப்பார்வைக்கு கோர க்ருத்யமாகத் தெரியும் மஹா ஸம்ஹாரத்தை அவள் பண்ணவில்லை. திட்டம் அவளுடையதுதானென்றாலும், எக்ஸிக்யூஷன் - அதுதானே க்ரூரமாகத் தெரிகிறது? அது - அந்தத் தாயாருடையதில்லை. ஸ்ருஷ்டியில் இதுவரை அந்த ராணிக்கு உப்புக்குச் சப்பாணி ராஜாவாகவே இருந்திருக்கும் காமேச்வரன் இப்போது ஸ்ருஷ்டியை முடிக்கும்போது மட்டும் நன்றாக அதிகாரம் பெற்று அவள்தான் அதைப் பண்ணுவது' என்று காட்டி அவளுக்கு நல்ல பேர் வாங்கி வைப்பதற்குத்தான்

இப்படி அர்த்தம் பண்ணினேன்! எனக்கு லலிதா ஸஹஸ்நாமத்தின் ஸப்போர்ட்டே இருக்கிறது! அதனால் யாரும், 'இவர் என்ன, இஷ்டப்படி அர்த்தம் பண்ணுவது?' என்று கேட்க முடியாது. ஸஹஸ்ரநாமத்தில் என்ன இருக்கிறது? 'மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணீ'' என்று இருக்கிறது. மஹா கல்ப மஹா தாண்டவம்' என்பதை அத்தனை கல்ப காலங்களும் முடியும் ப்ரளயத்தின்போது மஹேச்வரன் ஆடுகிற பெரிய ஆட்டம் என்று அர்த்தம் பண்ணலாம்; அல்லது, மஹேச்வரனால் மஹத்தான் முறையில் கல்பனை பண்ணப்பட்ட மஹா பெரிய ப்ரளயக் கூத்து என்று அர்த்தம் பணணலாம். 'கல்பனை', 'கற்பனை' எனறால் நாம் நினைக்கிறபடி வெறும் இட்டுக்கட்டல், இமாஜினேஷன் என்று அர்த்தமில்லை. நன்றாகத் திட்டம் போட்டுக் கார்யமாகிப் பண்ணுவது கல்பனைதான். அப்படி மஹேச்வரனேதான் மஹாப்ரளயத்தைப் பண்ணுகிறானென்று அர்த்தம் சொல்லலாம். இங்கே 'மஹேச்வரன்' என்றால் திரோதான மூர்த்தி என்று அர்த்தமில்லை. இந்த ஸந்தர்ப்பத்தில் அந்த அர்த்தம் கொஞ்சங்கூடப் பொருந்தாது. 'மஹிமை வாய்ந்த ஆளும் ப்ரபுவாக இருப்பவன்' என்பதே இங்கே 'மஹேச்வர'னுக்கு அர்த்தம். இப்படி அவன், அவன் மாத்ரமே மஹாப்ரளயத்தில் விஹரணம் பண்ண, அம்பாள் வெறுமனே அதைப் பார்த்துக் கொண்டு மட்டும் ஸாக்ஷியாயிருக்கிறாள் என்பதுதான் 'மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணி'க்கு அர்த்தம்.

ஆக இது ஒரு புதுசு, ரொம்ப விநோதமான பொதுவாக சொல்வதற்கு நேர்மாறான ரிலேஷன் - அம்பாளுக்கும் ஈச்வரனுக்கும் (இடையில்) பொதுவாகச் சொல்வதென்ன? அவள்தான் கார்யம் பண்ணுபவள், சிவன் ஸாக்ஷிமாத்ரமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் ஆத்ம ஸ்வரூபம் என்பதுதான். இங்கேயோ அவன்தான் கார்ய சக்தியாக மஹா ஸம்ஹாரம் செய்ய அவள் ஸாக்ஷியாயிருக்கிறாள்!

முத்தொழிலில் வருவதான ருத்ரன் செய்யும் ஸம்ஹாரத்திற்கு மேலே, அந்த ருத்ரனும் ஸம்ஹாரம் செய்யப்படும் மஹா ஸம்ஹார ஸமாசாரம் இப்படி இருக்கிறதென்றால் ஐந்தொழில் (பஞ்ச க்ருத்யம்) என்று ஒன்று பார்த்தோமே, அது விஷயமாகவும் இதுபோல ஸ்வாமிதான்தான் கார்ய சக்தி, அம்பாள் ஸாக்ஷி மாத்ரமே என்று சிதம்பரத்தில் - சைவ க்ஷேத்ரங்களிலேயே முதலாவதாக உள்ள மஹாக்ஷேத்ரத்தில் - பண்ணியிருக்கிறது! பஞ்ச க்ருத்ய பரமானந்த தாண்டவம் என்பதாக ஐந்து தொழில்களையுமே நடராஜாதான் அங்கே பண்ணுகிறார். ராஜா என்றால் அதிகாரமுள்ள அஸல் ஸாவரின் ராஜாவாகவே அவர் அங்கே ஒரே கூத்து அடித்து அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்க, பராசக்தி தன்னுடைய சக்தியை எல்லாம் அடக்கிக்கொண்ட பரம சாந்தையாக, இருக்கிற இடமே தெரியாமல் இருப்பாள். ''ஐயா, ஐயா'' என்று அங்கே யஜமானருக்குத்தான் விசேஷமெல்லாம். எதிர்வெட்டாக ''அம்மா, அம்மா'' என்று அவளுக்கே முதலில் பூஜை நைவேத்யம், அவர் back-ground -ல் என்று மதுரையில் இருக்கிறது. ஒரே க்ருஹத்தில் புருஷன் வைத்தது சட்டமா அல்லது பெண்டாட்டிதான் நாட்டாண்மையா என்று கேட்பதற்கு ''சிதம்பரமா, மதுரையா?'' என்றே கேட்பதுண்டு!...

ஸௌந்தர்ய லஹரியில் அம்பாள்-ஸ்வாமிகளின் பலவித ரிலேஷன் சொல்லிக் கொண்டிருந்தேன். அதிலே பொது அபிப்ராயத்திற்கு வித்யாஸமாக ஸ்வாமியே மஹா

*ஸம்ஹார க்ருத்யம் செய்ய, அவள் பார்த்துக்கொண்டு, அவர் actor, அவள் spectator என்றும் ஒரு ரிலேஷன் த்வனிக்கிற மாதிரி இந்த ச்லோகத்தில் வார்த்தை விழுந்திருக்கிறது: ''மஹா ஸம்ஹாரேஸ்மின் விஹரதி ஸதி த்வத்பதிரஸௌ.'' இன்னோரிடத்தில் அம்பாளை 'விஹரஸி' என்கிறார். அங்கே 'விளையாடுகிறாய்; பதியோடுகூடிக் களிக்கிறாய்' என்றே ஸ்பஷ்டமாக அர்த்தம் கொடுக்கும் படியாக ''பத்யா ஸஹ விஹரஸே'' என்கிறார்.*

### ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே

*ஒரு யோகி மூலாதாரத்திலிருந்து சக்ரம் சக்ரமாகக் குண்டலிநீ சக்தியை எழுப்பிக்கொண்டு சிரஸ் உச்சியை அடைகிறபோது அந்த சக்தியாக இருக்கிற அம்பாள் பூர்ணமாகத் தன்னை வெளிப்படுத்திக்கொண்டு பதியோடு சேர்ந்து விளையாடுகிறாள்; (அதாவது) சிவ-சக்திகள் ஐக்யமாகின்றன என்று விஷயத்தை அங்கே தெரிவித்திருக்கிறார். அதுதான் இன்வல்யூஷனில் கடைசி ஸ்டேஜ். அதோடு ஜீவாத்ம-பரமாத்ம ஐக்யம் உண்டாகி மோக்ஷ ப்ராப்தி ஏற்பட்டுவிடுகிறது. ஸம்ஹாரம் மாதிரி வெளிப்பார்வைக்குக்கூட க்ரூரமாகத் தெரியாமல், இப்படி ஒரே ஆனந்தமாக அம்ருத ப்ரவாஹத்தை (ஒரு ஜீவனுக்குள்) கொட்டிக்கொண்டு, அப்புறம் அம்ருதம் (என்பது) ப்ரவாஹமில்லை, அநுபவம் என்பதாக அவனையே அம்ருதமாக (அமரமாக) ஆக்குகிறபோதுதான் ப்ரேம மயமான அந்தத் தாயார் விஹாரம் பண்ணுவதாகச் சொல்லியிருகக்கிறார்; ஸம்ஹாரத்தின்போது ஸ்வாமியைச் சொல்லியிருக்கிறார் என்று வைத்துக் கொள்ளலாம்.*

*அவர்களுடைய ரிலேஷன்களில் குரு-சிஷ்ய ரிலேஷனும் உண்டு. ஸ்வாமி குருவாகவும் அம்பாள் சிஷ்யையாகவும் இருப்பார்கள். ஆகமங்களென்றும் தந்த்ரங்களென்றும் ஸம்ஹிதைகளென்றும் சொல்லப்படும் வழிபாட்டு முறைகளெல்லாமே ஸ்வாமி உபதேசித்து அம்பாள் கேட்டுக் கொண்டதாகத்தான் இருக்கின்றன. ஞானாம்பிகையேயான அவள் வித்யையின் மஹிமை லோகத்திற்கு தெரியவேண்டுமென்பதற்காகவும், ஒரு பெண்ணுக்குப் பதியேதான் குரு ஸ்தானமும் என்பதை ப்ரகாசப்படுத்துவதற்காகவும் இப்படி சிஷ்ய பாவத்தில் இருந்துகொண்டு ஸாக்ஷாத் பதியிடமிருந்தே உபதேசம் பெற்றுக் கொள்கிறாள். அந்த ரிலேஷனும் ஸௌந்தர்ய லஹரியில் (ச்லோ-31) சொல்லியிருக்கிறது. அறுபத்துநாலு தந்த்ரம் என்று ஒரு கணக்கு உண்டு. அந்த அறுபத்துநாலையும் ஸ்வாமி உபதேசித்து அம்பாள் கேட்டுக்கொண்ட விஷயம் இதில் வருகிறது. நேரே அந்த விஷயத்தை அதற்காகவே சொல்லவில்லை. எதையுமே ஒரு நூதனமான கோணத்தில் சொல்வதுதான் ஸௌந்தர்ய லஹரியின் சிறப்பு. அப்படி இங்கே,'ஸ்வாமி ஒவ்வொரு விஷயத்தில் ஸித்தி தரவல்ல ஒவ்வொரு தந்த்ரமாகவுள்ள அறுபத்துநாலை உபதேசித்துவிட்டு அதோடு பேசாமல் இருந்துவிட்டார். அப்போது நீ பார்த்தாய்! 'இதென்னடா, இப்படி ஏதோ ஒவ்வொரு பலனைத் தரும் மற்ற தேவதோபாஸனைகளான அறுபத்து நாலை மட்டும் நம் குழந்தைகளுக்குக் கொடுத்துவிட்டு, தர்மார்த்த காம மோக்ஷங்களாகிய எல்லாப் பலன்களையும் தரவல்லதான நம்முடைய ஸ்ரீ வித்யோபாஸனையில் வருகிற ஸமயாசார தந்த்ரத்தை மட்டும் உபதேசிக்காமல் வாயை மூடிக் கொண்டு விட்டாரே! தர்ம, அர்த்த, காம பலன்களும் அதற்கு உண்டுதானென்றாலும், முக்யமாக பாஹ்ய (புற)*

பூஜையையெல்லாம் ஆந்தரமாக்கி (அக வழி பாடாக்கி) அப்படியே அந்தஃகரணத்தையும் ஆத்மாவிலே ஒடுக்கிவிடும் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்திற்கு வழியாயிருப்பது இந்த தந்த்ரமேயல்லவா? இதைக் குழந்தைகளுக்குக் காட்டாமல் பூட்டி வைத்துக்கொண்டு தனக்கும் வாய்ப்பூட்டுக் போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டாரே! இதென்ன அந்யாயம்?' என்று பார்த்தாய்! 'என் குழந்தைகளுக்கு என் தந்த்ரத்தைச் சொல்லி கொடும்! கொடுக்காவிட்டால் விடமாட்டேன்' என அவரை நிர்பந்தப்படுத்தினாய்!'' (என்று அந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார்.)

'நிர்பந்தம்' என்ற வார்த்தையையே ஆசார்யாள் போட்டிருக்கிறார்: ''புநஸ்-த்வந்-நிர்பந்தாத்'...

ப்ரஹ்மமாக அடித்து வைத்திருந்த ஸ்வாமியை இவள்தான் லீலையில் இழுத்துவிட்டது! ஆனாலும் அப்புறம் அதிலே அவர் அதியாகவே போய்விட்டார்! எவரைப்போல அசலமாக ஒருத்தர் உட்கார்ந்ததில்லையோ அவர் ப்ரபஞ்சமெல்லாம் கிடுகிடுக்கும்படி ஆனந்தக் கூத்தாட ஆரம்பித்துவிட்டார்! அது பஞ்ச க்ருத்ய பரமானந்த தாண்டவம். அப்புறம் ஸம்ஹார தாண்டவம் வேறு - அதுவும் அந்த மஹா பராசக்தியை வெறும் ஸாக்ஷியாக்கிவிட்டு அவரே ஆடு ஆடு என்று ஆடிக்கொண்டு! அஜபா நடனம், குக்குட நடனம் என்றெல்லாம் வேறு ஏழு தினுஸு ஆட்டங்கள்! இதில் சேராமல் நவதாண்டவம் என்று ஒன்பது தினுஸாக அமர்க்களம்! மற்ற லீலைகளும் கொஞ்ச நஞ்சமில்லை. பிக்ஷாடனம், த்ரிபுர தஹனம், ஜலந்தர வதம் என்றெல்லாம் அறுபத்துநாலு லீலைக்கு அறுபத்துநாலு மூர்த்தங்கள் கொடுக்கும்படியாக அப்படிப் பண்ணியிருக்கிறார்! மதுரை ஒரு ஊரிலேயே அது பாட்டுக்கு ஒரு அறுபத்துநாலு திருவிளையாடல் பண்ணியிருக்கிறார்! தாமே இப்படிப் பண்ணுபவர் ஜனங்களையும் லீலையைவிட்டு த்வைதத்தை விட்டு, ஞானத்திற்கு அத்வைத மோக்ஷத்திற்குப் போக விடாமல் வேறே என்னென்னவோ பலன் தருகிற அறுபத்துநாலு தந்த்ரங்களை மட்டும் உபதேசித்துவிட்டு நிறுத்திக் கொண்டு விட்டார்.

அப்போதுதான் பரம கருணையோடு அந்த அம்மா, ''நீர் நன்றாகக் கூத்தடியும், ஸ்வாமின்! உள்ளே ஆடாமல் அசங்காமலே வெளியிலே அத்தனை கூத்தும் அடிக்க உம்மாலாகும். என் குழந்தைகளுக்கு ஆகுமா? அதனால் அவர்களையும் ஆடப் பண்ணி ஒரு ஸ்டேஜ்வரை வேடிக்கை பார்த்தாலும், அந்த ஆட்டமெல்லாம் கர்ம நாசத்திற்கும், சித்த சுத்திக்குமே ஸஹாயம் பண்ணும் படியாக ஆக்கி, அப்படியே ஞானத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் ஆடாமல் அசையாமல் செய்வதான என்னுடைய உபாஸநா மார்க்கத்தை அவிழ்த்துவிடும். (குரலை உயர்த்தி) விடுகிறீரா, இல்லியா? விடாவிட்டால் உம்மை நான் விடமாட்டேன்'' என்று அம்பாள் போட்டு நிர்பந்தப்படுத்தினாள். இப்பேர்ப்பட்ட உசந்த அம்பாள் தந்த்ர'த்தை இந்தப் பித்துக்குளி லோகத்துக்கு தருவதாவது என்றுதான் அவர் அதை இறுக்கிப் பூட்டி வைத்துக் கொண்டிருந்தது. ஆனால் அவள் விடாப்பிடியாக நச்சரித்ததன் மேலே அவர் அந்த தந்த்ரத்தையும் உபதேசித்து லோகத்திற்குக் கொடுக்கவேண்டியதாயிற்று.

இவளுடைய வழிபாட்டுமுறைதான் அது. ஆனாலும் இவளே அதைப் ப்ரகடனம் பண்ணாமல் பதியும் குருவுமான ஸ்வாமிதான் பண்ணணும் என்று இருந்ததில் பதிவ்ரதா லக்ஷணத்தையும் சிஷ்ய லக்ஷணத்தையும் காட்டியிருக்கிறாள். அதே ஸமயத்தில்

*குழந்தைகளான நமக்கெல்லாம் அந்த பரம மோக்ஷோபாயம் கிட்டாமலிருக்கலாமா என்பதில் ஒரு பதிவ்ரதையோ சிஷ்யையோ அடங்கிக் கிடக்கிற மாதிரியில்லாமல் அவரைப் போட்டு நிர்பந்தப்படுத்தி அதை வெளியிடப் பண்ணியிருக்கிறாள். இங்கே பதி பக்தி, குரு பக்தி எல்லாவற்றுக்கும் மேலே மாத்ரு வாத்ஸல்யந்தான் தன்னுடைய லக்ஷணம் என்கிறது போலக் காட்டியிருக்கிறாள்.*

*அந்த ஸமய தந்த்ரத்தின் பல விசேஷங்களில் ஒன்று என்னவென்றால் அதுதான் வேத வழிக்கு ரொம்ப அநுரஸணையாக இருப்பது. எல்லா தந்த்ரங்களுமே வைதிகமாக 'அடாப்ட்' பண்ணிக்கொள்ளக் கூடியவை தான். வைதிகம் - தாந்த்ரிகம் என்று இரண்டு தனித்தனி மார்க்கம் என்கிற மாதிரி பிரிப்பது ஸரியில்லைதான். ஆனாலும் முழுக்கவும் வைதிகம் எடுத்துக்கொள்ள முடியாத அநேக வழக்குகள் பல தந்த்ரங்களில் இடம் பெற்றுவிடத்தான் செய்திருக்கின்றன. இப்படி இருப்பவற்றை வைதிகத்திலிருந்து பிரித்துதான் இரண்டாகச் சொல்வது. நம் ஆசார்யாள்தான் சுத்த வைதிக பூஜா மார்க்கத்தை மறுபடி ஜீவ சக்தியோடு ஸ்தாபித்தார். இந்த வைதிக பூஜையிலும் தந்த்ரங்களிலுள்ள மந்த்ரங்கள் வரத்தான் வரும். வேடிக்கை என்னவென்றால், அந்த மந்த்ரங்களுக்கும் வைதிக basis இருக்கவே செய்யும், சிவ பஞ்சாக்ஷரீ மாதிரிச் சிலது வேதத்திலேயே ஸ்பஷ்டமாக வருகிறதென்றால், அப்படித் தெரியாதவற்றைகூட ஸம்ஜ்ஞையாக (ஸமிக்ஞையாக) வேதம் சொல்லித்தான் இருக்கிறது. இப்படி ஸ்ரீ வித்யோபாஸனை விஷயமாக ஆசார்யாள் வைதிக ஆராதனையை ஸ்தாபிக்க நினைத்த போது ஸமயாசாரத்தைத்தான் எடுத்துக்கொண்டு பண்ணியிருக்கிறார்.*

*அதை ஆசார்யாள் அம்பாளுடையதேயான தந்த்ரம் என்பதாக ''தே தந்த்ரம்'' என்கிறார். ''உன் தந்த்ரத்தை ஸ்வாமி வெளிப்படுத்தித்தானாகணும் என்று வலுக்கட்டாயப்படுத்தி ஸாதித்துக் கொண்டாய்!'' என்கிறார். விசேஷம் என்னவென்றால், அம்பாள் தந்த்ரங்கள் பலதில் அவளுக்கே எல்லா முக்யமும் கொடுத்து ஸ்வாமியை இரண்டாம் பக்ஷம், மூன்றாம் பக்ஷம், அதம பக்ஷம் என்றுங் கூட வைத்திருக்கும்; இந்த அம்பாளுடையதே எனப்படும் ஸமயாசாரத்தில்தான் அப்படிப் பண்ணாமல் இரண்டு பேருக்கும் ஸமப் பிராதான்யம் தந்திருக்கிறது! தன்னையே ஒரே உசத்தியாக அவருக்கு மேலே சொல்லியிருக்கும் தந்த்ரங்களை அம்பாள் 'தன்னுடைதே' என்று அங்கீகரிக்காமல், பதியைத் தனக்கு ஸமமாகச் சொல்வதைத்தான் அப்படிக் கருதுகிறாள் என்பதிலும் அவளுடைய பாதிவ்ரத்ய விசேஷம் தெரிகிறது.*

*அவர் இவளுக்கும் உயரே இவளே அடங்கிக் கிடக்கும் யஜமானனான பதி, ஸம ப்ரதானமுள்ள பதி, உப்புக்குச் சப்பாணி அகமுடையான், குரு, இவள் வைத்த அதிகாரி, தாஸன், பக்தன், பிள்ளை (பேரன் வரைகூட இழுத்துவிட்டு விட்டேன்!); இவள் அர்த்தாங்கனா, அவருடைய பூர்ண சரீரத்தையுமே எடுத்துக் கொண்டவள் அவர் உயிருக்கே ரக்ஷை, அவரையே ஆட்டிப் படைக்கிற ஜீவசக்தி என்றிப்படி சிவனையும் சிவ ஸாம்யமுள்ள மூர்த்திகளையும் அம்பிகையோடு ஸம்பந்தப்படுத்தி இந்த ஆனந்த லஹரி ஸெக்ஷனில் பலவிதமாகச் சொல்லியிருக்கிறது.*

*இதெல்லாமிருந்தாலும் ஸ்ரீ வித்யா தந்த்ர விசேஷங்கள் தான் அந்த ஸெக்ஷனுக்கு முக்யம். அந்தத் தந்த்ரத்தில் வரும் இரண்டு மந்த்ரங்களையும் அதில் சொல்லியிருக்கிறது. அந்த இரண்டு ச்லோகங்களும் (32;33)தான் இந்த பாகத்திற்கு உயிர்நிலை என்று*

அபிப்ராயமுண்டு. பின் பாதியில் அவயவ ஸ்வரூப வர்ணனை என்றால் இது அதேஅம்பாளை அக்ஷர ஸ்வரூபத்தில் பிடித்துக் கொடுப்பது. தேவதைகளுக்கு சரீர ரூபம், சப்த ரூபம் என்று இரண்டு இருப்பதில் பின் பாகம் சரீர ரூபம், இது சப்த ரூபம். அது கண்ணால் பார்க்கும் த்ருச்ய ரூபம். இது காதால் கேட்கும் ச்ராவ்ய ரூபமாகவும் வாக்கால் சொல்லும் வாச்ய ரூபமாகவும்இருப்பது. இந்த ரூபத்திலிருந்து தான் அந்த ரூபமே உண்டாயிற்று; இதை ஜபிப்பதாலேயே அது ப்ரத்யக்ஷமாகிறது என்று (சப்த ரூபத்திற்கு) உத்கர்ஷம் சொல்வதுண்டு.

இதனாலும் அதைத்தான் பிடிக்கிறது என்றால் அப்போது இது உபாயந்தான், அதுவே லக்ஷ்யம் என்று அதற்கும் உத்கர்ஷம் சொல்லலாம்தான்? இதிலிருந்தே அது உண்டாகிறதென்னும்போது அதுதான் பலன், பழம் என்று உத்கர்ஷம் சொல்லலாம்தானே? மற்ற ஸமயங்களில் என்ன சொல்வேனோ? 'ஸௌந்தர்ய லஹரி' என்று எடுத்துக்கொள்ளும்போது அம்பாளுடைய அழகான அவயவ சரீர ரூபத்துக்குத்தான் full mark! தத்வமெல்லாம் சொல்லிப் பூர்வ பாகத்தை முடிக்கும் போது ஜனக-ஜனனி என்று தந்தை-தாயில்தான் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார். 'ஜனகன்', அப்புறம் 'ஜனனி'. அந்தத் தாயாரிடம் அத்தனை தந்த்ரமும் தத்வமும் பூரத்தியாகிவிடுகின்றன. குழந்தைக்கு தாயாரென்றால் அவளுடைய ஆகாரம்தான் (வடிவம்தான்)! 'முகம் பார்க்கிறது' என்று ஒரு குழந்தை முதலில் தெரிந்து கொள்வது தாயாரின் ரூபத்தைத்தான். பச்சை, சிவப்பு, கலர் கலராகப் பார்த்து ஸந்தோஷப்படுவதற்கு மேலே ஒரு குழந்தை ஸந்தோஷப்படுவது தாயாரின் ரூபத்தைப் பார்த்துத்தான். அதனால் ஜனக-ஜனனி என்று அந்த ஜகஜ்ஜனனியை முடிவாகச் சொன்னதோடு தத்வ சாஸ்திரத்தை மூட்டை கட்டிவைத்துவிட்டுத் தாயாரின் ரூபத்தைக் கேசாதிபாதம் வர்ணிக்க ஆரம்பித்துவிடுகிறார்.

இங்கேதான் 'ஸௌந்தர்ய லஹரி'' என்றே சொல்லப்படும் பாகம், அம்பாளுடைய லாவண்ய வெள்ளத்தை அலை அலையாக வர்ணிக்கும் பாகம் ஆரம்பிக்கிறது.

—★—

உ

# ஸௌந்தர்யலஹரீ

## ஒன்பது உரைகளின் கருத்துச் சுருக்கம்

வைத்ய ராதாகிருஷ்ண சாஸ்திரீ

## சிவச் சக்த்யா யுக்த:

### சுலோகம் - 1

*சிவன் - மங்கள வடிவினன், ஒளிமயமானவன், தானே தன்னை தன்னொளியால் பிரகாசிக்க செய்பவன், தன்னுள் உலகையே அடக்கிக் கொண்டவன். சக்தி தானே இயங்குபவள். மற்றவற்றை இயக்குபவள், இயக்கமின்றி ஆற்றலை உள்ளடக்கி இயங்காதிருப்பவள். பேராற்றல், பேருணர்வு, பேரியக்கம் என்பதன் வடிவானவள். சிவனும் சக்தியும் ஒரே பரம்பொருளாக யோகிகளின் உணர்வில் புலப்படுகிற ஒரே தத்துவமாயிருப்பவர்கள். சொல்லும் பொருளும் போல் இணைந்தவர்கள் என்பர். சொல்லை விட்டுப் பொருளைப் பிரித்தால் அது சொல்லாக இருக்காது. பொருளற்ற சொல்லும் சொல்லற்ற பொருளும் இல்லை. உள்ளத்தில் தோன்றுகிற எண்ணமும் சொல்வடிவமேற்றதே. பிரிந்துள்ளவர்களே இணையக்கூடும் என்ற உலகியலுக்கு மாறாக ஒரே பொருள். இரு கோணங்களில் பார்க்கும்போது இரண்டாகத் தோன்றக்கூடும். சிவனும் சக்தியும் என்ற இருமையாக பரம்பொருளிடம் அடங்கியிருந்த இச்சா சக்தி வெளிப்பட்டது. படைக்கிற ஸங்கல்பத்தால் நான் பலவாக ஆவேன்''பஹுஸ்யாம் ப்ரஜாயேய'' என்று சிந்தித்தது. ஒன்றுயிருந்த சிவன் சிவனும் சக்தியுமானுன். அப்போதும் பிரியவில்லை. பலவாக ஆக சிவனுக்குள் ஏற்பட்ட ஸ்பந்தனம் என்ற உள் துடிப்பே, வெளியில் தெரிகிற ஸ்ப்புரணம் என்ற துடிப்பாயிற்று; துடிப்பின் விளைவாக மூலப் பொருட்கள் (36) வெளிப்பட்டன. இவை ஒவ்வொன்றும் இணையாததால் உலகம் ஸ்தூலப்பொருளாவதில் தடை ஏற்பட, ஸ்பந்தனமும் ஸ்ப்புரணமுமாக வெளிப்பட்ட சக்தி பலதரப்பட்ட கலவைகள் மூலம் இணைக்கிற க்ஷோபண சக்தியாயிற்று. இச்சா சக்தி பலவாக ஆகவழி காண ஜ்ஞான சக்தியாயிற்று. தனித் தன்மை கொண்ட மூலப் பொருட்களை க்ஷோபணம் எனும் கிரியாசக்தி பூமி ஜலம் அக்னி வாயு என்ற ஸ்தூலப் பொருட்களையும் ஆகாசம் எனும் ஸூக்ஷ்மப் பொருளையும் உண்டாக்கி புத்தி மனம் இந்திரியம் என்ற ஸூக்ஷ்மமான தானியங்கிகளையும் கூட்டுப் பொருளாக்கி உலகமென்றுக்கியது.*

*சிவம் எனக் குணமற்று, குறைவற்று, களங்கமற்று, தான் தோன்றியாக புலனுக்கு அப்பாற்பட்டிருந்ததொன்று, தன்னுள் ஏகமாக (இரண்டற) நின்றிருந்த சக்தியை தனித்தியங்கச் செய்து தான் அந்த இயக்கத்திற்கு ஆதாரப் பொருளானது. சக்திக்கு இயக்கமே இயல்பு, சிவனுக்கு இயக்கமற்றிருப்பதே இயல்பென்றுனது. அந்நிலையில் சிவன் சக்தி என்று இரண்டாக வழங்கப்பட்டது.*

*நமது அளவு கோலில் சக்தியைப் பிரித்துப் பார்த்தால் ஆதாரம் ஜடப் பொருளாகும். ஜடம் தானியங்கி அல்ல. சக்தியின் இணைப்பு கிட்டினுல் தான் இயங்கும். ஆதாரமின்றி சக்தியும் தானியங்கி அல்ல. ஆதாரத்தின் இணைப்பு பெற்றுல் தான் இயக்கமாக அது*

வெளிப்படும். சிவ சக்திகள் அவ்வாறல்ல. உலகப் பொருள் போல் ஜடத்தையும் சக்தியையும் பிரித்தறிய அங்கு வாய்ப்பில்லை. என்றும் சிவனும் சக்தியும் இணைந்தவர்களே.

தக்ஷிணாமூர்த்தி குருவரர்களுக்கும் குரு. ஆதிகுரு. அவர் தன் சக்தியை உள்ளடக்கியதும் இயக்கமிராத மௌனியாகிறுர். ஸனகாதியரும் மௌனிகளாகவே ஜ்ஞானம் பெறுகின்றனர். இது ஒப்புமுயர்வுமற்ற தனிக்காட்சி. மற்ற கோலங்களில் சக்தி - சக்திமான் என்ற இரு தோற்றங்களேக் காட்டுகிறார். உலகைப் படைக்க முற்பட்ட பரம்பொருள் படைப்பு முதலானவற்றை சக்தியிடமளித்துவிட்டுத் தான் ஆதாரமாகி விடுகிறது.

ஸப்த சதியில் இதற்கு ஒரு விளக்கமுண்டு. தேவி உலகைக்காண விரும்பினாள். அவளிடமிருந்து ஸரஸ்வதி லக்ஷ்மி கௌரி என்ற மூன்று சக்திகள் வெளிப்பட்டனர். சக்திகளை ஏற்றுச் செயல்படுபவராக பிரும்மா, விஷ்ணு, ஹரன் என்ற மும்மூர்த்திகளைப் படைத்தாள். படைப்பைப் பிரும்மாவிடம் தந்து ஸரஸ்வதியை அவருக்குத் துணைவியாக்கிப் படைப்புத் தொழில் தானே இயங்கும்படி செய்தாள். அவ்வாறே விஷ்ணுவிற்கு லக்ஷ்மியைத் துணைவியாக்கிக் காப்புத் தொழில் இயங்கச் செய்தாள். கௌரியை ஹரனுக்கு துணைவியாக்கி மறைப்பை இயங்க செய்தாள். இந்த விரிவின் போது சிவன் ஸாக்ஷியாக நின்றிருப்பார். பொறுப்பேற்றுப் பணிகளை முறைப்படுத்தித் தாளியங்கியாக இயங்கச் செய்பவரை ப்ரபு என்பர். சக்தியே இங்கு பிரபு ஆகிறுள். தனது பிரபு சக்தியைக் கணவனுடையதாக செய்து மகிழ்கிறுள். தன்னை அப்போது பிரபு எனக் காட்டிக் கொள்ளாத இல்லாளாக இருப்பாள். மனைவியால் தான் குடும்பம் பெருகுகிறது. கணவன் அதற்கு உதவுகிறான். குடும்பப் பெருக்குக்குக் காரணமானவளே குடும்பப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்போது அவள் தான் பிரபு. கணவனுக்கு அந்தப் பிரபுத்தன்மையை இயல்பான தன்னடக்கத்தால் வழங்குகிறாள். இது கணவன் மனைவியுடன் இணைந்து வாழ்வதால் கிட்டும். இந்த உலகியலை ஆதிதம்பதியரும் நடித்துக் காட்டுகிறார்கள். சிவ: சக்த்யா யுக்தோயதி ப்ரபவிதும் சக்த: பவதி இதன் பொருள் சக்தியுடன் இணைந்து செயல்படாதவன் தன்பணியை நிறைவேற்றுவதற்கும் இயலாதவனாகிறான். இங்கோ இந்த தம்பதியரின் முன் நிற்கும் பணி உலகமாக விரிந்து செயல்படுவதே. பரிணுமமோ விரிவோ சக்தியிடமடங்கிய ஆற்றல்கள்.

மும்மூர்த்திகளும் ''தம்மைத் தோற்றுவித்தவளும் அவளே. இயங்குவதற்கு இன்றியமையாத சக்திகளான ஸரஸ்வதி முதலானோரைத் துணை நிற்கச் செய்தவளும் அவளே. அவளது அருளால் பெற்ற சக்தியால் தான் உலகம் தோன்றி வளர்ந்து அதன் பணியை நிறைவேற்றுகிறது'' என உணர்ந்ததால் ஹரி ஹரன் விரிஞ்சி என்ற மூவரும் அவளை ஆராதிக்கத் தொடங்கினர். தேவியின் அருள் தம் தம் பணிகளை நிறைவேற்றும் ஆற்றலைத் தொடர்ந்து வழங்க வேண்டும் என்று கோரவே சக்தியின் ஆராதனை.

இந்த மூவருமே ஆராதிக்கின்றனர் என்பதைக் கண்ட மன்மதன் முதலானோரும் தம்தம் பணி நிறைவுற அருள்புரிய வேண்டித் தேவியை ஆராதித்தனர். மன்மதன், சந்திரன், குபேரன், லோபாமுத்ரா, அகஸ்தியர், இந்திரன், முருகப் பெருமான், தத்தாத்ரேயர், துர்வாஸர், மனு எனப் பின் தோன்றிய பெரியோர்களும் அவளை உபாசித்தனர் என்பதால் ஹரிஹர விரிஞ்ச ஆதிபி: என அவர்களே ஆசாரியாள் இங்கு ஆதி என்ற சொல்லால் குறிப்பிட்டிருக்கலாம்.

ராமன் செல்கிறான் எனும் போது செல்கிற சக்தி பெற்றதால் தான் ராமன் செல்கிறான். இங்கு சக்திக்கும் சக்திமானுக்குமிடையே பிரிவில்லை. சக்தனுக்கும் சக்திக்கும் இடையே வேற்றுமை இல்லை என்பர். உண்மையில் சிவனும் சக்தியும் ஒருவரே. ஆனால் இருவர் என்ற கருத்து வாஸனா பலத்தால் உள்ளத்தில் ஆழப்பதிந்து விட்டது. அதனைத் தெளிவாக்க இந்த விளக்கம்.

உலகில் உயிர் எழுத்துக்களை சக்தியாகவும் மெய்யெழுத்துக்களை சிவனாகவும் கூறுவர். உயிர் எழுத்துக்களைத் தனியே உச்சரிக்கலாம். மெய்யெழுத்துக்களை உயிர் எழுத்துக்களுடன் இணைத்துத்தான் உச்சரிக்க முடியும் க் த் ப் என்று தனி மெய்யெழுத்துக்களைக் கூறும்போது இக் இத் இப் என்று உயிர் எழுத்துடன் சேர்த்தே உச்சரிப்போம். தேவியின் ஸ்ரீ வித்யை என்ற மந்திரத்தில் அ ஈ என்ற உயிரெழுத்துத்துணையால் தான் 13 அக்ஷரங்களும் உச்சரிக்கப்படுகின்றன என்பதை மந்திர ஜபம் செய்பவர்கள் உணர்வர். ஏ ஈ என்ற இரண்டு மட்டும் மெய்யெழுத்தின் துணையின்றி உச்சரிக்கப்படுகின்றன. இதிலும் சக்தியின்றி சிவன் செயல்பட இயலாதது புரியும் என்பர். தேவியின் பிரதான யந்திரமான ஸ்ரீ சக்ரத்தில் சக்தித்ரிகோணங்கள் ஐந்தும் சிவத்திரிகோணங்கள் நான்கும் எதிரும் புதிருமாகக் கூடியே 43 த்ரிகோணங்கள் அமைகின்றன. சிவனைவிட சக்தி வலிவு மிக்கவள் என்பதை 5 சக்தி திரிகோணங்கள் - 4 சிவத்ரிகோணங்கள் என்ற அமைப்பு காட்டுகிறதென்பர். எதிரும் புதிருமாக இவை இணையாவிடில் 43 முக்கோணங்கள் உருவாகாது.

ஆசார்யாள் நேரிடையாகத் தேவியிடம் பேசுகிறார். மும்மூர்த்திகள் போன்றோரே உன்னை ஆராதிக்க முடியுமென்றால் என்போன்றோர் நிலை என்ன ? நான் உன்னை வணங்கவோ துதிக்கவோ தகுதியுள்ளவனா? ஏன் இந்தத் தயக்கமெனில் உன்னை அணுகப் புண்யம் என்ற பக்கபலம் இல்லையே! வணங்க உடலும் உள்ளமும் ஒத்துழைக்க வேண்டும். துதிக்க உடலும் உள்ளமும் தவிர வாக் என்ற இந்திரியமும் ஒத்துழைக்க வேண்டும். இம்மூன்றையும் நீயே அளித்து என்னை உருவாக்கியுள்ளாய் என்பது உண்மை. ஆனால் அவை உன்னை நோக்கி நகர்வதை நான் செய்த வினைகளால் ஏற்பட்ட வாஸனையும் ஸம்ஸ்காரமும் தடுக்குமே! விதியையும் அனுகூலமாக்கிக் கொள்ளவும் புண்யம் தேவையே! அந்தப் புண்யம் நான் செய்திருப்பேனா? புண்யம் செய்யாதவனாயின் உன்னை வணங்கவோ துதிக்கவோ எவரால் முடியும்? இந்நிலையில் நான் செய்யக் கூடிய தென்ன? அந்தத் தகுதிபெறவே செயற்கையான சிரத்தையுடனும் பக்தியுடனும் உன்னைத் தியானித்து, எனக்கு முன்னிருந்த பெரியோர் அனுபவத்தால் உணர்ந்து இயற்றிய ஸ்தோத்திரங்களைப் பாடியுணர்ந்த அனுபவத்தின் அஸ்திவாரத்தில் நான் உடலால் வணங்குவேன். வாயால் பாடுவேன். ஏற்பாயா? (1)

## தநீயாம்ஸம் பாம்ஸும்

### சுலோகம் -2

''ஹரி ஹர விரிஞ்சாதிபிரபி ஆராத்யா - ஹரியும் ஹரனும் பிரம்மாவும் ஏனையரும் உன்னை அவரவர் பணி நிறைவடைய ஆராதிக்கின்றனர். படைப்பு என்பது மூலப்பொருளைப் பல வகைப்பட்ட உலகமாக விரிவடையச் செய்வதாகும். படைப்பவரும் படைப்பு என்ற ஆற்றலும் முழுமைபெற படைக்கப்படுகிற பொருளைச்

சார்ந்துள்ளன. பிரும்மா படைப்பவராகத் தோன்றினார். தேவி தன் ஆற்றலில் ஒரு அம்சமான படைப்பை அவரிடம் அளித்தாள். படைக்கப் பொருளை எங்கே தேடுவது?

தேவி இதுவரை பஞ்ச ப்ரம்ஹாஸனத்தில் அமர்ந்திருந்தவள் எழுந்து நடந்தாள். திருவடிகளின் அடியில் ஆதாரமாயிருந்த இடம் நொருங்கித் துகள்கள் ஆனது. தேவியைப் பக்தியுடன் பின் தொடர்ந்த பிரும்மா அணுவை விட நுண்ணியதான கால்தூசியை எப்படியோ சேமித்துக் குவித்தார். பராசக்தியின் ஸ்ருஷ்டி சக்தி தன்னுள் புகுந்ததை உணர்ந்து சிறிதும் குறைபாடின்றி பல்வேறு தரங்களுள்ள பிரபஞ்சத்தைப் படைத்தார். அதுவே பிரபஞ்சம் - விரிவடைந்தவொன்று. லோகம் - பார்வைக்குப் புலப்படுவது. கால்தூசி பரமாணுவாக, பரமாணு இரண்டணுக் கூட்டான த்வியணுகம், மூன்று த்வயணுகங்கள் கூடித் த்ரியணுகம் என்று விரிந்தது. பூமியாக, ஜலமாக, நெருப்பாக, காற்றாக, ஆகாசமாகத் தோற்றம் பெறப் பரமாணுக்கள் ஐந்து நிலைகள் பெற்றன. விரிவின் தொடக்கத்தில் இவ்வைந்தும் ஒன்றோடொன்று இணைந்ததும் இவை உருப்பெற்றன. இங்கு சிறிது விளக்குவோம்.

தேவியின் திருவடிகள் தரையில் பதிந்தன. தேவியின் திருவடிகளில் இடது திருவடி செவ்வொளி கொண்டது. வலது திருவடி ஸ்படிகம் போன்ற வெள்ளொளி கொண்டது. சக்தியும் சிவனும் திருவடிகளில் தனிச்சிறப்பைக் காட்டினர். இவ்விரண்டின் ஒளிகளும் நடுவே கலந்து வெண்மையில் சிவப்பு ஊடுருவிப்பாய்ந்து ஒளிக்கலவை (மிச்ரம்) நேர்ந்தது. (குருவின் திருவடிகளிலும் இந்த மூன்று நிறங்களுள்ளதை தியானிப்பது உண்டு. ரக்த சுக்லப்ரபா மிச்ரம் குருபதத்வந்த்வம் வந்தே) திருவடிகளில் பட்ட தூசியிலும் இந்த மூன்று வர்ணங்கள் படிந்தன. செவ்வொளி பட்ட தூசியைக் கொண்டு பிரும்மா உலகைப் படைத்தார். வெள்ளொளி பட்ட தூசியைக் கொண்டு விஷ்ணு படைக்கப்பெற்ற உலகைக் காத்தார். மிச்ர ஒளியைக் கொண்டு ஹரன் லயமடையச்செய்தார். அதனால் பிரும்மாவை ரஜோமூர்த்தி என்றும் விஷ்ணுவை ஸத்வமூர்த்தி என்றும் ஹரனைத் தமோமூர்த்தி என்றும் கூறுவர். தமஸ் என்பது கருமையைக் குறிப்பதல்ல. இன்ன நிறமென்று குறிப்பிட இயலாத நிறமும் தமோ குணத்தைச் சாரும். சிறுதுளி பெரு வெள்ளம் என்பது போல் தேவி சென்ற இடங்களில் பிரும்மா தரையில் விழுந்து வணங்கிச் சேமித்த தூசி சராசரமாக விரிவுற்று பதினான்கு உலகங்கள் என்று 50 கோடியோசனை பரப்பளவு கொண்டதாயிற்று. (யோசனை- 12 கிலோ மீட்டர்) பாதங்கள் தாமரை ஒத்தனவாதலால் சரணபங்கேருஹம் தாமரையிலேயிருந்து மகரந்தத்தூள் பரவி மணம் பரப்பும். பிரம்மாவின் தேடுதலுக்கு இந்த மகரந்தத்தூள் கிடைத்தது. கண்களுக்குப் புலப்படாத தூளே தேவியின் ஸ்ருஷ்டி சக்தியால் உலகளவாயிற்று.

உலகைத் தாங்கிக் காப்பாற்றுகிற ரக்ஷண சக்தி விஷ்ணுவின் உட்புகுந்தது. அவர் ஆயிரம் தலைகள் பெற்று பிரும்மா படைத்த உலகைத் தாங்குகிறார். வெள்ளொளி பட்ட தூசி அந்த ரக்ஷண சக்தியானது. பக்ஷபாதமின்றி கருணை பெருக இந்த ஸத்வத்தூசி உதவுகிறது. சூரமஹாராஜரின் பிள்ளை வஸுதேவர். வஸுதேவரின் பிள்ளையாகப் பிறந்ததால் கிருஷ்ணனை சௌரி என்பர். ஏழுவயது பாலகன் ஒரு கையால் கோவர்த்தன மலையைத் தாங்கிய காட்சி ஆசார்யாளின் உள்ளத்தில் தெரிகிறது. ஊரைத்தாங்க மலையைத் தாங்கினார். உலகைக் காக்க ஆயிரம் தலைகளைப் பெற்றார். உலகைத்தாங்குவதாகப் புராணம் கூறுகிற ஆதிசேஷனும் சௌரி என்ற பதத்தின் பொருளாவார்.

தேவியிடமிருந்து ஸம்ஹார சக்தி பெற்ற ஹரன் தினமும் சராசரத்தின் உருமாற்றத்திற்கு உதவுபவர். நம் உடலில் ஒவ்வொரு நொடியிலும் பல ஜீவாணுக்கள் உருமாறி வெளியாகின்றன. உணவு முதலியவற்றின் மூலம் உடல் ஏற்றுக்கொண்ட பொருட்கள் தேவையை நிரப்பும் சக்தி உள்ளவரை உடலில் நின்ற பின்பு உருமாறி வெளியேறுகின்றன. அவை இயற்கையுடன் கலந்து பஞ்ச பூதநிலை பெற்று மறுபடி வேறுபொருள்களாக உருமாறுகின்றன. இயற்கையில் லயமடைவது ஹரனின் ஸம் ஹாரப்பணி. வேறு பொருளாக உருமாறித் தோன்றுவது பிரும்மாவின் ஸ்ருஷ்டிப் பணி. உலகமாக இருக்கும் வரை இந்த ஸம்ஹாரமும் படைப்பும் ஒவ்வொரு நொடியிலும் தொடரும். ஒருநாள் இந்த ஸ்ருஷ்டி ஸ்திதி லயக்கூத்து முடிவுறும். அதனைப் பிரளயம் என்பர். அப்போது பிரும்மாவிற்கும் விஷ்ணுவிற்கும் ஓய்வு. ஹரன் இந்த உலகை தூளாக்கி அதன் இயல்பு நிலையையும் பிரளயாக்னியால் சாம்பலாக்கி விடுவார். ''அக்னிரிதி பஸ்ம, வாயுரிதி பஸ்ம, ஜலமிதி பஸ்ம, ஸ்தலமிதி பஸ்ம, வ்யோமேதி பஸ்ம, ஸர்வம் ஹவா இதம் பஸ்ம'' என விபூதி இட்டுக்கொள்ளும்போது சொல்கிற மந்திரம் உண்டு. பஞ்சபூத நிலைவரை ஹரன் உலகை உருமாற்றிய பின் பிரள யாக்னி என்ற காலாக்நி ருத்ரர் வடிவில் அந்த பூதங்களையும் சுட்டெரித்துச் சாம்பலாக்கி விடுவார். சாம்பலாவதற்கு முன் நிலைவரை எந்தப் பொருளும் வேறு பொருளின் உற்பத்திக்குக் காரணமாவது உண்டு, சாம்பலான பின் அதிலிருந்து எதுவும் மறுபடி தோன்றுது. சாம்பலைக் கூடக்குவித்து வைக்காமல், உடல் முழுவதும் பூசிக் கொண்டுவிடுவார். ஹரனை 'சுடலைப்பொடி பூசி' என்று வணங்குவதுண்டு.

படைப்பிலிருந்து ஸம்ஹாரம் வரை மும்மூர்த்திகளின் மூலம் நடந்ததும் உலக மூலப்பொருளை ஈச்வரனும் ஸதாசிவனும் ஏற்றுப் பாதுகாத்து மறுபடி மும்மூர்த்திகளிடம் உலகமாகும் வேளை நெருங்கியதும் ஒப்படைப்பர் என்பது தத்துவ விளக்கம். தேவி இவற்றிற்காக ஒதுக்கும் நேரம் கண்மூடித் திறத்தலளவாகிற அவளது நிமிஷம். உந்மேஷநிமிஷோத் பந்ந விபந்ந புவநாவளி: என லலிதா ஸஹஸ்ரநாமம் கூறும்.

## அவித்யாநாமந்த:

### சுலோகம் -3

பிரும்மா முதலானோர் தேவியை ஆராதித்து, அவளது திருவடித் தூளை சேமித்து அதனை உலக மூலப் பொருளாக்கியும் தன் பலமாக்கியும் பணி நிறைவைப் பெற்றனர். என்னைப் போன்ற அறிவிலிக்கும் ஜடனுக்கும் ஸாதனமற்றவனுக்கும் அந்தத் தூசி கிட்டுமா? என்ற ஐயம் இந்த ச்லோகத்தால் நீக்கப்படுகிறது. உலகில் அறிவே இல்லாத உயிரினம் எதுவும் கிடையாது. எல்லாமறிவதற்கான அறிவில்லை எனலாம். கற்றும் கற்ற வாழ்க்கையில் அதனைப் பயன்படுத்தாதவர் உண்டு. சுய அறிவைத் தீட்டக் கல்வியறிவு பெற வாய்ப்பில்லாதவர் உண்டு. மந்திர சாஸ்த்ர ஆராய்ச்சித்திறன் பெற்றும் மந்த்ர நுட்பம் அறிந்தும் அதனை தெய்வ வழிபாட்டிற்குப் பயன்படுத்தாதவருண்டு. உண்மை நிலை அறிய வொண்ணுதபடி போலி அறிவு மறைப்பதுண்டு. பிறப்பிலேயே சுய அறிவின்றிப் பிறப்பவருண்டு. இவர்களனைவருமே அஜ்ஞானிகள் தான். அவர்களிடம் அஜ்ஞானம் என்ற இருள் சூழ்ந்துள்ளது. அவர்களைச் சுற்றிப் பல பொருட்கள் இருந்தும் இருட்டின் மறைப்பால் எதனையும் கண்டு கொள்ள முடியவில்லை. இருட்டைப் போக்குவதில் மற்ற

ஒளி மண்டலங்களைவிட ஸூர்ய மண்டலத்திற்கு சக்தி அதிகம். எனினும் ஸூரியன் வானவீதியில் துலங்கியும் குகையிலும் வெளிச்சம் புகாத அறைகளிலும் இருள் நிற்கும். அது ஸூர்யனால் விளக்கம் பெறாது. அந்த இருள் போல் தான் மனிதனின் உள்ளத்து இருளும். கல்வியோ, காட்சியோ, இந்த இருளைப் போக்காது. தெளிந்த உள்ளத்தில் தான் அறிவெனும் வெளிச்சம் பாயும். ஸூரிய ஒளியோ ஸூரியனைப் போன்ற கல்வியோ இருளை அகற்ருது. தேவி! அந்த இருளை நீதான் அகற்றுகிருய்.

உதித்து அஸ்தமிக்கிற சூர்யன் உள்ள இடத்தில் வெளிச்சமும் இருட்டும் தொடர்ந்து நிற்கும். வெளிச்சமே இல்லாத நாளோ வெளிச்சம் எப்போதும் உள்ள நாளோ கிடையாது. ஆனுல் ஸூர்யன் உன்னிடமிருந்து பிரகாச சக்தி பெற்று இருட்டுக்கலப்பிராத ஒளி மயமான இடம் ஸூர்யன் உதிக்குமிடம். அன்றன்று செலவழிந்த ஒளியை மீண்டும் ஸூர்யன் சேமிக்கும் இடம். உலகிற்கப்பால் உள்ள அந்த தீவு நகரம் ஸூர்யனும் ஒளியை நிரப்பிக் கொள்ளுமிடம். பன்னிரு ஸூர்யர்கள் உண்டு. பருவத்திற்கேற்ப ஒளிப்பரப்பில் மாற்றம் கொள்வர். அவர்களும் அங்குதான் சக்தி ஊட்டம் பெறுகின்றனர். (மிஹிரோத்தீபன கரீ என்றும் பாடம் உண்டு) அந்த சக்தியே தேவியின் பாதத்தூசிதானே ! பேரிருளையே அகற்றுகிற ஸூர்யனுக்கும் அதுதான் சக்தி தருகிறது எனில் என் அறியாமையைப் போக்க இயலாதா? தூசியின் அருள் பெற்ற ஸூர்யனும் நகரிலும் சேரியிலும் ஆற்றிலும் குட்டையிலும் மாளிகையிலும் குப்பை மேட்டிலும் சமமாகவே ஒளிதருகிறுனே! அதுபோல் அஜ்ஞானியான என் உள்ளத்திருளையும் அது போக்கும். ஆனுல் ஒளி பரவும்படி உள்ளத்தைத் திறந்து வைத்துக்கொள்ள வேண்டும்.

உள்ளத்தைத் திறந்து வைத்துக் கொள்ளத் தெரியாத ஜடன் ஒருவனே. அறிவின்மையும் மந்தப் போக்கும் நல்வழி யாதென்றறியக் கூட இயலாத சோம்பேறியாக்கி விட்டது. எளிதில் கிடைப்பது அனைத்தும் ஸுகம் என்ற ஆசையில் உழைக்க விரும்பாதவனுனுன். அவனுக்கு உள்ளுணர்வைத் தூண்டுகிற பூந்தாதுவாலான தேன் போன்றது அந்தக் கால்தூசி.

அறிவும் உள்ளது. உற்சாகமுமுள்ளது. ஆனுல் ஸாதனப்பற்ருக்குறையால் கையாலாகாத ஏழை என்ன செய்வான் ? அந்த பற்ருக்குறையால் வெளிப்படுகிற ஏழ்மையைப் போக்க இந்தக் கால்தூசி ஒரு சிந்தாமணி மாலை. பெருக்கல் முறையால் கூட எண்ணிமாளாத (குணநிகர) சிந்தாமணிகளால் ஆன மாலை. நினைத்தது உடன் நிறைவேறும்படி ஸாதனங்கள் பெருகும். காரியம் நிறைவுறும்.

முன் வினைப் பயனுக. அவ்வினைச் சுமை தீரும் வரை பிறப்பும் இறப்பும் எனத் தொடர்ந்து சூழ்ந்து நிற்கிற பிறவிக் கடலில் மூழ்கி மூச்சைவிட ஒரு தடவை கூட கடல் பரப்பின் மீது எம்பிவர இயலாத எனக்கு என்ன கதி ? உலகைப் படைக்க முற்பட்டதும் பூமி அனைத்தின் ஆதாரமாக நிற்கத்தக்க கனத்துடன் உருவானது. பூமியாக இறுகுவதற்கு முன் காரணேதகம் என்ற மூலப் பொருளான நீரில் மிதந்தது. இறுகியதும் நீர்த்தடம் விலகி பூமி நீரில் மூழ்கியது. பிரும்மா பரபரப்புற்ருர். விஷ்ணுவின் தாரணசக்தி ஆதிவராஹஉருவெடுத்துத் தன் தெற்றிப்பற்களால் பூமியைத் தாங்கி நிற்கிறது. இன்றும் தெய்வவழிபாடுள்ளவர், ஆதிவராஹாய நம: என இந்த ஆதாரசக்தியை வணங்குவர். மறுபடி ஒருசமயம் இரண்யாக்ஷன் என்ற அஸுரன் தவவலிமையால் பரந்த பூமியைப் பாய்ப் போல சுருட்டி ஆழ்கடலில் அமிழ்த்தி நின்ருன். அப்போதும் அவனை அகற்றி இந்த வராஹரே பூமியைத் தூக்கி வெளிக் கொணர்ந்தார். அந்த காரணோதகக் கடலைவிட என்

பிறவிக்கடல் சிறியதே. வராஹர் பூமியையே தூக்கினர் எனில் என்னைத் தூக்குவது மிக எளிது. அந்தத் தெற்றிப்பல் தூக்குவதும் உன் திருவடித் தூசியின் வலிவால் தானே! அறியாமை, அறியாமையால் ஏற்பட்ட செயல் மந்தம், செயல் மந்தத்தால் ஏற்பட்ட ஏழ்மை இவற்றை அகற்ற உன் கால் தூசியைப் பூசிக் கொள்கிற வாய்ப்பை பிரும்மா முதலானோருக்கு அளித்தது போல் எனக்கும் அளிப்பாயா?

உனது மந்திரமான ஸ்ரீ வித்யையை மூன்று கூடமாக (குவியலாக)ப் பிரிப்பர். வாக்பவ கூடம், காமராஜ கூடம், சக்தி கூடமென. வாக்பவம் உள்ளறிவைப் பெருக்கும். காமராஜம் விரும்பியதை நிறைவுறச் செய்யும். சக்தி கூடம் ஆற்றலைப் பெருக்கும். உன் பாதத்தூசியே இந்த கூட சக்திகளாகத் துலங்குகிறது.

## த்வதன்ய: பாணிப்ப்யாம்

### சுலோகம் -4

தேவி! எனக்கு நோயிலிருந்து பயம். மரணம் நேருமே என மரணத்திலிருந்து பயம். மறுபிறவி நேருமே என. வாழ்வதிலும் பயம். விரும்பியது கிட்டாதோ என! விரும்பியது கிட்டினும் பயம், கிட்டியது என்னை விட்டு விலகிவிடுமோ என. பயத்திற்குக் காரணங்கள் பல. நொடிக்கொரு பயம். செல்லுமிடமெல்லாம் பயம். விரும்பியதைப் பெறுவதில் எல்லையற்ற நாட்டம். பயமில்லாமல் விரும்பியதை பெற்று வாழ்வதே வாழ்வு எனத் தோன்றுகிறது. இந்நிலை என் சக்திக்கப்பாற்பட்டது. தெய்வ அருள் பெற ஆலயம் சென்றேன். காணப்படுகிற தெய்வங்கள் அனைத்தும் அபயமும் வரமும் (பயமின்மையும் விரும்பியதும்) தருவதாகச் சைகை செய்கின்றன. அதற்கடையாளமாக கைகளில் அபயமுத்திரையும் வரத முத்திரையும் தெரிகிறது. ஆனால் எனக்கு ஏற்பட்ட பயத்தைப் போக்கவும் நான் விரும்பியதைத் தரவும் அவர்களால் இயலுமா என்பது தெரிய வில்லை. ஹிரண்ய கசிபுவும் ராவணனும், மரணமின்மையைக் கோரிக் கடும் தவம் புரிந்தனர். தவத்தின் பலனை அளிக்க வந்த தெய்வமோ ''மரணத்திலிருந்து விடுபட முடியாது, இதனால் மரணம் நேரக் கூடாது எனக் குறிப்பு தந்தால் வரம் தர முடியும்'' என்றது. கோருபவனின் அறிவு அளவுக்குட்பட்டது. அதனால் இருவரும் சாகா வரம் பெற்றும் அவர்களது குறிப்பில் அடங்காத தொன்றால் மரணம் ஏற்பட்டது. வரம் வேண்டுமா? அபயம் வேண்டுமா எனக் கைதூக்குபவர்களிடத்தில் நம்பிக்கை இல்லை. அந்த தெய்வங்களைப் புறக்கணித்து உன்னிடம் சரணடைந்தேன், வரத - அபயத முத்திரை உன்னிடம் காணப் பெறவில்லை. கைகளில் வில்லும், அம்பும் பாசமும் அங்குசமும் வெவ்வேறு நிலைகளை - அருளைக் காட்டி நிற்கிறாய். இங்கு உன்னைத் தவிர வேறு புகலிடமில்லை. குனிந்து உன் திருவடிகளைக் கண்டேன். அந்தத் திருவடிகள் தான் பிரும்மா முதலானோருக்கு விரும்பியதைத் தந்தது. அவர்களுக்கு நேர்ந்த நெருக்கடியிலிருந்து அவர்களைக் காத்தது. அவர்களுக்கு அபயமும் வரமும் அளித்தது. அது உலக நன்மைக்காகவே. வரமும் அபயமும் தர உடல் குனிய. கைகள் பலவாறு இயங்க நேர்கிறது. சரணங்களோ அசையாமல் இருந்த நிலையிலேயே அருள் புரிய முடிகிறது. இதுவும் சிறப்பு தானே. உலகில் நான் ஒருவன். உலகுக்கே புகலிடம் தருபவள் என்பதால் அதனுள் அடங்கிய எனக்கும் நீதான் புகலிடம்.

## ஹரிஸ்த்வாமாராத்ய

ச்லோகம் –5

*விஷ்ணு ருஷியாகி வானில் ஒலிமயமாக இருந்த உன் சிறப்பு மிக்க மந்திரத்தைக் கண்டுபிடித்தவர். (வானில் ஒலிமயமாக வேதங்கள் பரவி நிற்கின்றன. தவத்தால் அவை இருக்குமிடம் தெரிந்து சென்று ஏற்றுப் பூமிக்குக் கொணர்ந்து தக்கவர்க்கு உபதேசித்த வரை ருஷி என்பர்.) அவருக்கு ஒரு நெருக்கடி நேர்ந்தது. அமுதம் கடைந்ததும் விநியோகத்தில் மோதல் நேராமல் தடுக்க விஷ்ணு மோகினியாகி அஸுரர்களையும் தேவர்களையும் தனித்தனியே அமரச் செய்து தேவர்களுக்கு மட்டும் அமுதம் வழங்கினார். இதனை அறிந்த பலரை ஒரே நேரத்தில் மயக்கிய அந்த மோகினி வடிவமேற்ற ஹரியைச் சிவன் காண விரும்பினார். சிவனெதிரே மாயை பயன் பெறாதென விஷ்ணு தேவியை ஆராதித்தார். தேவி அவருள் புகுந்து சிவனை மயக்கினாள். தன்னை அண்டியவரின் அழகையும் சீலத்தையும் பெருக்குபவள் அவள். முப்புரமெரித்த பரமனும் அவரே அழித்த மன்மதனின் வசப்பட்டார். வழிபடுபவர் வேண்டியதை விட அதிகம் தரவல்ல உன் சரணஸேவை தன்மாயை பயன் தராதே என்ற விஷ்ணுவின் பயத்தைப் போக்கியது. (சிவன் காமவசப்பட்டு சாஸ்தாவின் தந்தையானார் என்றும் புராணம் கூறும்.) சிவனையும் காமத்தால் தடுமாறச் செய்வது விஷ்ணு மாயை என்ற புகழும் கிட்டியது. மன்மதனின் உடல் சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து கிளம்பிய தீயால் சாம்பலானது. உன் அருளால் ரதியின் கண்களுக்கு மட்டும் புலனாகி அதனைப் பருகுகிற பாக்கியம் ரதிக்குக் கிட்டியது. அவன் நினைவு கூரத்தக்கவன் (ஸ்மர:) காணத் தக்கவனல்ல. அவன் உன்னை வணங்கிப் பெற்ற ரதிக்கு மட்டும் புலப்படுகிற உடலால் முனிவர்களும் தடம்புரண்டு காமவேட்கைக்கு உட்படும் நிலை வந்தது. காமமோ குரோதமோ உட்புகாதபடி மௌனத்தால் எல்லா உள்ளச்சாளரங்களையும் அடைத்து பிரும்மத்தில் லயித்தவர் முனிவர். அவர்களையும் கலக்கிய பெருமை மன்மதனுக்கு உண்டு.*

*ப்ரணத ஜந ஸௌபாக்யஜநநி, ஈம் என் இருபதங்களாகப் பிரித்து அடி பணிந்தவருக்கு எல்லா ஸௌபாக்யங்களையும் வழங்குபவளே! ஈம் என்ற உன் மந்திரவடிவை விஷ்ணு ஆராதித்தார் என்ற பொருள் கூறுவதுண்டு.*

## தநு:பௌஷ்பம்

ச்லோகம் –6

*மன்மதன் தன் தந்தையான விஷ்ணுவையே பெண்ணாக்கிக் காமவசப்பட்ட மோகினியாக்கிச் சிவனை மயக்குகிறான். விச்வாமித்ரர் போன்ற ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தவமிருந்து மனத்தை அடக்கி, காமத்தை வென்றவர்களையும் காமத்தின் வசத்தில் கொணர்கிறான். எனில் அவன் பெரும் வீரன். எந்த வீரனும் தன் வீரத்தைக் காட்ட வில் அம்பு ரதம் என்றவாறு தன் வலிமையை வெளிப்படுத்தும் ஸாதனங்கள் பெற்றிருப்பான். மன்மதனின் வெற்றிக்கு அவனது ஆயுதம் முதலியவை காரணமல்ல, தேவியின் ஏதோ ஒருவகையில் ஏற்பட்ட பரிவே காரணம். அந்தப் பரிவு ஏற்படக் கடும் தவத்திலிருந்த சிவனது மனத்தை வெளியே கொணர்ந்து மலைமகளாக வந்த தன்னைக்*

காண சிவனது மனம் நெகிழ வேண்டும் என்ற குறிக்கோளுடன் சிவனுக்கு முன் நின்றவன் சிவனால் எரிக்கப்பட்டான் எனத் தன் பொருட்டு உயிரை இழந்தவன் என்ற கரிசனமும் காரணமாகலாம்.

மன்மதன் ஸ்ரீ வித்யா மந்திரங்களில் ஒரு மந்திரத்தின் ருஷி - அதனைக் கண்டுபிடித்தவன். மூன்றக்ஷரங்களாலான மந்திரத்தில் நடுவிலுள்ள பீஜாக்ஷரமே அவனது பெயரில் அமைந்தது. அதனைக் கொண்டு வழிப்பட்டதால் தன் சிறந்த உபாஸகன் என்ற பரிவும் ஏற்பட்டிருக்கலாம். அதனால் அவனைக் கண்ணில் வைத்துப் பாதுகாத்ததால் காமாக்ஷி என்ற பெயரும் கொண்டாள். மன்மதன் ஒரு பெரிய வீரனே! வீரனுக்குப் புல்லும் ஆயுதமாகும் என்பர். பூவரிசையாலான வில். வீரனின் கையின் அழுத்தத்தைத் தாங்க அதனால் முடியாது. அம்பைச் செலுத்த வளைந்து நிமிர முடியாது. அந்தப் பூவிலுள்ள மகரந்தத்தைப் பருக வந்த வண்டுகளின் வரிசையே நாண். வேறு மணத்தை முகர்ந்த ஒரு வண்டு அந்தப் பூமணத்தை நாடி பறந்துவிடக்கூடும். அப்போது நாண் கயிறாக விறைப்புடன் அம்பை எய்யாது. போரில் எதிரிகளின் எண்ணிக்கையை ஒட்டி ஆயிரக்கணக்கான அம்புகள் தேவைப்படலாம். அவனிடமிருப்பதோ ஐந்து பூவாலான அம்புகள்தான். புஷ்பதந்வா - புஷ்பபாண; என்ற அவனுக்குப் பெயராயிற்றே.

துணைக்கு வருகிற வீரன் காலத்தை ஒட்டி வெளிப்படுபவன். அவன் வஸந்த ருதுவில் மட்டும் தலை காட்டுவான். மற்ற நாட்களில் அவனது துணை பெற இயலாது. போர் முனை நோக்கிச் செல்லக் கொண்டுள்ள தேர் மலயமலையிலிருந்து வீசுகிற காற்று. அது அங்கு மட்டுமே உதவும். அது வீசுகிற திக்கு தேரில் செல்கிற வீரனது நோக்கிற்கு மாறுபடலாம். தான் களைத்தால் தன் பிரதிநிதியாகப் போரிட வேறு ஆள் கிடையாது. அவன் ஒருவனே தேரோட்டியும், வீரனும் பக்கத் துணையும். போரிட வேண்டியது எப்போதும் ஒரு நிலையில் இராத ஜகத்துடன். வீரனுக்குத் தோள் வலிவும் உடல் வலிவும் தேவை. கையும் காலும் ஏனைய உறுப்புகளுமற்றவன் அவன் போரிட முடியுமா? இது அனைத்தும் வெற்றிக்கு எதிரி. ஆனாலும் வெல்கிறான். உன் கருணையே அவன் பெற்ற பெரும் வலிவு. உன் அருள் பெற்றவன் வெற்றிக்குத் தகுதி இல்லாதிருந்தாலும் வெல்வான்.

## க்வணத் காஞ்சீ

### சுலோகம் -7

தேவியை வழிபட முதலில் தியானம் செய்வர். தியானம் இருவகை. வெளிப்படையாகக் கண்களால் பார்த்துச் செய்வதும் உள்ளத்தில் உருவகப்படுத்துவதுமான பாஹ்யம் ஆப்யந்தரம் என. உள்ளத்தில் உருவகப்படுத்துவது சிறந்ததெனினும் வெளியில் பொறிகளால் கண்டு உணரப்படுத்தியதை மனம் உருவகப்படுத்தும். ஆதலால் உள்ளத்தில் உருவகப்படுத்த வெளியே கண்ட உருவமும் இடம் பெறும். ஆனால் தியானம் நீடிக்கும் போது வெளியில் கண்டதற்கு மாறாக விசித்திரமான உருவகம் உள்ளத்துத் தியானத்தில் தோன்றலாம். கண்களால் கண்டதையே நீடித்து உற்று நோக்க அந்த உருவம் உள்ளத்தில் பதியும்.

தியானத்தில் தேவி இவ்வாறு காட்சி தருகிறாள். இந்த ஸ்தோத்திரத்தால் துதிக்கப் பெறுபவள் இவளே. காமாக்ஷீ, லலிதா, காமேச்வரீ, திரிபுரஸுந்தரி என்று பல பெயர்

*கொண்டவளாயிலும் இந்த ஸ்துதியில் அந்தப் பெயர்களில் எதுவும் இடம் பெறவில்லை. நேரில் பேசும் போது அவளைப் பெயரிட்டு அழைப்பது உசிதமாகாதென வேறு விளிச்சொற்கள் பயன்படுத்தப் பெறுகின்றன எனலாம்.*

*இடுப்பிலுள்ள ஒட்டியாணம் கலகல என ஒலிக்க, வாலிப யானையின் மத்தகத்தின் இரு மேடுகள் போன்ற ஸ்தனங்கள் அழுத்த முன் சாய்ந்த உடலின் மெலிந்த நடுப்பகுதியுடன், சரத் காலத்து மிகத்தெளிவாகத் தெரிகிற சந்திரனைப் போன்ற முகத்துடன். உள்ளங்கைகளால் வில்லும் அம்புகளும் பாசமும் அங்குசமும் ஏந்தியவளாக அவள் காட்சி தருகிறாள். வலிவுமிக்க ஆண்மையுடன் போர்ச் சாதனங்கள் தானே குவிந்து முன் ஆயத்தமான நிலையிலும் அவற்றைப் புறக்கணித்துவிட்டு தானும் ஆயுதம் ஏந்தாமல் உரத்த குரலுமின்றி மென்மையுடன் சிரித்து முப்புரங்களை எரித்து அழித்தவரின் ஆண்மை என்ற சக்தியே இவள்தான். எத்தகைய ஆண் பிள்ளை, என வியந்து பார்க்க வைக்கிற பேராண்மை அல்லது பேரஹந்தை. அந்த நீ எமது கண்கள் முன்னும் உள்ளத்திலும் காட்சி தருவாய்.*

*(கீழ் இருகைகளில் இடதில் வில், வலதில் அம்புகள், மேல் இருகைகளிலும் இடதில் பாசமும் வலதில் அங்குசமும். இடதில் அங்குசமும் வலதில் பாசமும் என்றும் தியானிப்பதுண்டு.)*

## ஸுதாஸிந்தோர் மத்த்யே

### சுலோகம் -8

*(தியானத்துக்குரிய அம்பாளின் இருக்குமிடத்தை ஆசார்யாள் உருவகப்படுத்துகிறார்.) உலகிற்கு ஆவரணங்கள் போல் லவண - இக்ஷு என்றவாறு கடல்கள் உள்ளன. மரணதர்மிகளான மக்கள் வாழ்கின்ற பூமிக்கு வெளியே பாழ்படாத பகுதியாக அமிருதக்கடல், எவரும் அணுகமுடியாதபடி அதன் நடுவே ரத்னங்களாலான மணித்வீபம், அதனைச் சுற்றி கற்பகவிருக்ஷக்காடு. அதன் நடுவே கதம்ப (கடம்பு) மரக்காடு. தேவி! உனக்குக் கதம்பக் காடு மிகவும் உவப்பானது. ''கதம்பவநவாஸிநீம்!'' அதன் நடுவே உன் மாளிகையான சிந்தாமணி கிருஹம். நினைத்ததை உடன் தருகிற ரத்னங்களால் அமைந்த பவனம். அங்கே கிருஹத்தின் உள்ளே அழகிய மண்டபத்தில் சிவனும் சிவையும் உருவெடுத்த கட்டில். உன் அருளால் பஞ்சகிருத்யம் புரிகிற பிரும்மாவும் விஷ்ணுவும் ஹரனும் ஈசுவரனும் கட்டில் கால்களாக ஸதாசிவன் மேல் பலகையாக, காமேசுவரன் மடியில் வீற்றிருக்கிற உன்னை அதுவே கடைசிப் பிறவியாகும்படி புண்யம் செய்தவர்கள் ஒரு சிலரே வழிபடுவர். பேருணர்வும் பேரானந்தமுமே பேரலையாகிப் பெருகுவதாக உன்னை அவர்கள் காண்பர்.*

*உள்ளத்தில் அம்பாளைத் தியானிக்கும்போது உள்ளத்தின் தஹாராகாசம் எனும் சிறு வெளியில் தேவியை இவ்வாறு காண்கின்றனர். சித்தும் ஆனந்தமும் பேரலையாக நீர்ப்பெருக்காகக் கண்ட அவர்கள் அதனிடையே அமுதக்கடல், கல்பகவனம், கதம்பவனம், சிந்தாமணி கிருஹம் என வரிசையாகச் சூழ் நிலை விரிவதை உணர்கிறார்கள். அதனுள் சிவனும் சக்தியும் மட்டும் தெரிவதை உற்றுநோக்க அவர்களே கட்டிலாகி அதனை பஞ்சப்ரும்ஹமூர்த்திமயமாக நின்று தாங்கி, அதன் நடுவே காமேச்வரனின்*

மடியினில் அமர்ந்த காமேச்வரியாகக் கண்டு மானஸோபசார முறையில் பீட சக்திகள் தொடங்கி 64 உபசாரங்களுடன் நவாவரண முறையில் வழிபடுகின்றனர். அவர்கள் கொடுத்த வைத்த தன்யர்கள். இக்காட்சிகள் அனைத்திற்கும் இடம் தருகிற அவரவரது உள்ளத்து அணுவணுவான தஹராகாசம் என்ற சிறு ஆகாச வெளி பராகாசமாகிறது. வழிபடுகிற ஜீவனும் பராகாசமான பரம்பொருளில் லயித்து விடுகிறுன்''

## மஹீம் மூலாதாரே

சுலோகம் -9

தியானம் மூன்று வகைப்படும் - ஸ்தூலம் ஸூக்ஷ்மம் பரம் என. 7-8 ச்லோகங்களில் ஸ்தூலத்தியானம் விளக்கப்பட்டு முடிவில் சிதானந்தலஹரீம் என பரத்தியானம் கூறப்பட்டது. ஸூக்ஷ்மத்தியானமாகக் குண்டலினீ சக்தியாக 9-10 சுலோகங்கள். குண்டலினீக்கு உத்பத்தி, லயம், ப்ரத்யாவிருத்தி (திரும்பித் தன்னிடத்தை அடைதல்) என மூன்று நிலைகள் உண்டு. குண்டலினீ தன் ஆதாரமாயுள்ள மூலாதாரத்தில் பாம்பு சுருட்டிக் கொண்டுப் பொந்தில் படுத்திருப்பது போல் குலகுண்டம் என்ற குடம் போன்றுள்ள மூலாதாரத்தில் படுத்திருந்தவள் ஸாதகனின் முயற்சியால் எழுந்து மூலாதாரத்தை விட்டுப்படிப்படியாக மேலேறுகிறுள். நடுவிலுள்ள தடை போன்ற 5 தங்குமிடங்களில் தங்காமல், தன் குறிக்கோளான இடமாகிய ஸஹஸ்ராரம் சென்றடைந்து தன்பதியான சிவனுடன் கூடி மகிழ்கிறுள். கருவிலுள்ள குழந்தை போல் மூலாதாரத்தில் சுழன்று கொண்டிருந்தவள். தானே தடைகளை உடைத்துக் கொண்டு வளர்ச்சி பெற்று பஞ்ச பூதங்களாலான உடலும் மனமும் பெற்றவளாகி யுவதியாக (பதியுடன் இணையத்தகுதி பெற்றவளாக) ஸஹஸ்ராரம் என்ற உல்லாஸ வீட்டை அடைவதை உத்பத்தி பூமிகை என்றும் ஸஹஸ்ராரத்தில் சிவனுள் சக்திலயம் பெற்றுப் பூர்ண நிலை அடைவதை லயபூமிகை என்றும் கூறுவர். உத்பத்தி - லய பூமிகைகளை இந்த சுலோகம் விளக்குகிறது.

பரம் பொருளிடமிருந்து ஆகாயம், ஆகாயத்திலிருந்து வாயு, வாயுவிடமிருந்து அக்னி, அக்னியிடமிருந்து ஜலம், ஜலத்திலிருந்து பூமி என்ற வரிசையில் பஞ்சபூதங்களும் உண்டாயின எனவேதம் கூறும். பஞ்சபூத ஸூக்ஷ்மம் மனமாகி பஞ்சபூதங்களின் தலைமை ஏற்றது. இவை தன் தனக்கென ஒவ்வொரு உயிரினத்தின் உடலிலும் இடம் பெற்றன. மனத்திற்கு ஆஜ்ஞை என்ற இடம், ஆகாசம் முதலியவற்றிற்கு வரிசையாக விசுத்தி, அநாஹதம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம் என்று ஐந்து இடங்கள். அவை வெளிப்படுகிற இந்த இடங்களை ஸ்தானம் என்பர். ஸூக்ஷ்மபூத சக்திகளின் இயக்கம் அதிகம் உள்ள இடம் என சக்கிரங்கள் என்பர்.

ஆஜ்ஞா முதலியவற்றின் இடங்கள். நெற்றியின்நடுவில், புருவமத்தி, கழுத்து, இதயம், தொப்புள், தொப்புளுக்கும் குறிக்கும் மத்தி, குறிக்கும் ஆஸன வாய்க்கும் மத்தி என ஆறுகும். குண்டலினீ சக்தி ஸஹஸ்ராரம் வரை சென்று திரும்ப ஒரு குழாய். ஸுஷும்நா நாடி என்பது. இந்த நாடியில் மூலாதாரத்திலிருந்து ஆஜ்ஞா சக்ரம் வரை குண்டலினீ சென்றுவரப் பாதை உண்டு. அதனை குலபதம், குலமார்க்கம் என்பர். தாத்தா,பிள்ளை, பேரன் என்றது மனித வரிசையாக குலம் என்பது போல் படிப்படியாக வரிசையாக மேலேறி இறங்குகிற பாதையானதால் குலபதம் என்பர்.

ஒவ்வொரு சக்ரமும் தாமரைபோல் தளமாக மலர்ந்து நிற்கும். மூலாதாரம் முதல் ஆறு சக்ரங்களுக்கும் முறையே 4-6-10-12-16-2 என்று தளங்கள் உண்டு. மூலாதாரமும் ஸ்வாதிஷ்டானமும் அக்னிகண்டம். மணிபூரகமும் அநாஹதமும் ஸௌரிய கண்டம், விசுத்தியும் ஆஜ்ஞாவும் சந்திர கண்டம். அக்னி கண்டம் ஸ்ருஷ்டியின் ஸ்தானம். ஸௌர்ய கண்டம் ஸ்திதி ஸ்தானம். சந்திர கண்டம் ஸம்ஹாரஸ்தானம்.

குண்டலினீ சக்தி ஸுஷும்நாநாடி வழியே மேலே ஏறி இறங்கும் போது பிடிப்பில்லாததால் திடீரென ஏறாமலும் நழுவாமலும் இருக்க, நாடியில் பாதை குறுகி முடிச்சு விழுந்தது போல் இருப்பதை கிரந்தி என்பர். மூலாதாரத்திற்கும் ஸ்வாதிஷ்டானத்திற்கும் இடையே ஸ்வாதிஷ்டானத்திற்கும். மணிபூரகத்திற்கும் இடையே உள்ள முடிச்சு பிரும்மக்ரந்தியாகும். மணிபூரகத்திற்கும் அநாஹதத்திற்கும் இடையே, அநாஹாததத்திற்கும் விசுத்திக்கும் இடையே உள்ளது விஷ்ணுக்ரந்தியாகும். விசுத்திக்கும் ஆஜ்ஞைக்கும் இடையே ஆஜ்ஞைக்கும் ஸஹஸ்ராரத்திற்கும் இடையே உள்ளது ருத்ரக்ரந்தி, அதனால் ஒரு சக்ரத்திலிருந்து அடுத்தசக்ரத்திற்குச் செல்லும்போது இந்தக் கிரந்தியைப் பிளந்து வழி ஏற்படுத்திக்கொள்வது கிரந்தி பேதமாகும். இதனை சுலோகத்திலுள்ள பித்வா என்ற சொல் குறிப்பிடும். இப்போது சுலோகத்திற்கு வருவோம்.

கிரந்திகளை பிரும்மக்ரந்தி விஷ்ணுக்ரந்தி ருத்ரக்ரந்தி என்ற வரிசைமாற்றி ஸ்வாதிஷ்டானம் வரை ருத்ரக்ரந்தி, அதன் மேல் விஷ்ணுக்ரந்தி, அதன் மேல் பிரும்ம க்ரந்தி என்றும் சிலயோக நூல்கள் கூறும். ஸாதகன் அபான வாயு வைத்தடுத்து நிறுத்திக் குண்டலினீயை எழுப்பி ஸுஷும்நாநாடிக்குள் செலுத்தித் தனித்தனி யோக முறைகளால் ஆறு சக்ரங்களையும் கடந்து மேலே ஏற்றி ஸஹஸ்ரார கமலம் என்ற ஆயிரம் இதழ் தாமரை போன்ற மலர்ந்த ஸ்தானத்திற்கு கொண்டு வருகிறான். சிவன் ஸஹஸ்ராரத்தில் தன் பூர்ண நிலையில் உள்ளார். சக்தி அவருடன் இணைகிறாள். மூலாதாரம் முதலியவற்றின் அதன் அதன் தனிசக்தி ஸஹஸ்ராரம் வந்ததும் பூர்ணமான சிவ சக்தி ஸம்மேளனம் பெற்று சிவத்திடம் லயமடைகிறாள். சிவசக்தி ஸாமரஸ்யம் என்ற நிலையை ஸௌக்ஷ்மத்தியானத்தின் மூலம் நடைபெறுகிற வழிபாடாகச் சொல்வர்.

இந்த ஸ்தானங்களில் உருவகம், இவற்றில் சக்தி சென்று தங்குவதாக தாரணை, சிவசக்தி ஸாமரஸ்யமாகிற ஸமாதி நிலை உணர்வு எனப்பல தத்துவங்கள் தக்க குருவின் வழிகாட்டலாலும் தேவியின் பூர்ண அனுக்கிரகத்தாலும் மட்டும் பெறக்கூடியவை. சொல்லளவில் இந்த விளக்கம் சிறுவனுக்குப் பூமியிலிருந்து ஸௌர்யனைக் காண்பிப்பது போன்ற மாயத்தோற்றம் காண மட்டும் பயன் படும்.

குண்டலினீ சக்கிர அமைப்பையே ஸ்ரீ சக்கிரத்தின் 43 முக்கோணங்களும் வட்டக் கோடுகளும் பூபுரங்களுமாக உருவகப்படுத்துவதுமுண்டு. கடும்முயற்சியாலும் மிகச் சிலரே இவற்றைப் புரிந்து கொள்வர்.

## ஸுதாதாராஸாரை:

சுலோகம் -10

ஸஹஸ்ரார சக்ரத்தில் தேவியின் திருவடிகளிலிருந்து அமுதரஸம் பெருக்கெடுத்து வழிகிறது. ஸஹஸ்ரார கமலம் அழியாத தேயாத ரஸாம்நாயத்தில் உள்ள மஹஸ் - பூரண

சந்திரமண்டலம். சக்தி திரும்பியதும் மழையாகப் பொழிகிற அமுதம் உடலிலுள்ள 72000 நாடிகள் வழியே பாய்ந்து எங்கும் அமுதத்தின் இனிமையைப் பரப்பித் தான் தேங்கி நிற்கிற இடமான மூலாதாரமென்ற குல குண்டத்தில் தேங்குகிறது. அதற்காகவே அது குண்ட வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. மூலப் பொருளான அமுதம் குண்டத்தில் அடங்குவதால் - குண்ட - லி - நீ சக்தியாகிறது. தாமரைத் தண்டில் உள்ள நூல் போல (பிஸ தந்து தநீயஸீ-ல.ஸ.) நீ அங்குள்ளாய்.

தலையிலுள்ளவரை சந்திரனை ஒத்தவள் சிர:ஸ்திதர சந்த்ரநிபா. நெற்றியில் ஆஜ்ஞா சக்ரத்தை அடைந்ததும் மின்னல் கொடி போன்ருகிருள். பாலஸ்த்தா இந்த்ர தனு: ப்ரபா- ஹ்ருதயத்திலுள்ள அநாஹதத்தில் சூரியனைப் போன்ற பேரோளியுள்ளவள். ஹ்ருதயஸ்த்தா ரவிப்ரக்யா - மூலாதாரத்தில் திரிகோணத்தின் நடுவில் சிறுதீபம் போன்று விளங்குகிருள். திரிகோணாந்தரதீபிகா - ஸஹஸ்ராரத்தில் பேரொளியாகத் திகழ்ந்தவள் மூலாதாரம் வந்ததும் தீபிகாவாக சிறு விளக்காக ஒளிர்கிருள். மெள்ளத் தன்னை நீண்ட மெல்லிய தாமரை நூல் போலாக்கிக் கொண்டு பாம்புபோல் மூன்றரை சுற்ருக வளைந்து (அத்தயுஷ்ட வலயம்) பொந்து போன்ற (குஹரிணி) குல குண்டலத்தில் தூங்குகிருள்.

சக்தி விழித்திருந்தால் ஸர் என்று பாம்பு போலச்சீறி எழுந்து ஸஹஸ்ராரம் வரை செல்கிருள். அங்கு சிவனுடன் இணைந்து ஆனந்தம் பெற்றதும் தளர்ந்து நழுவிக்குல குண்ட அறையில் படுத்துத் தூங்குகிருள். வரும் பொழுது சிறிது நேரம் ஆறு கமலங்களும் சக்திக்கு ஓய்விடமாக அமைகின்றன. அதனுல் அமுதத்தின் தாரை அந்தந்த ஸ்தானங்களிலும் பரவுவதால் ரஸ - ஆம்நாயமாக அவை ஒளிர்கின்றன. இங்கு அமுதம் உள்ளது எனத் தன்னை அறிமுகப்படுத்திக்கொள்வதால் அந்த சக்ரங்கள் ரஸாம்நாயங்கள். மேலே ஏறும்போது உடலை நீட்டிய பாம்பு போல் சீறிச் சென்றவள் தளர்ந்து ஆங்காங்கு தங்கி குலகுண்டத்தில் பாம்பு போல் உடலைச் சுருட்டிப் படுத்து ஓய்வெடுக்கிருள்.

குல மார்க்கமாக அமைந்த ஸுஷும் நாவிலுள்ள துவாரம் ஆஜ்ஞா சக்ரம் வரை சென்று ஸஹஸ்ராரம் என்ற அமுதத்தேக்கத்தில் முடிந்து விடுகிறது. ஸஹஸ்ராரத் தேக்கத்தை அகுலம் (குலமல்லாதது) என்பர். மறுபடி குலமார்க்கமான ஸுஷும்னை துவாரம் வழியே கீழிறங்குகிறது.

## சதுர்பி: ஸ்ரீ கண்டை:

### சுலோகம் -11

குண்டலியின் பாதையில் அமைந்த சக்கிரங்களையே ஸ்ரீ சக்ரமாகப் பாவனை செய்வதுண்டு. விஷம் உயிரினத்தைச் சிதைப்பதால் அதனை 'ஸ்ரீ' என்பர். விஷத்தைக் கழுத்தில் கொண்ட சிவன் ஸ்ரீ கண்டர். அவர் நான்கு முக்கோணங்களாக மேல்நோக்கி உள்ளார். சிவனேடு இணைய விரும்புகிற சிவயுவதியான சக்தி ஐந்து முக்கோணங்களாக உள்ளாள். ஸாதகன் வழிபடும் போது சக்தி முக்கோணங்கள் தன்னை நோக்குவதாக ஸ்ரீசக்ரத்தை வைத்துக் கொள்வான். இவை ஒன்பதும் இணைய 9 முக்கோணங்கள் தென்படுகின்றன. இவையே உலகின் மூலகாரணமான பிரக்ருதி, இதனைச் சுற்றி எட்டுதளம், பதினுறு தளம், மூன்று வளையங்கள், மூன்று பிராகாரக் கோடுகள் என தேவியின் மாளிகை அமைகிறது.

*ஸ்ரீசக்ரத்தின் வெளியிலிருந்து உள்ளே செல்லும்போது நான்காவது ஆவரணத்தில் 14, 5வதில் 10, 6வதில் 10, ஏழாவதில் 8, எட்டாவதில் 1, என 43 முக்கோணங்கள். நடுவிலுள்ள பிந்து 44வது. நடுவே பிந்து அதனைச் சுற்றி திரிகோணம், அதனைச் சுற்றி வரிசையாக 8 கோணம், தசாரங்கள் 2 (20 முக்கோணங்கள்) சதுர்தசாரம் (14 முக்கோணங்கள்) என நாற்பத்திமூன்று முக்கோணங்கள் என உள்ளிருந்து வெளியே விரிகிற 44 கோணங்கள். இந்தயந்திர அமைப்பும் தேவியின் ஒரு உருவகமே. இவ்வாறு கோடுகளை வரைந்து சக்கிரமாக அமைக்க ஒரு கணக்கு சாஸ்திரங்களில் காணப்படுகிறது. இதில் தவறு நேர்ந்தால் தேவியின் ஸாந்நித்யம் கிட்டாது என்பர்.*

## த்வதீயம் ஸௌந்தர்யம்

ஸ்லோகம் -12

*ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபவர்ணனையால் உள்ளத்தில் தேவியின் வாஸநாமயமான ரூபம் உருவாகிறது. ஆனால் முழு அழகையும் மனத்தாலும் எட்டிப்பார்க்க இயலவில்லை. மனிதனைவிடத் தேவர்கள் சிறந்த கண்ணோக்கு உள்ளவர்கள். பிரும்மாதியரும் முயன்று காண இயலாது தோற்றனர். அவளைப் போல் அழகியை உவமையால் உணரவும் இயலவில்லை. அவளுக்கு உவமை அவளே. ஸுந்தரிகளான தேவமாதர் தேவியின் ஸௌந்தர்யத்தைக் காண முயன்றனர். ஒரு பெண் மற்றொரு பெண்ணின் அழகை ரசிப்பதைவிட ஆண் நன்கு ரஸிப்பான். பெண்ணிற்கு அழகை வெளிப்படுத்தத்தான் தெரியும். ரசிக்கத் தெரியாது என்பர். ரசிக்கும்போது அஸூயை குறுக்கிட்டுத் தவறான மதிப்பீடு கிடைக்கலாம். தேவியின் வடிவழகு மனத்தால் எட்ட முடியாதது. சிவனைத் தவிர மற்றவருக்கு அவளது முழு நிலையைக் காண்கிற தகுதி இல்லை. தேவமாதர் தேவியின் அழகைப் பருகுகிற அடங்கா ஆர்வத்தால் சிவனாகவே ஆகிவிடக் கடும் தவம் இயற்றினர். அது தவத்தாலும் எளிதில் கிட்டாததாயிற்றே. சிவனாகத் தன்னைப் பாவனைச் செய்து கொண்டு தேவியைக் காண வாய்ப்பை எதிர் பார்த்துள்ளனர்.*

## நரம் வர்ஷீயாம்ஸம்

ஸ்லோகம் -13

*பிரும்மாதியரும் ரம்பை முதலானவரும் காண இயலாத அழகின் பிரதிபலிப்பை அணுவளவு பெற்றவனை மன்மதனாகப் பெண்கள் காண்பர். பெண்களின் விருப்பிற்குச் சிறிதும் தகாத ஆண், எத்தனை வயதானவன் என்று சிந்திக்க அவசியமில்லாத கிழவன். அவன் உருவ அழகை அவனே ரசிக்க மாட்டான். மன்மதக் கேளிக்கும் சிறிதும் வாய்ப்பில்லை. அவன் ஜடன். ஆனால் எதிர்பாராதவாறு அவன் தேவியின் பரிவிற்கு ஆட்பட்டான். பெண்கள் கண்களில் மன்மதனாகக் காணப்பட்டான். தலைமுடி அவிழ்ந்ததையும் இடுப்பாடையும் மேலாடையும் நழுவியுள்ளதையும் உணராமல் வெட்கமின்றி - நாணமின்றி அவனைத் தொடர்ந்து ஒருவளோ இருவளோ அல்ல - நூற்றுக் கணக்கில் யுவதிகள் அவன் பின்னால் ஓடுகின்றனர். அந்தக் கிழவன் மனத்தில் பாவனாதிசயத்தால் திரிபுரஸுந்தரியைக் கண்டான். மனத்தில் பதிந்த அழகின் துளி உடல் முழுவதும், பரவி அழகிகளைக் கவர்பவனானான். இது காமவேட்கையால் அல்ல. அழகின் கவர்ச்சியால். அந்த அழகும் பேரழகின் உள்ளத்துப் பிரதிபலிப்பே.*

## க்ஷிதௌ ஷட்பஞ்சாசத்

### சுலோகம் -14

*மூலாதாரம் முதல் ஆஜ்ஞாசக்கிரம் வரையுள்ள 6 சக்கிரங்களும் பூமி முதலிய ஐந்து பூதங்களுக்கும் மனத்திற்கும் இருப்பிடம். மூலாதாரமும் ஸ்வாதிஷ்டானமும் அக்னி கண்டம் எனும் அக்னியின் ஸ்தானம், அக்னியின் கிரணங்கள் 108. அவற்றில் 56 கிரணங்கள் மூலாதாரத்திலுள்ள பூமியில் பாய்கின்றன. மீதி 52ம் ஸ்வாதிஷ்டானத்திலுள்ள ஜல தத்துவத்தில் பாய்கின்றன. ஸூரியனின் கிரணங்கள் 116. அவற்றில் 62 கிரணங்கள் மணிபூரகத்திலுள்ள அக்னி தத்துவத்தின் மீதும் 54 கிரணங்கள் அநாஹத சக்ரத்திலுள்ள வாயு தத்துவத்தின் மீதும் பாய்கின்றன. சந்திரனின் கிரணங்கள் 136, அவற்றில் 72 கிரணங்கள் விசுத்தியிலுள்ள ஆகாசதத்துவத்தின் மீதும் 64 கிரணங்கள் ஆஜ்ஞையிலுள்ள மனத்தத்துவத்தின் மீதும் பாய்கின்றன. இந்த 360 கிரணங்கள் கொண்ட மூன்று தேஜோ மண்டலத்திற்கும் அப்பால் தேய்ந்து மறையாத நிஷ்கல சந்திர மண்டலம் உள்ளது. ஸஹஸ்ராரம் என்ற அதில் தேவியின் சிவப்பும் வெளுப்பும் கொண்ட இரு சரணங்கள் உள்ளன. சந்திர மண்டலத்திலுள்ள சந்திரன் கலைகள் உள்ளவன். ஸஹஸ்ராரத்திலுள்ளவன் பூர்ணன். இந்த 360 கிரணங்களும் சிவ - சக்தி மயமானவையே. இவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனிப் பெயர் உண்டு. ஆண் பெயரும் பெண் பெயரும் மாறிமாறி வரும். அந்தப் பெயரைச்சொல்லி ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம: என்று பூவைப் போட்டு வணங்குவர்.*

## சரஜ்ஜ்யோத்ஸ்நாசுப்ப்ராம்

### சுலோகம் -15

*ஸமயா சார முறையில் ஸ்ரீ வித்யை ஸ்ரீசக்ரம் இவற்றால் வழிபடுவர். தியானிக்கிற உருவம் க்வணத் காஞ்சீதாமா என்ற சுலோகத்தில் உருவகப்படுத்தப்பட்டுள்ளது. ஸ்ரீவித்யா மந்திரமானது, வாக்ப்பவம், காமகூடம், சக்திகூடம் என்ற மூன்று கூடங்களாக அமைந்துள்ளது. வாக்பவ கூடம் வாக் சக்தியை வெளிப்படுத்துவது. அந்த வாக் சக்தி பெற்று அருள் புரிபவள் ஸரஸ்வதீ - ஸரஸ்வதியையும் வாக்வாதினி, மேதா ஸரஸ்வதி என்று பல வடிவங்களில் வழிபடுபவர். இங்கு அத்தகைய வாக் சக்தி வடிவினளான தேவியின் தியான ஸ்வரூபம் தரப்படுகிறது. சரத் காலத்துத் தெளிந்த வானில் துலங்குகிற சந்திரனுடையது போன்ற தூய வெண்ணொளி கொண்டவள். சிவஸஹோதரியானதாலும் பரா சக்தியின் அருள் வடிவானதாலும் சடை மீது துலங்கும் மகுடத்தில் சந்திரன் துலங்குகிறான். வரமுத்திரை அபயமுத்திரை, ஸ்படிக மணிமாலை, புஸ்தகம் ஏந்திய நான்கு கரங்கள், (ஸ்படிக மணிமாலைக்கு மாறாக ஸ்படிகத்தாலான கடிகா - சிறுகலசம் (கமண்டலு) ஏந்தியவளாகத் தியானிப்பதுமுண்டு.) தேவி! இவ்வடிவினளாக உன்னைத் தியானித்து ஒரு தடவை வணங்கினாலும் அவனது வாயில் இனிய சொற்கள் வெளியாகும் என்கிறார். இனியதிலும் பாகுபாடு உண்டு. தேனும் பாலும் திராக்ஷையும் இனிப்பு வகைதான். ஆனால் சுவைக்கும் போது இனிப்பில் எத்தனை தரங்கள் ? தேனை உவந்து ருசிக்கிற ஒருவருக்குத் திராக்ஷை பிடிக்காது போகலாம். இந்த நிலையையொட்டி அவரவர் இனியதாக ஏற்கும்படி பேச்சு வெளியாகும். வாய்க்கும் செவிக்கும் இனியது மனத்திற்கு*

இனியதாக இராமல் போகலாம். மனம் உவந்து ஏற்பது அறிவிற்கு ஒவ்வாததாகலாம். வாய், செவி, மனம், அறிவு, ஆத்மா என்றனைத்திற்கும் சுவைக்க இனியது தேவியின் அருளால் வெளிவருகிற வாக்கு.

## கவீந்த்ராணாம் சேத:

### சுலோகம் -16

வாக்பவ கூடத்தின் சக்தியான வாக்தேவி மீது காம கூடத்தின் சக்தியலையும் பாய அவள் அருணு ஆகிறாள். காலையில் உதிக்கிற சூர்யனின் செவ்வொளியே அருணனுக ஸூரியனின் முன்தோன்றுகிறது என்பர். அந்தச் செவ்வொளி கொண்ட அருணுதேவி கவியரசர்களின் உள்ளமாகிற தாமரைக் காட்டை மலர வைக்கிறாள். செவ்வொளியால் உயர்ந்த வாக்கில் நல்ல வாலிபம் கொண்ட ஆண் பெண்களுக்கிடையே விரஸமாகாத சிருங்காரத்தின் ஆழ்ந்த அலை வெள்ளம் வெளிப்படுகிறது. நல்லிதயம் படைத்த ரஸிகர்கள் கவியின் அந்த வாக்கால் மன நிறைவு பெறுகின்றனர். தேவியின் அருளால் வெளிப்படுகின்ற வாக்கில் கூச்சத்திற்கு இடம் தருகிற ச்ருங்காரம் வெளிவராது. நல்லோர்கள் அத்தகைய வாக்கையே ரஸிப்பர்.

இந்த அருணா வாக்தேவியின் தியானிப்பதற்கான உருவகம் இவ்வாறு - அருணனின் செவ்வொளி கொண்டவள். பாசம் அங்குசம் வில் அம்பு எனத் தேவியின் தோற்றமும் வரம், அபயம், புஸ்தகம், ஜபமாலை என்ற வாக் தேவியின் தோற்றமும் வெளிப்பட எட்டு கைகள் கொண்டவள், மூன்று கண்கள் உள்ளவள். அமுதக்கடலில் விளையாடுபவள், இனிய சிருங்காரத்தைச் சுவைப்பதில் ஆர்வமுள்ள ஸபையோர்களின் உள்ளத்தைக் கவர்கிற பேச்சு வன்மை அருள்பவள் என. புவனேசுவரியும் ஸரஸ்வதியும் இணைந்த வடிவமென்பர். ஸர்வ சுக்லா ஸரஸ்வதீ என உள்ளமும் பேச்சும் எண்ணமும் வெள்ளையான ஸரஸ்வதியிடம் அன்பும் பரிவும் மனமகிழ்ச்சியும் கூட அவளே அருணாவாகிருள். கவியின் பேச்சில் ஸரஸ்வதிக்கும் தன் அருளைக் கவி நல்ல வகையில் பயன்படுத்துகிருன் என்ற திருப்தி. பேச்சைக் கேட்பவருக்கும் விரஸமாகாத இனிய பேச்சைக் கேட்ட திருப்தி. கவிவடிவில் ஸரஸ்வதியே பேசுகிருள் என்ற மலைப்பு.

## ஸவித்ரீபிர்வாசாம்

### சுலோகம் -17

லலிதா தேவியின் ஆணைகளை வசினீ முதலிய வாக்தேவிகள் ஏற்று நிறைவு செய்பவர்கள். அவ்வாறு லலிதா தேவியின் முதலாணையாக நிறைவுற்றது - ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம். அவர்களே அந்த ஸ்தோத்திரத்தைக் கண்டளித்த ருஷிகளுமாவர். வசினீ, காமேச்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயினீ, ஸர்வேச்வரீ, கௌலினீ, என எண்மர். அவள் மூலமாக வந்த ஆணையைச் செயல்வடிவாக்குபவர். 12 யோகினிகள், வித்யா, ரேசிகா, மோசிகா, அம்ருதா, தீபிகா, ஜ்ஞானா, ஆப்யாயினீ, வ்யாபினீ, மேதா, வ்யோமா, ஸித்தி, லக்ஷ்மீ, என. துவாரபாலிகைகளான கந்தாகர்ஷிணி, ரஸாகர்ஷிணீ, ரூபாகர்ஷிணீ, ஸ்பர்சாகர்ஷிணீ. என இவர்கள் ஸ்ரீ சக்ரத்தில் தசாரங்களில் துவாரங்களிலும் வ்ழிபடப் பெறுகிருர்கள். தேவியைச் சுற்றி நிற்கின்ற இவர்கள்

துண்டிக்கப் பெற்ற சந்திரகாந்தக் கல்லிலிருந்து வெளியாகிற ஒளி நிறமுள்ளவர்கள். அ முதல் க்ஷ வரையுள்ள 50 அக்ஷரங்களே சொல்லுலகின் தாய் ஸ்தானத்தில் இருப்பதால் மாத்ருகைகள் எனப்படும். அ.க.ச.ட.த.ப.ய.ச. என எட்டு வர்க்கங்களாகப் பிரிக்கப் படுகின்றன. அவர்க்கம் अ - अः என்ற 16 உயிர் எழுத்துக்கள். क-ङ, च-ञ, ट-ण, त-न, प-म என ஐந்து வர்க்கங்கள். य-र-ल-वஎன ய வர்க்கம் श ष स ह ल (क्ष) என ஶவர்க்கம். (க்ஷ சேர்த்தால் 51) இந்த எட்டு வர்க்கங்கள் வடிவிலுள்ள மாத்ருகா தேவி வசினீ முதலிய எட்டு சக்திகளாகித் தேவிக்கு பணிவிடை செய்கிருள். ஏழாவது ஆவரணமான எட்டுத்திரி கோணங்களிலும் உள்ள இந்த வசினீ முதலிய வாக் தேவிகளுடன் கூட மூல தேவியான லலிதா தேவியைத் தியானிப்பவர்களின் வாக்கு வன்மை மஹாகாவியம் எனப் புகழத்தக்க சைலியழகுடன் காவியங்கள் இயற்றும். அதில் வாக் தேவியின் முகத் தாமரையின் அழகும் நறுமணமும், தேனின் இனிமையும் கொட்டும்.

வசினீ முதலிய வாக் தேவிகளின் நிறம், ஒளி, ரூபம், சக்தி என்ற பல விதச் சிறப்புகளை சாக்த நூல்களில் காணலாம்.

## தநுச்சாயாபிஸ்தே

### சுலோகம் -18

தேவியின் உடலிலிருந்து வெளியாகிற காந்தி பூமியையும் வானையும் சிவக்கச் செய்கிறது. சிகப்பு மனத்தைக் கவர்வதில் நிகரற்றது. ராகம் எனும் ஆசையும் சிவப்பானதே. அதன் முக்கியப் பணியான கவர்ச்சியும் சிவந்ததே. கவரத்தக்கதும் செந்நிறமாயின் ஒட்டுதல் அதிகம். அழகும் கவர்வதும் கவர்ச்சிக்குரியதுமாகும். உலகைச் செம்மையில் ஆழ்த்திக் கவர்ச்சிப் பொருளாக்கிய தேவியின் வனப்பு ஊர்வசி முதலான அப்ஸரஸுகளைக் கவர்ந்துள்ளது. சிங்கத்திடம் பயந்து மான் மிரண்டு நிற்பது போல இமை துடிக்க மிரட்சியை அபினயம் செய்கிற அப்ஸரஸுகள் சலனம் கொண்டவர்களைக் கவர்ந்து விடுவர். அந்த அப்ஸரஸுகளே அவ்வாறு கவரப்படுவர். செம்மை படிந்த தேவியை அவ்வாறு தியான பாவனையால் காண்பவனிடமும் தேவி என்ற உள்ளத் தடுமாற்றத்தால் அப்ஸரஸுகளும் வசப்படுகிருர்கள். (பாவனையாகச் செய் எனில் செய்வது போன்று நடிப்பாய் என்று வழக்கில் உள்ளது. உண்மையில் தியானித்து தியானித்து அதுவாகவே ஆகிவிடுவது பாவனை. எலுமிச்சைப் பழச்சாற்றில் ஊறிய மிளகும் புளிப்பதுபோல.

## முகம் பிந்தும் க்ருத்வா

### சுலோகம் -19

பஞ்சதசாக்ஷரியின் எழுத்துக்களில் சில சிவாம்சம் பெற்றவை. சில சக்தியம்சம் பெற்றவை. சில சிவசக்தியம்சங்கள் பெற்றவை. அதன் விளக்கம் பின்வருமாறு:

க ஏ ஈ ல ஹ் ரீ ம், ஹ ஸ க ஹ ல ஹ் ரீ ம், ஸகல ஹ்ரீம் என மந்திரம். அதில் க் ல் ஹ் ர் ஸ் என்ற மெய்யெழுத்துப் பகுதி சிவன். அ.எ.ஈ. என்ற உயிர் எழுத்துப் பகுதி சக்தி. ம் என்பது சிவ-சக்திக் கூட்டு.

பஞ்சதசாக்ஷரியின் மொத்த சக்தி 'ஹ்ரீம்' லுள்ள 'ஈம்'ல் அடங்கியுள்ளது. 'ஈம்' ஐக் காமகலா என்பர். அதுவே மந்திரத்தின் மூலம், வேர். அதனால் மூலமந்திரம். தற்போது நாம் எழுதும் 'ஈ' என்ற எழுத்துக்கு ஆதிலிபியில் மூல வடிவம் ஒரு செங்குத்துக் கோட்டின் மேல் அர்த்த சந்திர வடிவமும், கோட்டின் இருபுறமும் இரு பிந்துக்களும், அடியில் ஒரு முக்கோணமும் கொண்டது. 'ம்' என்ற பிந்துவை அதன் தலையிலிட வேண்டும்.

பிந்து - சிறு சுழி. ஒரு பெண்ணின் உருவம் போல் அது அமையும். தலையில் உள்ள பிந்து முகம் போலவும், செங்குத்துக்கோடு உடல் போலவும், அதன் இருபுறமும் உள்ள இரு பிந்துக்கள் இரு ஸ்தனங்கள் போலவும், அடியிலுள்ள முக்கோணம் இடுப்பின் கீழ்ப்பகுதி போலவும் தியானிக்கத் தக்கதாக உள்ளதை உணரலாம். அந்த ஆதிலிபி வடிவத்தை ஒட்டி அதிலிருந்து தோன்றிய பல லிபிகளில் 'ஈ'யின் வடிவங்களை இன்று கல்வெட்டுகளில் காண முடிகிறது.

எழுத்திற்கு ஒலிவடிவம், வரிவடிவம் (லிபி) என இரண்டு வடிவங்கள் உண்டு. ஒலிவடிவம் எக்காலும் மாறாதது. வரிவடிவம் என்றலிபி, காலத்திற்குக் காலம், தேசத்திற்கு தேசம் மாறக் கூடியது. கையெழுத்தாகவும் கல்வெட்டாகவும் எழுத்துக்கள் முன் இருந்தது. அதனால் கைவாகிற்கேற்ப உருமாற்றம் காண்பது இயல்பு. ஸௌந்தர்ய லஹரியை ஆசார்யாள் இயற்றிய போது அது எவ்வாறிருந்தது என்று இன்று ஊஹிக்க இயலாது. பழைய கல்வெட்டுகளிலிருந்து அதனை ஆராய்ந்தவர் ஈ என்ற எழுத்து எவ்வாறு எழுதப்பட்டது என்பதை ஒருவாறு கண்டறிய முடியும்.

ஹ்ரீம் க்லீம் ஸ்ரீம் முதலிய பீஜாக்ஷரங்களில் உள்ள 'ஈம்' ஒரு பெண்ணுருவம் கொண்டுள்ளதையொட்டி இதனைக் காமகலையாகத் தியானம் செய்யும் முறை ஒன்று உண்டு. 'கலாப்யாம் சூடாலங்க்ருதசசிகலாப்யாம்,' என்ற சிவானந்த லஹரியின் முதல் சுலோகத்தின் முகப்பில் இந்த ரஹஸ்யத்தை இந்த சுலோகத்தில் ஆசார்யாள் வெளியிட்டுள்ளார்.

''காமேசனின் பட்டமஹிஷியே! (ஈம் என்ற அக்ஷரத்தில் உள்ள) பிந்துவை முகமாகவும் அதன் கீழ் (இரு பிந்துக்களை) இரு ஸ்தனங்களாகவும், அதன் கீழ் (முக்கோண வடிவை) பெண் வடிவிலுள்ள யோனியாகவும் காமகலாவாகத் தியானம் செய்பவன் பெண்களை மயக்குவது மிக எளிது; மூன்று உலகங்களையும் மயக்குவான்''

காமகலாக்ஷரத்தைப் பெண் வடிவிலும் பெண் வடிவை தேவியின் மூல மந்திரமான காமகலாக்ஷரமாகவும் தியானம் செய்பவன் வசீகரண சக்தி பெறுகிறான் என்பதும் இதன் உட்பொருள். ஸௌந்தர்யலஹரிக்கு உரை எழுதியவர்களுள் ஆநந்தகிரி என்பவர் மந்திர ரஹஸ்யங்கள் நன்கறிந்தவர்.

க்லீம் என்பதன் பகுதி ஈம் என்பது. அதில் ஈம் என்பதை எழுதும்போது மூன்று பிந்துக்களுள்ள வடிவம் ஏற்படும். ஒரு பிந்துமேல், இரு பிந்துக்கள் கீழ். மேலுள்ள பிந்து தேவியின் முகமாகத் தியானம் செய்யத் தக்கது. கீழுள்ள இரு பிந்துக்கள் இரு ஸ்தனங்களாகத் தியானம் செய்யத்தக்கவை. அதன் கீழ் முக்கோண வடிவுள்ளது மறைவிடமாகத் தியானிக்கத் தக்கது. 'ஹ' என்ற எழுத்தின் கீழ்ப்பாதி. (ஹகாரார்த்தம்) யோனி வடிவிலுள்ளது என சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளது. ஹ என்ற எழுத்தின் மேற் பகுதியை அழித்துவிடக் கீழ்பாதி முக்கோண வடிவில் யோநிபோல் இருக்கிறது. இந்த

*காமகலாக்ஷரமே மூல மந்திரம். அதன் வடிவில் இருப்பவள் தேவி. காஞ்சியிலுள்ள ஸ்ரீ காமாக்ஷி அன்னையின் கோயிலில் ஸ்ரீ காமாக்ஷியின் இடது புறத்தில் உள்ள அரூப காமாக்ஷியை இந்தக் (காமகலா) வடிவில் காணலாம்.*

## கிரந்தீமங்கேப்ப்ய:

சுலோகம் -20

*பாவநா யோகத்திற்குப் பெரும் மஹிமை உண்டு. ஒளிவடிவினளான தேவி ஒளிக்கதிர்கள் வழியே அமுதம் பொழிபவளாகத் தியானிக்கப் பெறுகிருள். சந்திர காந்தக்கல் சந்திரனின் ஒளிபட்டதும் பனிபோன்ற நீரைக் கசியச் செய்து சூழ்நிலையைக் குளிரச்செய்யும். தேவியாகிற சந்திரக் காந்தக்கல் அமுத மழையையே பொழிகிறது. அப்படித் தியானித்துப் பாவனைச் செய்பவனருகில் எந்தக் கொடும் தாபமும் விலகும். அமுதக் கதிரால் சூழ் நிலையிலுள்ள விஷத்தன்மையும் குன்றிவிடும். கருடனைக் கண்ட பாம்பு போல் ஓடி மறைந்துவிடும். இவ்வாறுத் தியானிப்பவனின் பார்வைக்கே இந்த சக்தி உண்டாகிறது.*

## தடில்லேகாதந்வீம்

சுலோகம் -21

*காமகலையை ஈம் என்ற அக்ஷரவடிவில் தியானம் விளக்கப் பெற்றது.* மஹாபத்ம வநாந்த ஸ்த்தே காரணா நந்தவிக்ரஹே! ஸர்வபூத ஹிதே மாத: ஏஹி ஏஹி பரமேச்வரி ! எனத் *தேவியை ஆவாஹனம் செய்வர். மஹா பத்மவனம் என்ற ஸஹஸ்ராரகமலத்திலுள்ள தேவி எல்லா ஆனந்தங்களுக்கும் மூலகாரணமான பரா(பேரா)னந்தமானவள். எல்லா உயிரினத்திடமும் தாயன்பு கொண்டவள். அவளை வழிபாட்டை ஏற்கத்தன் அருகே வர வேண்டுவர். மூலாதாரத்திலிருந்து ஸஹஸ்ராரம் வரை உள்ள ஸுஷும்நா மார்க்கத்தில், மூலாதாரம் முதல் விசுத்தி வரை 5, லம்பிகாக்ரம் என்ற உள்நாக்குநுனி, நடுப்புருவம், பிந்து, அர்த்தசந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமநா, உன்மநீ, மஹாபிந்து, ஸஹஸ்ராரம் என 18 ஸ்தானங்கள் உள்ளன. இவற்றில் அமைந்த நீண்ட மெல்லிய துவாரங்களின் ஊடே மின்னல் கொடி போன்ற மெலிய ஒளிரேகையாகச் சக்தி பாய்கிறது. அக்னி ஸூர்யன் சந்திரன் என்ற ஒளிக்கண்டங்கள் வழியே பாய்கிற சக்தி அது. மூலாதாரம் முதலிய ஆறு சக்ரத் தாமரைகள் மீது அமர்ந்துள்ளது. அதனை உணர மனத்தின் மலங்களும் மாயையும் அழித்திருக்க வேண்டும். பற்று, ஆசை, வேட்கை, மனம் விரும்பியதைப் பெறத்திட்பம், பெற்றே தீருவேன் என்ற வெறி, பிறர் பொருளைப் பறித்தல், பிறரைத் துன்புறுத்துவதில் இன்பம் காணல், சிறிதும் பொருந்தி வராதவற்றில் பிடிவாதம், மாயை, அவித்யை, அஹங்காரம் முதலிய மனப்பதிவுகள் வாஸனையாக ஸம்ஸ்காரமாக உள்ளத்தில் படிந்தவை, இவை அகன்ற பின்னரே யோக சக்தியால் இந்த மின்னல்கொடி போன்ற காம கலையை உணர முடியும். யோக முறையால் மூலாதாரத்திலிருந்து ஸஹஸ்ராரம் வரை செல்கிற இதனை மஹான்கள் மட்டுமே உணர்வர். அதன் பயனாக பேரின்பப் பெருக்கைப் பெறுவர்.*

## பவாநித்வம் தாஸே

சுலோகம் -22

பவாநி த்வம் என்ற சொல் பவாநியே ! நீ என்றும், நீயாக ஆவேன் என்றும் பொருள் தரும். பக்தன் தன் உள்ளத்தில் தேவியிடம் பவானியே ! நீ தாஸனுன என்மீது கருணையுடன் உள்ள பார்வையை வீசுவாய் என வேண்ட நினைத்து பவானி த்வம் என்று தொடங்கினுன். பக்தன் அவ்விரு சொற்களையும் பவனின் துணைவியே நீ என்ற பொருள் கொண்டதாக உபயோகித்தான். தேவியின் காதுகளில் நீயாக ஆவேன் எனப் பொருளுள்ளதாக விழுந்தது. உடன் பவானியாகிற நிலையைத் தந்தாள். நீண்ட காலத் தவத்திற்குப் பின் தேவியின் உலகில் இடம் பெற்று (ஸாலோக்யம்) புண்ய பலத்தில் தேவியின் அருகாமையை (ஸாமீப்யத்தை)ப் பெற்று வழிபாட்டின்போது மனம் ஒருமித்துத் தியானத்தில் (வேறொன்றும் புலப்படாதபடி மனம் ஒருமித்து) அவள் உருவ பாவனையால் அவளது வடிவிற்கொப்பான வடிவம் (ஸாரூப்யம்) பெற்று மேலும் முயன்று தான் அவளது உருவத்தைப் பெற்றேம் என்ற தன்லிங்க சரீர அபிமானத்தால் தான் பெற்றதாக எண்ணியதையும் துறந்து அவள் ஒருவளே மீதமாகும்படி - பாலில் கலந்த பால் போல், நீரில் கலந்த நீர் போல் இரண்டறக் கலந்த நிலை ஸாயுஜ்யம். முகுந்தனே பிரும்மாவோ இந்திரனே கூட இன்றளவில் தனித்திருப்பதனை உணர்ந்து அவளது சரணங்களுக்கு மகுட மணிஒளியால் நீராஜனம் செய்து வருகிறார்களே தவிர ஸாயுஜ்யம் பெறவில்லை. அந்த ஸாயுஜ்யத்தை பவானித்வம் எனத்துதிக்கத் தொடங்கியதுமே இவன் பெற்றுவிடுகிறான். முகுந்தன் முதலானோர், ஸாயுஜ்யம் பெற்ற இந்த பக்தனுக்கு நீராஜனம் காட்டத் தொடங்குவர். தாயே! உன் எளிமை வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாததே எனத் துதிக்கிறார். தனக்கும் அந்நிலை கிட்டுமோ என்று ஏங்குவார் போலும்.

தேவி தகுதியிராதவனுக்கு அந்நிலையை எப்படித் தருவாள்? இதே பக்தன் முக்தியைக் கோர வில்லையே! கடாக்ஷம் விழத்தகுதி தருவாய் என்றே கோருகிறான். விரும்பித் தொட்டாலும் விரும்பாமல் தொட்டாலும் நெருப்பு சுடும். கோருபவன் விருப்பத்தை விட தேவியின் பரிவு வலிவானது. பக்தன் மலை மீது ஏறப் படித் தேவை. கருடன் மலை உச்சியிலிருந்து இறங்கப் படி தேவையில்லையே!

## த்வயா ஹ்ருத்வா வாமம்

சுலோகம் -23

சிவனுடன் இணைந்த நிலையில் இடது பாகத்தைப் பெற்று மன நிறைவு பெற்ற தேவி கிரமமாக ஒருபகுதியாக இருப்பதில் திருப்தியடையாமல் சிவனது வலதுபாகத்தையும் தனது ஆக்கிக் கொண்டாள். இதன் விளைவாக சிவ பாகமும் சிவந்தது. சிவனது ஸ்படிக - விபூதி நிறம் மறைந்தது. ஒரு ஸ்தன மிருந்த உடலில் பருத்த இரண்டாவது ஸ்தனமும் வெளிவர உடல் முன்பக்கம் குனிந்தது. சிவனது தனிச்சிறப்பான நெற்றிக் கண்ணும் சந்திரனைக் கிரீடத்தில் தாங்குவதும் பொதுவானது. சிவன் உன்னிடம் தன் தனித் தன்மையைத் தானே வலிய வந்து விரும்பிக் கொடுத்தார் போலும். எனதெனச் சொல்லிக் கொள்ளக் கூடிய நெற்றிக் கண்ணும் சந்திர சூடையும் பொதுவாக இருக்கட்டும் என்று விரும்பினுர் போலும்.

## ஜகத் ஸூதே தாதா

சுலோகம் -24

*பராசக்தி பிரும்மா முதலிய ஐவரைத் தன்னிடமிருந்து உருவாக்கி ஸ்ருஷ்டி முதலியவற்றிற்கான சக்தி அளித்து இயக்குகிறாள். ஸ்ருஷ்டி முதலியவை தொடங்கி முடிவு பெற தேவி தன் புருவத்தின் ஏற்றமும் இறக்கமும் என்ற சைகை மூலம் ஆணை இடுகிறாள். (உந்மேஷ நிமிஷோத்பந்ந விபந்ந புவநாவளி:- ல.ஸ.) படைப்பு தொடங்கி உலகமாகிப் பின் பிரளயத்தில் எல்லாம் மறைந்து ஒடுங்குவதற்கு ஆகும் நேரமும் ஒரு புருவ நெருப்பிற்கான நேரமே. மாபெரும் சக்தியின் எதிரே பல கோடியுகங்களும் நொடிப் பொழுதாகின்றன. உலகத்தைத் தோன்றச்செய்து மறைக்கிற சக்தி புருவ நெரிப்பிற்கு உள்ளது.*

## த்ரயாணும் தேவாநாம்

சுலோகம் -25

*படைத்துக் காத்து மறைக்கிற பராசக்தியின் திருவடிகளை வழிபட தேவியின் அருகே வந்திருந்தவர்களுக்கு ஒரு அதிசயம் காத்திருந்தது. வழிபடவிருக்கிற தேவியின் திருவடிகளில் மும்மூர்த்திகளும் கிரீடம் சுமக்கிற தலை குனிய வணங்கிக் குவிந்த கை தலைமேல் கிரீடத்துடன் சேர, நிற்கின்றனர். தேவியின் சரணங்களிலிட்ட பூ, முதலியவை மும்மூர்த்திகளின் தலைகளிலும் விழ அவர்களுக்கு பூஜை செய்ததாயிற்று. தேவியை வணங்கி வழிபட்டபின். மும்மூர்த்திகளை வழிபடச் செல்ல நினைத்தவர்களுக்கு தேவியின் பூஜையே மும்மூர்த்திகளின் பூஜையாகவும் ஆயிற்று.*

## விரிஞ்சி: பஞ்சத்வம்

சுலோகம் -26

*உலகம் தோன்றி மறைகிற இயல்புள்ளது. உலகத்தைப் படைப்பதே பிரும்மாவின் பணி. பணி முடிந்ததும் தன் சக்தியை ஒடுக்கிக் கொண்டு பராசக்தியிடம் மறைகிறார். உலகம் மறைந்ததும் காப்புப்பணி நின்றது. அப்பணி புரிந்த விஷ்ணு ஓய்வெடுக்கிறார். அழிப்புப் பணிக்கு உதவிய யமன் உலகம் ஒடுங்கியதும் தானும் அழிகிறான். இந்திரன் முதலியவர்களும் கண்மூடிவிட்டனர். ஒடுக்கி மறைக்கிற இந்தப் பேரொடுக்கம் உன் பதியைப் பாதிக்கவில்லை. அவர் வழக்கம்போல் தேவியுடன் விளையாடிக் கொண்டிருக்கிறார். ருத்ரனும் ஈச்வரனும் ஸதாசிவனும் காமேச்வரனில் இணைந்துவிட்டதால் இவர்கள் அழிவிலிருந்து தப்பினர்.*

## ஜபோ ஜல்ப:

சுலோகம் -27

*ஒருவனைத் தன்னை விட மேலானவனாக மதித்துப் பூஜிப்பது ஸபர்யை ஆகும். அதற்குப் பல முறைகள் உண்டு. ஜ்ஞானி தம் உள்ளத்தில் துலங்குகிற ஆத்ம ஜ்யோதிஸாகக்*

கண்டு வழிபடுவான். யோகி ஸஹஸ்ராரகமலத்தில் சிவ சக்தி ஸம்மேளனம் செய்து தியானத்தில் மனம் ஒன்றி நிற்பான். பக்தியோகி உளமுருகிப் பாடித் தெய்வத்தைக் கண்கள் முன் நிறுத்திக் கொள்வான். பாமரன் துதித்து த்யான மூர்த்தியை உருவகப் படுத்தி ஷோடசோபசாரபூஜை, நமஸ்காரம், ப்ரதக்ஷிணம் என்ற முறையில் வழிபடுவான். மந்திர யோகி மந்திராக்ஷரங்களையே தேவியாகக் கண்டு அதில் மனத்தை நிறுத்தி ஜபம் முத்திரைகள் மூலமாக உள்ளமும் உடலும் தெய்வத்திற்கே அடங்கியிருப்பதாகக் காண்பித்து வழிபடுவான். இம்முறைகளனைத்தும் ஒன்றுக்கொன்று கருத்திலும் செயலிலும் வேறுபடுமாயினும் தன் உடல் வாக்கு மனம் என அனைத்தையும் வழிபடுகிற தெய்வத்திடம் அர்ப்பணம் செய்வதொன்றையே குறிக்கோளாகக் கொண்டிருக்கும். ஆனால் மனம் சலிக்காமல் நிலைத்துத் தேவியிடம் ஒன்றிப் போகிற நேரமும் செயலும் மிகமிகக் குறையும். இதனை ஈடு செய்ய அவள் அருளால் அவள் தாள் வணங்கி என்ற திறவுகோல் ஒன்றே ஒன்று உள்ளது. பேசாமல், கைகால்களை அசைக்காமல், நடக்காமல், உண்ணாமல், படுத்திராமல் இருக்கமுடியாது. இந்த சேஷ்டைகளே வழிபாட்டை நிகழ்த்துகின்றன. இந்தச் சேஷ்டைகளின்றி வாழ முடியாத நிலையில் தேவியிடம் இந்த சேஷ்டைகளை வழிபாடாக மாற்றிக் கொள்ளக் கோரலாம். வள வள என்று பேசாமல் இருக்கமுடியாது. சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்வது என் பழக்கம். இதனை ஜபமாக நீ மாற்றி விடுவாய். அல்லது ஜபமாக நினைத்து ஏற்பாய் என்று அவளிடம் நீ வேண்டலாமே. ஜ்ஞானிக்கும் யோகிக்கும் கூட மனம் சலனமடையாது என்ற நியதியில்லை. மனம் ஒன்றி நிற்கவும் தேவியின் அருள் தேவை. அதனால் அனைவருமே இந்தப் பிரார்த்தனையை தேவியிடம் விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

## ஸுதாமப்யாஸ்வாத்ய

ஸுலோகம் -28

அமரநிலை அமுதம் பருகியதால் எற்பட்டது. பிரும்மாவும் இந்திரனும் மற்ற தேவர்களும் மரணம் என்ற மறைவற்றவர் என நினைப்பது தவறு. மனிதனைப் போன்று அற்பாயுளில் மறைவதில்லை. இந்திரன் பிரும்மா முதலியவரின் ஆட்சிக்காலம் வரையுள்ளது. அதன் பிறகு அவர்களும் மறைய வேண்டியது. பிரும்மாவும் பரம் என்ற காலவரை வரை வாழ்பவர்தாம். அமுதம் நித்ய நிலையைத்தரவில்லை. ஆனால் நேரிடையாக உடன் அழிவைத் தருவதில் என்றும் தவறாத கால கூட விஷத்தைப் பருகியவர் நித்யராக வாழ்கிறார். இந்த விதிவிலக்குக்கு ஒரே காரணம் தேவியின் தாடங்கத்தின் பெருமையே. உலகிற்கு ஸௌமங்கல்யம் அருள்கிற தேவி தன் கணவருக்கு நித்ய நிலை தந்து ஸர்வமங்களாவாகத் தானும் வாழ்கிறாள். சிவனுக்கும் நித்ய நிலை அருள்பவள் தேவியே. இங்கு காலமோ மற்றதோ குறுக்கிடாது.

## கிரீடம் வைரிஞ்சம்

ஸுலோகம் -29

சிவனை வாழவைக்கிற சக்தி அவரிடம் பக்தியால் பணிவுடன் நடந்து கொள்கிறாள். ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேச்வரியாக, ஸ்ரீ மஹாராஜ்ஞியாக இருப்பவள் ஆஸ்தான மண்டபத்தில்

*மும்மூர்த்திகளும் தன் சரணங்களில் வீழ்ந்து வணங்குகிற நிலையில் தன்பதி தன்னைக்காண வந்து கொண்டிருக்கிறார் என்ற செய்தி கேட்டதும், அவரை உடன் வரவேற்க, வாயிலை நோக்கி ஓடுபவளை தோழிகள் அருகில் நின்று நடைப்பாதையிலுள்ள நெருக்கடிகளை நினைவூட்டுமளவு அவளிடம் வினயமும் பரபரப்பும் தன்நிலை உணர்வின்மையும் காணப்படுகிறது. தன் பதி என்ற கௌரவத்தைவிட அவரது தனிச்சிறப்பும் தேவியால் வெளிப்படுத்தப் பெறுகிறது. விஷமுண்ட நிலையில் இவளது தாடங்கமே காப்பாற்றிற்று என்று உலகம் நினைத்தாலும் எதனாலும் அழியாதநித்யர் அவர் என்று தேவி உலகிற்குக் காட்டுகிறாள்.*

## ஸ்வதேஹோத்பூதாபி:

சுலோகம் -30

*ஸ்ரீ சக்ரத்தில் வழிபடப் பெறுகிற தேவியையும் அதன் ஆவரண தேவதைகளையும் ஸஹஸ்ராக்ஷரீ மாலா மந்திரமாகப் பாராயணம் செய்வதுண்டு. ஏழு விதமாக அதனை ஜபிப்பர். அத்தனை தேவதைகளேயும் தேவியின் ஒளிக்கதிர்களாகத் தியானிப்பர். லலிதாஸஹஸ்ர நாமஸ்தோத்திரத்தின் தியான சுலோகங்களில் ஒன்று தத்தாத்ரேயர் இயற்றியது. அருணாம் கருணாதரங்கிதாக்ஷீம் த்ருதபாசாங்குசபுஷ்பபாண சாபாம். அணிமாதிபி;- ஆவ்ருதாம் மயூகை: அஹமித்யேவவிபாவயே பவானீம் என்பது அது. தத்தாத்ரேயருக்கும் ஆசார்யாளுக்கும் உள்ள தொடர்பு புகழ் பெற்றது. (முன்னுரை) பூபுரத்தில் உள்ள வெளிக் கோட்டில் உள்ள ஆவரண தேவதைகள் அணிமா முதலானோர் உள்ளே உள்ள மத்தியத்திரிகோணத்தைச் சுற்றியிருப்பவர்கள் நித்யா தேவிகள். இவ்வாறு ஒன்பது ஆவரணங்களிலுள்ள அனைத்து சக்திகளும் தேவியின் ஒளிக்கதிர்களே. இவர்கள் தேவியைச் சுற்றி நின்று வழிபடுகின்றனர். வழிபடுகிற ஸாதகர்களையும் மூல சக்தி வரை படிப்படியாக அழைத்துச் சென்று தேவியைக் காணச் செய்பவர்கள்.*

*தேவி பிரும்ம சக்தியான மஹா நித்யா. ஸாதகன் நீதான் நான் என்று எப்போதும் பாவனை செய்து அவளாகவே ஆகிவிடுகிறான். முக்கண்ணனின் சிறப்பும் அவன் சிறப்பைவிடத் தாழ்ந்ததென்று நினைக்குமளவிற்கு தேவிஸாயுஜ்யம் பெற்றுவிடுகிறான். மஹாப்ரளய காலத்து அக்னி உலகனைத்தையும் பஸ்மமாக்கி ஈசுவரனிடம் உலகைச் சேர்க்கிறது. இனி உலகமாக எதுவுமில்லை என்று ஈச்வரனை நம்பச் செய்கின்ற அக்னி இது. நீதான் நான் என்ற பாவனையிலுள்ள ஸாதகனிடம் அது எந்த பாதிப்பையும் எற்படுத்தாதது மட்டுமல்ல, அக்னி அவனைத் தேவி என்றே வழிபடத் தொடங்கி நீராஜனம் வரை செய்யும். தன்னையே நீராஜன தீபமாக்கி அவனுக்கு அர்ப்பணம் செய்யும்.*

## சதுஷ்ஷஷ்ட்யா தந்த்ரை:

சுலோகம் -31

*தன் நிலை உணர்வின்றி, சஞ்சலமான சித்தப் போக்கையொட்டி ஆசாபாசங்களில் கட்டுப்பட்டவர்கள் பசுக்கள். அவைகளையும் ஒரு கட்டுப்பாட்டிற்குள் அடக்கி மேய்ப்பவர் பசுபதி, பசுக்களாகிய மக்கள் நாடுபவற்றைத் தருகிற வழியைக் காட்டுவதும்*

அவரது பொறுப்பாகிறது. பல ஸித்திகள் ஆரம்பத்தில் இன்பத்தைத் தருவதாகக் காட்டிக் கொண்டாலும் பின்னர் சிக்க வைக்கும். அற்பசுகத்தை நாடுபவர்களின் நிர்பந்தத்தால் 64 தந்திரங்களை இயற்றினார். அவரவர் வினையும் வாஸனையும் ஸம்ஸ்காரமும் பலரை இந்த அற்பஸித்திகளே பேரின்பம் தரவல்லவை என நம்ப வைத்தன. அவர்கள் சிக்கி உண்மை நிலை உணரமுடியாமல் ஏமாந்தனர். தேவி பசுபதியை நல்வழி காட்டும்படி நிர்பந்திக்க, தேவியை அடைய வழிகாட்டுகிற தந்திர சாஸ்திரத்தை பூமியில் தோன்றசெய்தார். வஸிஷ்டர், ஸனகர், சுகர், ஸநந்தனர், ஸனத் குமாரர், என்ற ஐவர் மூலம் தேவீபரமான தந்திரத்தை உலகில் பரவச் செய்தார். வஸிஷ்டாகமம், ஸநகாகமம், சுகாகமம், ஸநந்தநாகமம், ஸநத் குமாராகமம், என்ற அவை சுபாகம பஞ்சகம் என்ற பெயர் பெற்றவை. கருணையால் தன்னைத் தானே தன்னவர்களைக் கொண்டு வெளிப்படுத்திக் கொண்டு, தன்னை வழிபடுகிற உண்மையான உயர்ந்த மார்க்கத்தையும் நல்ல குருவரர்களின் மூலம் காட்டித் தன்னை அடையச் செய்தாள். "தயமான தீர்க்க நயநாம் தேசிக ரூபேண தர்சிதாப்யு தயாம்" என்பார் காளிதாஸர். காதிமதமே தேவியின் ஸ்வதந்திரமான தந்திரம் என்பர். ஸமயசார வழிப்பாட்டை இது குறிக்கும்.

## சிவ: சக்தி: காம:

### சுலோகம் -32

காதி ஸ்ரீ வித்யை என்பர். இதே போன்று ஹாதி வித்யை, ஸாதி வித்யை என்றவாறு பல மந்திரகிரமங்கள் உள்ளன. அவற்றில் க வில் தொடங்குகிற இந்த மந்திரமே ஸமய வழிமுறையைப் பின்பற்றுபவர் ஜபிப்பர். இந்த மந்திரத்தையே தேவியின் உருவகமாகத் தியானிப்பர். கழுத்திற்குமேல் முதல் ஐந்தெழுத்தான வாக்பவ கூடத்தையும் கழுத்திற்குக் கீழ் இடுப்புவரை நடு ஆறு எழுத்துக்களான காமராஜ கூடத்தையும், இடுப்புக்குக் கீழ் மீதி நான்கெழுத்துக்களாலான சக்தி கூடத்தையும் தேவியின் அவயவங்களாகப் பாவனை செய்வர்.

## ஸ்மரம் யோநிம்

### சுலோகம் -33

பஞ்சதசாக்ஷரியைக் கொண்டு ஜபம் ஹோமம் செய்கின்ற முறை உண்டு. அதில் முதலில் ஸ்மர - யோனி - லக்ஷ்மீ பீஜங்களைச் சொல்லிப் பின் பஞ்சதசாக்ஷரியைச் சொல்லி ஜபம் செய்வர். சிந்தாமணிகளைக் கொண்டு கட்டிய ஜபமாலையை இதற்குப் பயன்படுத்துவர். ஜபம் முடிந்ததும் ஜப எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கு ஹோமம் செய்வர். சிவ சக்திகளை அல்லது வாகீச்வர - வாகீச்வரிகளை இணைத்து இந்த மந்திரத்தால் அக்னியில் அவர்களை ஆவாஹனமும் ஷோடசோபசார பூஜையும் செய்து முறைப்படி நறுமணமிக்க பசுவின் நெய்யால் நூற்றுக்கணக்கான ஆஹுதிகளைச் செய்வர். இந்நெய் காமதேனுவின் பாலாலானது. எல்லையற்று இம்மையிலும் மறுமையிலும் பெறத் தக்க போகங்களைப் பெற்று அவற்றை இனிது ரஸித்து அனுபவிப்பர். 15 நித்யா தேவிகளில் தலைவியான மஹாநித்யாவாகத் தேவி வழிபடப் பெறுகிறாள்.

## சரீரம் த்வம் சம்போ:

சுலோகம் -34

ஸமயாசார முறையில் மந்திரவடிவில் தேவியைத் தியானிக்க வழிகாட்டிய ஆசார்யாள் கௌலஸமயா சாரப்படி மற்றொரு விளக்கம் தருவதாக உரையாசிரியர்கள் கருதுகின்றனர். இது வரை பரம்பொருளான சிவத்தை ஆதாரமாகக் கொண்டு அதனுள் இணைபிரியாதிருந்த சக்தி இயங்கியதால் உலகத் தோற்றம் என்ற கருத்து விளக்கப்பட்டது. சிவனுன ஆதாரம் பிரதானமானதா? சக்தி பிரதானமானதா என்று சர்ச்சை தொடர்கிறது.

மூலப்ரகிருதியையே பிரதானம் என்று பெயரிட்டழைப்பர். சக்தியே பிரதானம் - சேஷி. சிவன் சேஷன். சேஷன் மற்றெரு முக்கியப் பொருளின் அங்கம். சேஷீ என்பது அந்த அங்கத்தால் சிறப்புப் பெறுகிற முக்கியப் பொருள். சிவன் சேஷனு சேஷியா? சக்தி சேஷையா சேஷியா! என்ற விசாரம் பயனற்றது. உடல் முக்கியமா, உயிர் முக்கியமா? உயிரின்றி உடல் அழியும். உடலின்றி உயிர் பயனற்றது. தனியே அதனால் இயங்க முடியாது. உயிருக்கு உடல் சேஷம். உடலுக்கு உயிர் சேஷம். சேஷ - சேஷித் தன்மை சக்திக்கும் சிவனுக்கும் பொதுவானதே.

தேவி சிவனது உடலானுள். அது அவள் விரும்பி ஏற்றது. உலகைக் காக்க, உணவூட்டி வளர்க்க அவசியமானது. அதனுல் ஸூரியனையும் சந்திரனையும் தனது இரு ஸ்தனங்களாக்கிக் கொண்டாள். ஸூரியன் உப்பு நீரை நன்னீராக்கி வழங்குகிறான். ஸூர்ய ஒளியின்றி பல உயிர்கள் வாழாது. ஒளிமூலம் சக்தியைத் தருகிறான். சந்திரனுல் தான் பயிர் பச்சிலைகள் விளைகின்றன. ஓஷதீசன் என்றே அவனுக்குப் பெயர்.

மார்பகம் சிசுவின் தேவையைப் பூர்த்தி செய்கிறது. ஆரம்பத்தில் அது அவசியத் தேவை. இதனால் வலிவு பெற்ற உயிரினம் தனக்கு முன் ஸ்தன்யத்தால் வளர்ந்ததைக் கொண்டு உயிர் வாழத் தேர்ச்சிபெறுகிறது. தேவியின் இரு கண்களும் இரு தாடங்கங்களும் இரு ஸ்தனங்களும் ஸூரியசந்திரர்களாக உலகைக் காக்கின்றன.

தேவி ஒன்பது வ்யூஹங்கள் என்ற குவியலை தன்னுள் கொண்டுள்ளாள். வ்யூஹம் என்முல் பொதுவாகப் படைவகுப்பு. குதிரையும் யானையும் தேரும் மனிதனும் இணைந்து போரிட இந்த அமைப்பு, அதே வகுப்பால் தான் உயிரினம் வாழ்கிறது. இந்தக் குவியலில் பங்கு பெறுபவை ஒன்றுக் கொன்று மாறுபட்டவை. செயல் நிறைவிற்காக இணைந்தவை. அவ் வகையில் ஒன்பது வ்யூஹங்கள் மூன்று வகையாக விளக்கப்பட்டுள்ளன.

சிவனை அஷ்டமூர்த்தி என்பர். ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி, ஸூரியன், சந்திரன், வேள்வி புரிபவனுன ஜீவன் என்ற எட்டும் அவனது உடல், அவனது ஆத்மாவுடன் அவரிடம் 9 வ்யூஹங்கள். தேவிக்கு இந்த எட்டின் சக்திகளாக இருப்பதும் அதன் ஜீவனுமென ஒன்பது வ்யூஹங்கள். வியூஹங்களாகப் பிரித்து இணைக்கும் போது சிவன் சக்தி என்ற இரண்டும் ஸமரஸமடைகின்றன. சிவாகாசம், ஆகாச சக்தி என இரண்டும் ஒன்றில்லாமல் மற்றென்றில்லை. சக்தியாகிய சரீரமும் நவாத்மா, சிவனுகிய ஆத்மாவும் நவாத்மா.

கால வ்யூஹம், குலவ்யூஹம், நாமவ்யூஹம், ஜ்ஞான வ்யூஹம், சித்த வ்யூஹம், நாத வ்யூஹம், பிந்து வ்யூஹம், கலாவ்யூஹம், ஜீவ வ்யூஹம் என ஒன்பது. உலகைப் படைக்க

முற்பட்ட மூலப்பிரகிருதியான தேவி இந்த ஒன்பதைத் தொகுத்தாள். இவை ஒன்றோடொன்று இணையாதவை, வேறுபடுபவை, இவற்றை இணைத்து ஒன்றுக்கொன்று உதவும்படி தேவி அமைத்துள்ளாள்.

1. காலவ்யூஹம் - நிமிஷம் நாள் மாதம், ஆண்டு யுகம் என்பவை. 2. குலவ்யூஹம் - நிறங்கள், உருவமைப்பைப் பிரித்துக் காட்டுபவை, கேசம், இரத்தம், பச்சிலை, வெண்ணெய் எனக் காட்ட உதவுபவை. 3. நாமவ்யூஹம் - ஆடு, மாடு, மனிதன், தேவன் என்று இனவாரிப்பிரித்தல். 4. ஜ்ஞானவ்யூஹம் - பார்த்தல், கேட்டல், முகர்தல், நினைத்தல், என்றவாறு. (5) சித்தவ்யூஹம் - மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்றவாறு. (6) நாதவ்யூஹம் - ஆசை, செயல், முயற்சி என்ற செயல் முறைக்கு மூலப்பொருள், பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என சொல்லிற்கு மூலப்பொருள். (7) பிந்துவ்யூஹம் - குண்டலினீ வெளியேறி விரிவடைய ஆதாரமான ஆறு சக்கிரங்களும் அவற்றில் சக்தி இயக்கமும். (8) கலாவ்யூஹம் - 51 அக்ஷரங்களாலான அக்ஷரத் தொகுப்பு. (9) ஜீவவ்யூஹம் - வினையால் தனித்தனியே கட்டப்பட்டுள்ள ஜீவர்கள். இவற்றின் தோற்றுவாயும் சென்றடைந்து ஒடுங்குகிற இடமும் தேவியாதலால் சிவ சரீரமான அவள் நவாத்மா.

ஸத் - சித் - ஆனந்தம் என்று மூன்று இயல்புகளும் இவ்விருவரைப் பிரித்துணர முடியாது செய்கின்றன. ஸமரஸமடைந்த பராசக்தி - பரசிவன் என்ற நிலை. பகமும் பகவானும் (பகமுடையானும்) என்ற நிலையில் தேவியை பகம் என்றும் சிவனைப் பகவான் என்றும் சொல்லலாம். இணைந்துள்ள நிலையில் பகவதீ என்றும் தேவியையே அழைக்கத் தகும். விதைக்கும் முளைக்கும் போல. நிலவிற்கும் சந்திரனுக்கும் போல், சொல்லுக்கும் பொருளுக்கும் போல், சேஷநிலையும் சேஷி நிலையும் (பிரதானமல்லாததும் பிரதானமானதும் என்ற நிலையும்) இருவரிடமும் பொருந்தும்.

பூர்ண நிலையில் இருப்பதாக அதற்கே தெரியாவிட்டால் அது இருந்தும் இல்லாத மாதிரிதான். தன்னையுமறியாத நிலையில் பிரம்மம் இல்லாமல் தன்னை அறிந்திருக்கிற நிலையில் இருப்பதற்குக் காரணமான ஞான சக்தியை அம்பாள் என்றார். அதோடு அப்புறம் ஞான சக்தியே இச்சா - கிரியா சக்திகளோடு ஈச்வரனை ஸம்பந்தப்படுத்தி, காரியமற்றவனைக் காரியம் பண்ணுவிப்பதாகச் சொன்னார். நிர்குணப் பிரம்மத்துக்குத் தன்னையே அறிவதுதான் உயிர் மாதிரி என்கிற அர்த்தத்தில் அங்கே சிவனுக்கு அம்பாள் உயிராக இருப்பதாகச் சொன்னார்.

## மனஸ்த்வம்

### சுலோகம் -35

சிவனின் மனைவி என்பதை சிவயுவதீ என்கிறார். சிவனோடு இணைந்தவள். தக்ஷனின் மகளாகப் பிறந்தவள். அதில் மனநிறைவடையாமல், மறைந்து இமவானின் மகளாகப் பிறந்து இயல்பாகச்சிவ சக்தியாயிருந்தாலும் வெளிப்படையாக சிவனை மணந்து சிவனோடு இணைந்தவள். யுவதீ தருணீ எனத் தாயாகும் பருவத்திலுள்ள பெண்ணைக் குறிப்பிடுவர். தன்னை மணந்தவனுடன் அவனுடையவளாகி இணையும் தன்மையுள்ளவள் யுவதீ. தன்னுள் பதிந்த கணவனின் சுக்லத்தைத் தன் சோணிதத்துடன்

குழைத்து இணைத்துத் தன்னுடையதாக்கிக் கொள்பவளும் யுவதீ. தேவி இரண்டு வகையிலும் சிவயுவதீ. சிவமயமாக விருக்கப்போகிற ஜகத்தைச் சிவாம் சத்தில் தன் பிரகிருதி நிலையையும் இணைத்துச் சிசுவாக உருவாக்கியவள். பின் தனிப் பெயரும் தனிச் செயல் முறையும் காட்டவிருக்கிற உலகின் மூலதத்துவங்களும் மனமும் கருவினுள் அவளாகவே இருந்தவை. அவளது பரிணமமே மனமும் ஐந்து பூதங்களும். பரிணமத்தில் காரணப் பொருளே காரியம் ஆகிறது. தேவி உலகமாக வெளிப்படையாகத் தோன்றுமுன் இடையே மூன்று பரிணாம நிலைகள் உண்டு. அவற்றை விச்வன் தைஜஸன் ப்ராஜ்ஞன் என்பர்.

ஸ்தூல தேகத்திலும் ஸூக்ஷ்ம தேகத்திலும் நான் என்ற எண்ணக் காரணமானவை முன் வினையும் அதன் பயனுக அறிவு தடுமாறி எதனை எப்படி அறிய வேண்டுமோ. அப்படி அறியாதிருக்கிற அஜ்ஞானமும் தான். அதனுல் நித்ய - ஜ்ஞானானந்த ஸ்வரூபத்தை மறந்து நிலையற்று அறியாமையுடன் ஸுகதுக்கக் கலப்பு இயற்கை என ஏற்று வாழ்கிற உலகமாகி, 'தான்' 'தனது' என்பதை உலகளவிற்கு விரித்து ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரங்களைத் தனதாக ஏற்றவன் விசுவன். தேவி மனமும் பஞ்சபூதங்களுமாகி இந்த விசுவ நிலையே தன் சரீரமென (விச்வவபுஷா) ஏற்கிருள்.

அவ்வகையிலேயே தைஜஸன் பிராஜ்ஞன் என்ற நிலைகளையும் தன் நிலையாக ஏற்கிருள். ஸ்தூல சரீரத்தில் 'தான்' 'தனது' என்ற அபிமானம் உள்ளவன் விசுவன். ஸூக்ஷ்ம சரீரத்தில் 'தான் தனது' என்ற அபிமானம் கொண்டவன் தைஜஸன். காரண சரீரத்தில் அபிமானமுள்ளவன் பிராஜ்ஞன். சிதானந்தவடிவினள் சிவயுவதி நிலைக்கு இறங்கியது போல் தானே தன்னை உலகமாக்கிக் கொள்ள உலகமாகப் பரிணாமம் பெற விச்வன் ஆனுள். பாலே தயிராகும் போது பாலின் எந்த அம்சம் தயிராயிற்று? எது மீந்துள்ளது என்ற ஆராய்விற்கு இடமில்லை.

உலகத் தோற்றம் என்பது மாயை. சிதானந்தத் தோற்றம் தான் உண்மை எனக் கண்ட பெரியோர்கள் கிளிஞ்சல் வெள்ளியானதைப் போன்ற இது விவர்தம் என்பர். வழியில் கிளிஞ்சலைக் கண்டவன் வெள்ளி என மதித்து எடுத்தான். கிளிஞ்சலைத் தான் எடுத்தான். வெள்ளி எனக் கண்டான். உண்மைக்கும் காட்சிக்கும் வேறுபாடு இருந்தும் அறியாமையால் காட்சிக்கேற்ப உண்மையை மதிப்பதை மாயை, விவர்த்தம் என்பர். தேவியை உலகமாகக் காண்பதை விவர்தம் என்பர். உணர்வுத்தவறு காரணமாக பொய்யை மெய்யென நம்புவது. அங்கும் வெள்ளி கிளிஞ்சலாகத் தோற்றங்களில் பரிணமமடைந்தது. உண்மையறிவு ஏற்பட்டதும் கிளிஞ்சல் தோற்றத்திலும் கிளிஞ்சலாகவே இருந்தது. இதுவும் பரிணாமத்தின் ஒரு நிலைதான் என்பவரும் உண்டு.

ஆஜ்ஞையில் மனமாக இருப்பவள். விசுத்தியில் ஆகாசமாக அநாஹதத்தில் வாயுவாக மணிபூரகத்தில் (ஸ்வாதிஷ்டானத்தில்) அக்னியாக, ஸ்வாதிஷ்டானத்தில் (மணிபூரகத்தில் ) ஜலமாக, மூலாதாரத்தில் பூமியாக - சக்தியே இந்த ஆறு வடிவில் தோன்றுகிறாள்.

படைப்பதற்கு முன் சிவயுவதியாக இருந்தவளே படைக்கத் தொடங்கியதும் மனமும் பூதங்களுமாகி மறுபடி காக்கும்போது உமா மஹேச்வர்களாகக் காட்சி தருகிருள். ஆமை கால்களும் முகமும் வெளியே தெரிய ஆமையாகக் காட்சி அளிப்பதும் உண்டு. கால்களையும் முகத்தையும் தன்னுள் ஒடுக்கி ஒரு பிண்டமாகக் காட்சியளிப்பதும் உண்டு. தேவியும் விசுவ நிலையும் இத்தகையதே.

## தவாஜ்ஞாசக்ரஸ்தம்

சுலோகம் -36

*ஆஜ்ஞாசக்ரம் முதல் மூலாதாரம் வரையுள்ள ஸ்தானங்களில் விளங்குகிற சிவனது தோற்றம் பற்றியே அதிக வர்ணனையுள்ளது. சக்தியைப் பற்றி அல்ல. சக்தியைப் பற்றி மற்ற 94 ச்லோகங்களில் வர்ணனை உள்ளதே!*

*மூலாதாரம் முதல் ஆஜ்ஞா வரை என்று கீழிருந்து மேலே செல்கிற வரிசையை மாற்றி ஆஜ்ஞா முதல் மூலாதாரம் என்ற வரிசை இங்கு தொடங்குகிறது. மூலாதாரத்திலிருந்து மேலேறுவது தனித்த சக்தி மட்டும். அவ்வாறு ஏறுவதும் சிவனுடன் இணையவே. இணைந்த பின் கீழிறங்குகையில் அமுதம் பொழிபவளாகக் கண்டோம். (ஸுதாதாராஸாரை: ச்லோ 10) இந்த ஆறு சக்கிரங்களிலும் அவள் பரசிவனுடனேயே காட்சித் தருகிறாள். அப்போது பரசிவனுக்கு முதலிடம் தந்து தான் துணைவியாகிறாள்.*

*புருவ நடுவிலுள்ளது இந்த ஆஜ்ஞா சக்ரம். ஆட்சி செய்கிற கேந்திரத்தை சக்ரம் என்று அர்த்த சாஸ்திரம் கூறும். தேவியின் ஆணையால் இயங்குகிற சக்கிரம் இது. எல்லோரது மனங்களின் ஸமஷ்டியான மஹாமனஸ்தத்துவம் விளங்குமிடம். அக்னி கண்டம் ஸூர்ய கண்டம் சந்திரகண்டம் என்ற மூன்றின் எல்லைக்கு அப்பாற்பட்டுள்ளதால் அக்னியும் ஸூர்யனும் சந்திரனும் ஆளுமிடங்களுக்கு அப்பாற்பட்டது. தன் தனிப் பேரொளியின் எதிரே மற்ற ஒளிகள் மங்கிவிடும். அவ்வொளிகளால் காணத்தக்கதெதுவும் இங்கு ¦ » ¨ £ h õx . **(நிராலோகே அலோகே)** ஒளி மட்டும் உள்ளது. ஒளியால் பிரகாசிக்கக்கூடியது எதுவுமில்லை. ஒரு தனிமை - வேறு பொருளில்லாத ஏகாந்தம் அங்கு தெரிகிறது. அங்கு ஆஜ்ஞாசக்ரததின் நடுவே எண்ணற்ற ஸூர்ய சந்திரர்களின் ஒளி கொண்ட பரசிவன் பரசித் சக்தி என்ற தேவி பக்கத்தில் துலங்க காட்சிதருகிறார். அவரை வணங்குகிறேன். அவரைப் பக்தியுடன் ஆராதிப்பவன். (ஸாயுஜ்யமடைந்து) அந்தத் தனிமையில் ஒளிமயமான அந்த புவனத்தில் வசிக்கிறுன். ஆஜ்ஞையில் 64 ஒளிக்கதிர்களில் அவன் கலந்து விடுகிறுன். பக்தி தளும்பி நிற்கிற நிலையில பரமானந்தத்தில் மூழ்கியவன் ஆஜ்ஞையில் பேரோளியான சிவதம்பதிகளைப் பாவனையால் உணர்ந்து தன்னை மறந்து அந்த சிவதம்பதிகளுடன் இரண்டறக் கலந்த பேரானந்த அனுபவம் பெறுகிறுன்.*

## விசுத்தெள தே

சுலோகம் -37

*உலகம் தோன்ற, ஆத்மாவிலிருந்து ஆகாசம், ஆகாசத்திலிருந்து வாயு ("ஆத்மந ஆகாச: ஸம்ப்பூத:- ஆகாசாத் வாயு:) என வேதம் கூறும் ஆகாசத்தின் ஸ்தானம் விசுத்தி எனில் ஆஜ்ஞாசக்ரம் ஆத்மஸ்தானமாகும். மனத்தையும் ஆத்மா எனக்கூறுவதுண்டு. அதனுல் ஆத்மஸ்தானத்திலுள்ள சிவன் ஆகாசத்தை உண்டாக்கினவன். (வ்யோமஜனகன்) துண்டாடப் பெருத முழுஸ்படிகத்தின் தெளிவான ஒளிகொண்டவன். ஆகாசத்தை*

உண்டாக்கியதாலேயே உலகின் தந்தை சிவன், தாய் சிவா. இருவருக்கும் ஒரே பெயர். சிவனது ஸங்கல்பமே அவளது ஸங்கல்பமும். இருவரும் இணைந்ததும் அவர்களிடமிருந்து வெளிப்பட்ட ஒளி சந்திரனின் அமுத கிரண ஒளி போன்று காணப்படுகிறது. சந்திர கண்டத்தின் மூலஸ்தானமான விசுத்தியின் ஒளி சந்திரனின் ஒளிக் கொப்பானது என நாமறிந்த உதாரணத்தின் மூலம் உணரப்பெறுகிறது. சந்திரனின் ஒளி நாம் கண்டறிந்தது. விசுத்தியில் சிவதம்பதியிடமிருந்து வெளியான ஒளியும் அதற்கொப்பானதென நம் பார்வை உணர்கிறது. சகோரபக்ஷி அந்த நிலவை மட்டும் சாப்பிடும். ஸாதகனும் விசுத்தியில் சிவ தம்பதீ தர்சனம் பெற்றதும் அந்த நிலவொளியையே விரும்பி ஏற்று உள்ளத்திருட்டையும் அகற்றிக் கொள்கிறான்.

## ஸமுன்மீலத் ஸம்வித்

### சுலோகம் -38

பொதுவாக ஒலி ஏதோ இரண்டு பொருட்கள் மோதும் போது வெளிப்படுகிறது. இதற்கு மாறாக, அடியே படாமல், மோதாமல், ஒலி வெளியாகுமிடம் இதயப்பகுதியாகும். அதனால் அதனை அநாஹதம் என்பர். இதன் அருகே லப்டப் என்று ஒலியெழுப்புகிற இதயம் உள்ளது. பரா பச்யந்தீ என்ற ஸூக்ஷ்ம நிலையைக் கடந்த ஒலி அநாஹதமாக இனம் தெரியாத 'ஓ' என்று வெளிப்படுகிறது. மலைப்பகுதிகளிலும் கோயில் முதலியவற்றின் பெரும் மதிற்சுவர் அருகிலும் குடியில்லாத வீட்டினுள்ளும், ஒலியெழுப்புகிற உயிரினம் ஒன்றும் தென்படாத போது ஓ என்ற ஒலி கேட்பதாக மிக ஸூக்ஷ்ம ஒலியையும் கேட்கிற காது படைத்தவர் கூறுவர். இது வாயுவின் ஸ்தானம்.

வாயு ஆகாசத்திலிருந்து தோன்றியது. பெரு வெளியில் சலனமில்லாத வானில் PõØÔß A ø \ ÷ Á A ¢u é ü ô © 'ஓ' ஒலியை எழுப்புகிறது. வாயு அசைய ஆகாசம் இடமளிக்கிறது. ஆகாசத்தின் தனி குணமான ஸூக்ஷ்ம சப்தம் காற்றின் அசைவால் வெட்டவெளியில் ஏற்பட்ட உரைதலால் வெளிப்படுகிறது. இந்த ஒலியே பண்பட்டுச் சொல்லாகி எல்லா கல்விமுறைகளுக்கும் உதவுகிறது. ஒருவர் தனியே இருந்தால் பேச்சிருக்காது. அதனால் இருஹம்ஸங்கள் பேசும் ஒலியே பின் 18 வித்யாஸ்தானங்களாக விரிவடைந்திருக்கிறது. சிறந்த ஸனகர் முதலிய யோகீசுவரர்களின் மனமே இந்த ஹம்ஸங்கள் நீந்தி விளையாடுகிற மானஸ ஸரஸாகும்.

ஹம்ஸங்கள் அந்த யோகிமானஸஸரஸிலுள்ள ஸம்வித் என்ற கமலத்திலிருந்து பெருகுகின்ற மகரந்தத்தை மட்டும் பருகிச் சுவைப்பவை. ஸம்வித் என்பது பிரஜ்ஞான நிலையிலுள்ள அறிவு. அது லோகாபி முகமாக ஆகிறது. இங்கே ஹம்ஸங்களான தால் நீரிலிருந்து பாலைப் பிரிப்பதுபோல தோஷங்களின் இடையே உள்ள குணத்தை மட்டும் பிரித்துப் பருகுகின்றன. அவ்விரண்டும் சிவ தம்பதியே. ஹம்ஸர், ஹம்ஸீ என்று பெயர். பரஹம்ஸநாதர், பரஹம்ஸாம்பா என்றும் கூறுவர். ஹம்ஸ தம்பதி கல கல எனப் பேசியதே வேதம் வேதாங்கம் என்ற பல வித்யைகளின் தோற்றுவாயாயிற்று. அநாஹதத்தின் தியானத்தில் அநாஹத ஒலியே சிவசக்தி ரூபமாகி வைகரீ ஒலியாலான 18 வித்யாஸ்தானங்களின் மூல காரணமாயிற்று.

## தவ ஸ்வாதிஷ்டானே

சுலோகம் -39

*யோக சாஸ்திரத்தில் விசுத்திக்கடுத்தது மணி பூரகம் என்ற அக்னி ஸ்த்தானம். சாக்தத்திலும் கௌலத்திலும் அதற்கு ஸ்வாதிஷ்ட்டானம் என்று பெயர். ஸ்வாதிஷ்டானத்தை மணிபூரகம் என்பர். இங்கு சாக்த கௌலப்படி இது ஸ்வாதிஷ்டானம் என்ற அக்னி ஸ்த்தானம். இங்கு அக்னி தத்துவத்தில் யோக முறையில் காணப்படுபவர் ஸம்வர்த்தர் என்ற அக்னி, அவரது சக்தி ஸமயா. பிரளய காலத்தில் உலகை மூல தத்துவ நிலைக்குக் கொணரத் தனித்தனி பொருளாயிருப்பதை ஒரே மூலப்பொருளாக்குவது ஸம்வர்த்த அக்னி. கோபமடைந்த அதன் பார்வையில் பட்ட உலகம் எரிகிறது. ஆனுல் ஸமயா தேவியின் குளிர்ந்தபார்வை, கருணையால் ஈரமாகி நெருப்பால் வாடியவற்றைக் குளிரச் செய்கிறது. மறுபடி படைப்பிற்கு உகந்ததாகச் செய்கிறது. ஸமயா - ஸம நிலைக்குக் கொணர்பவள். ஸம்வர்தேசுவரர் - ஸம்வர்தேச்வரீ என்பதும் உண்டு.*

## தடித்வந்தம் சக்தயா

சுலோகம் -40

*யோக சாஸ்திரத்தில் ஸ்வாதிஷ்டானமே இங்கு மணிபூரகம். இதில் கருமேகமும் மின்னற்கொடியுமாக சிவனும் சிவையும் தியானிக்கப் பெறுகிறுர்கள். அநாஹதத்திலும் ஸ்வாதிஷ்டானத்திலும் ஸூர்யனும் அக்னியும் மூவுலகையும் உஷ்ணப்படுத்தி வாட்ட, நீர்ப்பகுதி இங்கு கருமேகமாக உருவாகிறது. மின்னல் நொடியில் மறையாமல் ஸ்திரமாக மேகத்தின் மீது படிந்துள்ளது. இருளைத் தலைக்காட்டாமல் மின்னலின் துடிப்பாலான ஒளி எதிரியைப்போல விரட்டுகிறது. மணிபூரக ஸ்தானத்திற்கேற்ப பலவகை ரத்நாபரணங்கள் வானவில் போன்று பரவலாகத் தென்படுகின்றன. மூவுலகமும் பிரளய காலத்து அக்னி முதலியவற்ருல் வாடியதை இம்மேகம் மழைபொழிந்து குளிரச் செய்து துலையாமலிருக்கச் செய்கிறது. மேகேசுவரர் - ஸௌதாமினீ (மின்னல்கொடி) என சிவ தம்பதிகளுக்குப் பெயர். ஒரு கலையால் உலகை அழிப்பதும் மற்ருென்றால் வாட்டுவதும் வேருென்ருல் குளிரச் செய்வதும் சிவ - சிவாலீலை. பூமி தத்துவத்தை இருள் சூழ்வதும் மேகம் ஒளிதருகிற ஸூர்ய சந்திரர்களை மறைப்பதும் மின்னல் பளீரென ஒளி தருவதும் இயல்பு. இங்கு ஸாதகன் மணிபூரகத்தில் இருவரையும் வழிபடுவதால், மின்னல் கணநேர ஒளியாகாமல் இடையருது ஒளி தருகிறது.*

## தவாதாரே மூலே

சுலோகம் -41

*பெண் ஆடுகிற நிருத்தம் லாஸ்யம். ஆண் ஆடுவது தாண்டவம். மூலாதாரத்தில் இருவரும் நடனமாடுகிறுர்கள். ஆனந்தபைரவர், ஆனந்த பைரவி என்று பெயர். ஈசனுடன் எல்லா வகைகளிலும் இணைந்து செயல்படுபவளானதால் தேவிக்கு ஸமயா என்றும்*

பெயர். சிவனிடமிருந்து சக்தி தனிப்பட்டு இயங்கத் தொடங்கியதும் தயை மிகுந்து இருவருக்கும் தாய் தந்தையாகிற இச்சை ஏற்பட உலகைப் பெற்று அந்த இச்சையை நிறைவேற்றிக் கொண்டனர். இவர்களுக்கு ஒருவருக்கொருவர் துணை. உலகம் தோன்றி வெளியாகியது. சிவன் உலகின் ஆதாரமாகத் தன்னை ஒன்பது வ்யூஹங்களாகக் கொண்டார். தேவியின் லாஸ்யத்திற்கேற்ப சிவனும் தாண்டவத்தில் ஈடுபட்டார். இருவரது இந்த லீலை உலகமாயிற்று. லீலா க்லுப்தப்ரம்ஹாண்ட மண்டலா. (லஸ).

—★—



பூஜ்யஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்கள்

திருக் கார்த்திகையில் ஏற்றிவைக்கிற தீபம் அதன் வெளிச்சம் படும் இடமெல்லாம் பூச்சி - பொட்டு, மரம் - மட்டை உள்பட எல்லாவற்றிற்கும் ஜனன நிவிருத்தி அளித்து பேரின்பம் அளிக்கும் என்கிறபடி, ஸாக்ஷாத் ஜகன் மாதாவுக்கு ஜகதாசார்யாள் பண்ணும் இந்த தீபாராதனை - அதாவது இந்த ஸ்தோத்திரத்தின் அருளொளி - ஸமஸ்த பிராணிகள் மேலேயும் வீசி அன்பு என்கிற ஸௌந்தர்யம் லோகமெல்லாம் நிறைந்திருக்க வேண்டும்.

**Lasercomposing & Printed at :**
**V.K.N. Enterprises,**
**164, R.H. Road, Mylapore, Chennai-4, 9840217036**